# विदुरनीतिः

# விதுர நீதி

மஹாபாரதம்—உத்யோகபர்வத்தில்
33—40 அத்தியாயங்கள்

சி.வே. ராதாகிருஷ்ண சாஸ்திரி
*உரையாசிரியர்*

வெளியிடுபவர் :

சிமிழி வெங்கடராம சாஸ்திரி டிரஸ்டு
*நிறுவனத்திற்காக*

*சி.வே. ராதாகிருஷ்ண சாஸ்திரி*
22, வீரேசுவரம் அப்ரோச் ரோடு
ஸ்ரீரங்கம், திருச்சிராப்பள்ளி-620006

ஈச்வர-1997

# நூல் அறிமுகம்

திருச்சிராப்பள்ளியில் சின்மயா மிஷனின் சார்பில் ஸ்ரீ S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரி அவர்கள் பகவத்கீதை, கடோபநிஷத், பதஞ்சலியோக சூத்திரம், வித்யாரண்யரின் பஞ்சதசீ, விதுரநீதி முதலிய நூல்களை ஆராய்ந்து சொற்பொழிவாற்றினார். அதில் எடுத்துக் கொண்ட விதுரநீதி எல்லோருக்கும் பயன்படும் வகையில் இருந்தது. மற்ற நூல்களின் அத்வைதக் கோட்பாடுகளைப் படிக்க அதிகாரம் தேவை. வாழ்க்கையில் அதை பயன்படுத்துவதும் மிகவும் கடினம். விதுரநீதி, திருக்குறள் போல் வாழ்க்கையில் எல்லோரும் என்றும் பயன்படுத்த உதவும்.

ஹேமாவின் மாமனார் அசோகா க்ருஷ்ண செட்டியாரும், தகப்பனார் நாகை கங்காதர செட்டியாரும் வாழ்க்கையில் நேர்மையாக நடந்தவர்கள். நான் அவர்கள் இருவருடனும் நெருங்கிப் பழகி இருக்கிறேன். அவர்கள் விதுரநீதியை படித்தார்களோ என்னவோ தெரியாது. வாழ்க்கையை அந்நூல் சொல்லியபடி நடத்திப் பயனுடையதாக ஆக்கிக் கொண்டவர்கள். ஆகையால் அவர்களின் நினைவாக திருமதி ஹேமா குப்புராஜ் அவர்கள் தனது ஷஷ்டியப்த பூர்த்தி சமயத்தில் இந்த நூலை ஸ்ரீ சாஸ்திரியாரைக் கொண்டு உருவாக்கி வெளியிட்டிருக்கிறார்.

அசோகா ஸ்ரீ க்ருஷ்ண செட்டியாரின் மகனும் ஹேமாவின் புருஷனுமான திரு குப்புராஜ் தகப்பனாரின் வாழ்க்கை நெறியைப் பின்பற்றிப் பொது ஜனங்களுக்கு நல்லதையே செய்து கொண்டிருக்கிறார். இரு கல்லூரிகளுக்கு இலட்சக் கணக்கான பணத்தைக் கொடுத்து உதவி தன் தாய் தந்தையர்களின் நினைவுக் கட்டிடங்களை கட்டிக் கொடுத்திருக்கிறார். தன் தந்தையின் வளர்ப்புத் தாயாராகிய ஸ்ரீ சீதாலக்ஷ்மி அம்மாள் தன் ஞாபகார்த்தமாக ஒரு ப்ரசவ ஆஸ்பத்திரி கட்டியுள்ளார். இவரின் குடும்பத்தாரின் தர்ம சிந்தனை மேலும் வளர பகவானை ப்ரார்த்திக்கின்றேன்.

கங்கா, இல்லம், ராம்நகர்,
தில்லை நகர், திருச்சி

G.C. பட்டாபிராம்

# எங்கள் குடும்பம்

பொதுவாக இன்றைய நடுத்தரக் குடும்பங்களின் மூதாதையர் 17,18வது நூற்றாண்டுகளில் இந்தியாவின் எந்த பாகத்தில் இருந்தார்கள் என்று கண்டுபிடிப்பது சிரமம். அந்நாட்களில் அரசாங்கக் கெடுபிடிகளாலும் தொற்று நோய்களாலும், பஞ்சங்களாலும் குடும்பங்கள் சிதறிப் பல இடங்களுக்குப் போயின. பெரிய நிலச்சுவான்தார்களும், அவர்களை சார்ந்த விவசாயிகளும், பண்டித குடும்பங்களும் இடம் பெயரவில்லை. எங்கள் குடும்பம் அந்நாட்களில் ஜோலார்பேட்டை அருகே ஒரு கிராமத்தில் இருந்ததாகக் கூறுவார்கள். அங்கு மலைபடு பொருட்கள் வியாபாரம் செய்து கொண்டிருந்த பொழுது அன்றைய அரசின் சட்டதிட்டங்கள் சரிப்பட்டு வராததனால் சேலத்திற்குக் குடிபெயர்ந்தனர்.

சேலத்தில் அன்றைய காலத்தில் ஏற்படுத்திய 'கன்னிகா பரமேஸ்வரி' கோயில் சப்பரம் - அரிசெட்டியார் சப்பரம் என்ற ஒரு மேடை, முனுக்கூர் மேடை என்றும் கூறப்பட்டு வந்தது. ஸ்ரீ அரி செட்டியார் என்பவர் என் மாமனார் ஸ்ரீ க்ருஷ்ண செட்டியாரின் தகப்பனரான ஸ்ரீ காசிபதி செட்டியாரின் மூத்த சகோதரர் ஆவார். எங்கள் குடும்பம் முனுக்கூர் குடும்பம் என்பதாகும்.

ஸ்ரீ காசிபதி செட்டியார் 1880-இல் கல்லூரியில் படித்து அரசின் துணைப் பதிவாளராக வேலை பார்த்து வந்தார். அவர் மனைவியார் திருமதி அனந்தலட்சுமி அம்மையாரின் தகப்பனார் ஸ்ரீ கிருஷ்ணம்ம செட்டியார், அடுத்த ஆனேகுந்தி சமஸ்தானத்தில் திவானாக இருந்தார். பின் அவர் குடும்பத்தினர் தனித்து வியாபாரம் செய்ய எண்ணி, ராசிபுரத்தில் சிலரும், பெல்லாரியில் சிலரும் குடிபெயர்ந்தனர். அவர்கள் கோல்கொண்டா குடும்பத்தினர்

என கூறப்பட்டனர். ஸ்ரீ அனந்தலட்சுமி அம்மையார் தன் மூன்று குழந்தைகளையும் விட்டுவிட்டுச் சிறுவயதிலேயே காலமாகிவிட்டார்கள். அதனால் அந்த மூன்று குழந்தைகளையும் வளர்க்கும் பொறுப்பு, ஸ்ரீ அனந்தலட்சுமி அம்மையாரின் தங்கையான கோவையிலிருந்த ஊரக்கரை திருமதி சீதாலட்சுமி அம்மையாருக்கு வந்தது. ஸ்ரீ கிருஷ்ண செட்டியாரின் மூத்த சகோதரர் ஸ்ரீ அனந்தபத்மநாப செட்டியார் படித்து பேங்க் ஆப் மெட்ராசில் உத்தியோகம் பெற்று ஈரோட்டில் குடியிருக்கையில் அவரும் நோய்கண்டு இறந்து விட்டார். அவரது மனைவியும் சில நாட்களில் காலமாகிவிட்டார். அவருடைய குழந்தைகளான ஸரஸ்வதி அம்மாள் (5-வயது) திரு. வெங்கட்ராம செட்டியார் (3-வயது) திரு கோவிந்தராஜுலு செட்டியார் (6-மாதம்) ஆகிய மூன்று பேரையும் வளர்க்கும் பொறுப்பும் திருமதி சீதாலட்சுமி அம்மாள் அவர்களுக்கே வந்து சேர்ந்தது. அதன் பின்னும் அவர்களால் வளர்த்து ஆளாக்கப்பட்டவர் எத்தனை பேரோ!

14-வயதான ஸ்ரீ கிருஷ்ண செட்டியாருக்குத் தன் சகோதரியின் கணவரான ஸ்ரீ பட்டாபிராம செட்டியாரிடம் பணிவிடை செய்யும்படியான நிலை ஏற்பட்டது. சகோதரி காலமான பின்னும் ஸ்ரீ பட்டாபிராம செட்டியார் அவரை அன்புடன் ஆதரித்து வந்தார். பின்பு 1930-ஆம் ஆண்டு அசோகா பாக்குத்தூள் கமபெனியை ஆரம்பித்தார். அதன் வளர்ச்சிக்கு உறுதுணையாய் இருந்தவர்களில் நூரணி வெங்கட க்ருஷ்ணய்யர், பம்பாய் கோரே குடும்பத்தினர். மற்றும் அவ்வமயம் பணிபுரிந்துவந்த என். வெங்கடரமணய்யரும் அடங்குவர். அன்று முதல் இன்றுவரை அந்த ஸ்தாபனத்திற்கே தங்களை அர்ப்பணித்துக் கொண்ட திரு. அனந்தபத்மநாப செட்டியாரின் குமாரர்கள்: திரு. வெங்கட்ராம செட்டியாருக்கும், திரு. கோவிந்த ராஜுலு செட்டியார்க்கும் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளோம்.

வயதான காலத்தில் திருமதி. சீதாலட்சுமி அம்மையாருக்கு ஒரு பெண் குழந்தை பிறந்து அவர்களுக்கு சந்திர காந்தம்மாள் என பெயரிட்டு வளர்த்து அவர்களைக் கன்னிவிதவையாகப் பார்க்கும் துர்பாக்கியம் ஏற்பட்டது. அவர்களே குடும்பத்தை

நிர்வகித்து எல்லா குழந்தைகளையும் வளர்த்து, 50 ஆண்டுகாலமாக ஏழைக் குழந்தைகளுக்குப் பால் ஊற்றிக் கொண்டும், பல வகையிலும் தர்ம காரியங்கள் செய்து கொண்டும் இருந்து 1992-ஆம் ஆண்டு இறைவனடி சேர்ந்தார்கள்.

சங்ககிரியில் தண்ணீர்ப் பஞ்சம் ஏற்பட்டதன் காரணத்தால் துர்க்கம் குடும்பத்தாரைச் சார்ந்த ஸ்ரீ சென்ன க்ருஷ்ண செட்டியாரும் அவரது சகோதரரும் செவ்வாய்ப் பேட்டைக்குக் குடியேறினார்கள். ஸ்ரீ சென்ன க்ருஷ்ண செட்டியாரின் பெண்தான் என் மாமியார் ஸ்ரீ நாச்சியாரம்மாள் அவர்கள். அவர்களுக்கு ஐந்து பெண்கள், இருந்தபோதும் என்னிடம் பெண்ணைப்போன்ற பாசமுடன் இருந்து வந்தார்கள். அவர் மிகவும் யதார்த்தவாதியாவார். அவர்கள் 1968-இல் காலமானார்கள். ஸ்ரீ மாமனாரவர்கள் மிக கம்பீரமாகவும் தெய்வீகப் பொலிவுடனும், பரந்த மனத்துடனும், மனம், சொல்,-யாவும் தூய்மையாகவும், வலதுகை செய்வதை இடதுகை அறியாது என்பதற்கேற்பப் பலவித தான தர்மங்கள் செய்து கொண்டும் வாழ்ந்து வந்தார்.

என் தகப்பனாரவர்கள் நாகையில் ஒரு ப்ரபல நகை வியாபாரி. ஸ்ரீ. டீ.பீ. கெங்காதர செட்டியார் ஆவர். அவர் மிக இனிமையான சுபாவமுடையவர். எதையும் ஆழ்ந்து ரசிக்கக் கூடியவர். படிப்பிலும் சங்கீதத்திலும் ஈடுபாடு கொண்டவர். அவருக்கு கோபம் வந்து நாங்கள் பார்த்ததே இல்லை. எனது தாயார் ஸ்ரீ மல்லிகம் அம்மாள் 98 வருடங்கள் வாழ்ந்திருந்து 1994-இல் காலமானார்கள். குடும்ப நிர்வாகத்திற்கு ஒரு எடுத்துக்காட்டாக விளங்கி வந்தார். அவர்கள் தகப்பனார் என் தாத்தா, சிறுமுகையில் பவானியின் குறுக்கே ஒரு நீர் தேக்கத்தை ஏற்படுத்திக் கால்வாய் வெட்டினார். அது இன்றும் அவர் பெயரால் ''ஊர்க்கரை வெங்கட்ராம செட்டியார் கால்வாய்'' என அழைக்கப்பட்டு வருகிறது. எனது சகோதரர் திரு. பாலகுரு செட்டியாரும் தகப்பனார் பெயரில் பல கல்லூரிகளுக்கும், ஆஸ்பத்திரி களுக்கும், கல்யாண மண்டபங்களுக்கும் நன்கொடை அளித்து ஆலவிருக்ஷம் போன்று பல குடும்பங்களைக் காப்பாற்றி



கோவை அசோகா திரு. M. K. கிருஷ்ண செட்டியார், திருமதி K. நாச்சியாரம்மாள்.



திரு. D. B. கங்காதரன் செட்டியார், திருமதி G. மல்லிகம் அம்மாள், நாகை.

வருகிறார். இவை யாவற்றிற்கும் உறுதுணையாக இருக்கும் அவரது மனைவி சத்யவதி அம்மாள் கலெக்டர் பகவந்தன் குப்தாவின் பேத்தியாவார்.

அம்பாள் க்ருபையால் எனது மகன் சிரஞ். எம்.கே. கண்ணன் தேர்வுகளில் முதன்மையாக வந்து இங்கு B.E. Hons. முடித்துக் கொண்டு அமெரிக்காவில் M.S. படித்துவிட்டு ''கடல் கடந்தாயினும் திரவியம் தேடு'' எனும் பழமொழிக் கிணங்க 100% ஏற்றுமதித் தொழிற் சாலை நடத்திவருகிறார். என் மாமனாரவர்கள் ஒரு காந்தீயவாதியாக இருந்து கொண்டு அன்னியச் செலாவணியை மீதி செய்ய வேண்டுமென்று, பூஜையில் கற்பூரம் ஏற்றுவதையும், தீபாவளியில் பட்டாசு விடுவதையும் கூடத் தடை செய்து வந்தார். அவர் இருந்திருந்தால் எவ்வளவோ பெருமை அடைந்திருப்பார். சிரஞ். எம்.கே. கண்ணனின் மனைவி சௌ. மதுமதி 17 வருடங்கள் அமெரிக்காவில் இருந்தும் அங்கேயே படித்தும் B.S. C.P.A. செய்தும் இப்பொழுது என் கொழுந்தனார் சிரஞ் எம்.கே. அனந்தகுமார் அவர்களுக்குத் துணையாக இருந்து அசோகா பாக்குத் தொழிலைக் கவனித்து வருகிறார்.

எனது மகள் சௌ. ராதாபிரசாத், பி.எஸ்.ஸி-யில் ''ஸ்டேட் முதல்'' வாங்கி, உடுமலை திரு. வீ.ஜீ. கோபால் ரத்தின குப்தா - வின் குமாரர் சிரஞ். டாக்டர் வீ.ஜீ. மோகன் ப்ரசாத் (ஜீரண வல்லுனர்) அவரை மணந்து, உடுமலை நகரசபை உறுப்பினராக இருந்து வருகிறார். சிரஞ். டாக்டர் மோகன் பிரசாத் அவர் (ஜீரண வல்லனர்) தொழிலில் அகில இந்திய ரீதியில் முதன்மையானவர்களில் முதன்மையாக இருந்து வருகிறார்.

என் கணவர் உயர் கல்விக்காகக் கல்லூரிகளை ஆரம்பிக்க உறு துணையாக இருந்து கடந்த 30 ஆண்டுகளாக திரு. வாசவி கல்லூரியில் செயற்குழுவில் தலைவராகவும் பின்பு காரியதரிசியாகவும் பணிபுரிந்து வருகிறார். 37-வருடங்களாக ரோட்டரி சங்கத்தில் பணிபுரிந்து வருகிறார். ஸ்ரீ தவத்திரு காஞ்சிப் பெரியார் அவர்களும் ஸ்ரீ தவத்திரு ஜெயேந்திர சரஸ்வதி அவர்களும், இளைய பெரியார் அவர்களும் கர்னூலில்

முகாம் இட்டு இருக்கும் பொழுது 1983-இல் அவர்கள் தாம் பூஜித்து வந்த வெள்ளிப் பாதுகைகளைத் தந்து அருள் பாலித்தார்கள். ஸ்ரீ பாதுகைகள் படம் அட்டையை அலங்கரிக்கின்றது. இவ்வாறு பல அறப்பணிகளும் பல அறநூல் ப்ரசுரங்களும் நடந்து வந்த குடும்பத்தில் புகுந்த நான் உங்கள் ஆசீர்வாதங்களைக் கோருகின்றேன்.

மேலும் 1999-ஆம் வருடத்தில் ''இராவ்சாகிப்'' பட்டம் வாங்கிய என் மாமனார் திரு. கிருஷ்ணசெட்டியாரின் நூற்றாண்டு வருகிறது. அதுசமயம் எனது கணவர், அவர் சகோதரர்கள் சிரஞ். எம்.கே. சந்திரகாந்த் மற்றும் சிரஞ். எம்.கே. அனந்த குமார், மற்றும் சகோதரிகள்-உடன் மற்றும் உற்றார் உறவினருடன் சிறப்பாக அதனை நடத்த ஆண்டவன் அருள் புரிய வேண்டுகிறேன்.

ஸ்ரீமுக. மாலவியா சாலை,
ராம் நகர், கோயம்புத்தூர் — ஹேமா குப்புராஜ்



ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள்
அருளாசியுடன் அளித்த ஸ்ரீ குரு பாதுகை.

# ஓரிரு வார்த்தைகள்

மஹாபாரதத்தின் நடுமணிகளில் ஒன்ருன விதுரநீதியைத் தமிழுரையுடன் வெளியிடத் தேவியின் அருள் முன் வந்துள்ளது. அவளது விளையாட்டில் இவன் ஒரு பகடைக்காய். இது விழுந்து புரள ஒரு அன்பு மிக்க நல்லுள்ளம் தடம் அமைத்துத் தந்துள்ளது. மேலும் இத்தகைய வாய்ப்பு நேருமா? தெரியாது.

மிகச் சிறந்த அறிஞர்களான பெற்றோர், கருணையே வடிவாகிய குருவரர்கள், அன்பும் ஆதரவும் அறிவுத் தூண்டலும் மிக்க சூழ்நிலை, கிடைத்தற்கரிய ஸம்ஸ்க்ருத மொழியிலும் புராண-இதிஹாஸ வேதாந்த - ஆயுர்வேத நூல்களிலும் சற்றே ஆழ்ந்த பரிசயம் என்ற தொரு அரியவாய்ப்புக் குவியல் இப்பிறவியில் விதியால் இவனுக்குக் கிட்டியமூலதனம். இதனை இவன் எவ்வாறு பயன் படுத்திக் கொண்டான் என்பதைக் காலம் விளக்கும். தேவியின் அருள் அவ்வப்போது மலர்ந்து, சிலரை உதவச் செய்து, இவன் அறிந்த அளவிலும், ஸம்ஸ்க்ருதத்திலும் தமிழிலும், ஒன்றன் பின் ஒன்ருக, ஸ்ரீ சங்கர விஜயமகரந்தம், ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம், (தமிழ் உரை) ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம் (தமிழ் உரை) ஸ்ரீ துர்க்கா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம் (தமிழ் உரை) உணவும் பானமும், ஆரோக்கிய வாழ்க்கை முறை, தர்ம சாஸ்திரம் (அந்தணர் பின் பற்றுகிற வாழ்க்கை நெறிகளின் சுருக்கம்) என்ற நூல்களை வெளியிடச் செய்தது. அவ்வரிசையில் இதோ விதுரநீதி இடம் பெறுகிறது.

இவனது அறிவைத் தெளிய வைப்பதில் பெரும் பங்கும் அக்கரையும் கொண்ட பொன்மலை ஸ்ரீ ராமகிருஷ்ண சாரதா ஸமிதியில் இவன் ஆற்றிய விதுரநீதி பற்றிய சொற்றொடரின் சுருக்கமிது. இத்தகைய வாய்ப்புகளை உணர்ந்து நினைக்கிற போதெல்லாம் தேவியின் விளையாட்டில் இதுவும் ஒன்று என்று தோன்றும்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரத்தில் இரு நாமங்கள்- **'பாலா' 'லீலாவிநோதினி'** (965—966) என. சிறுமி, விளையாட்டில் மன உவகை கொள்பவள் என்று பொருள் கொள்ளலாம். விளையாடச் சிறுமியாயிருத்தலும், சிறுமியாயிருக்க - (பேதை உள்ளம் பெற) விளையாட்டும் இன்றியமையாதவை போலும். மற்றொரு நாமம் - **'பஞ்ச க்ருத்ய பாராயணா'** - ஐந்து கடமைகளில் முழுதும் ஈடுபட்டவள். அவளது கடமைகள் ஐந்து - படைத்தல், காத்தல், ஒடுக்குதல், மறைப்பு, அருளுதல் - என. க்ருத்யம்-செய்தே தீர வேண்டிய செயல். லீலா - விளையாட்டு. விரும்பினால், தன் மகிழ்ச்சிக்காக, பிறரை மகிழ்விக்கச் செய்யும் செயல். க்ருத்யமும் லீலையும் செயல்களே எனினும் நோக்கால் வேறுபட்டவை. தேவி கிருத்யத்தை லீலையாகப் புரிவது உண்டு என ஒரு நாமம் கூறுகிறது -**லீலா க்லுப்தப் பிரும்ஹாண்ட மண்டலா (648)** என. விளையாட்டாகக் கோடிக் கணக்கான ப்ரஹ்மாண்டங்களைக் கற்பனை செய்தவள். க்ருத்யம் லீலையாவது இறை சக்திக்கு மட்டுமே இயலும்.

மனித நிலையில் கடமை எனும்போது, கடமைக்காகவே தனக்கு உடல் மனம் சூழ்நிலை முதலியவற்றைப் பெற்றுள்ளதாக உணர்கிறான். அவன் செய்தே தீர வேண்டிய கடமை எனும் செயல்களுக்கே வாழ்க்கையில் முதலிடம். சிலருக்குக் கடமையில் கண்ணிருந்தால் வேறு செயலுக்கே நேரமிராது.

விளையாட்டு என்பது தன் மகிழ்ச்சிக்குத் தன் இச்சையால் அமைகிற செயல். இதனைக் காண்பவரும் மகிழ்ச்சி அடையலாம். வெறுப்பு ஏற்படாமலிருந்தால். நரிக்குக் கொண்டாட்டம் - நண்டிற்குத் திண்டாட்டம் என்று நேராதிருக்கும் வரை. விளையாட்டில் கடமைக்குண்டான கட்டாயம் ஏதுமில்லை. வீசிய பந்தை எட்டிப் பிடிக்கலாம். பிடிக்காமல் விடலாம். மனத்திற்குப் பிடித்தால் ஈடுபாட்டுடன் தொடரலாம். அல்லது நடுவில் எக்கணமும் நிறுத்தியும் விடலாம். விதிமுறையென்று ஒன்றும் கிடையாது. ஆனால் விளையாட்டில் ருசி கூடுவதற்கு, ஈடுபாடு நிலைப்பதற்கு, சில நியமங்களை வகுத்துக் கொள்வதும் உண்டு. தனித்துத் தனக்குத் தானே நடுவராகித் தன்னுடன் விளையாடும் போதும்

நியமங்களைக் காப்பவருண்டு. மற்றவருடன் கூடி விளையாடும்போது, விளையாட்டு வினையாகாதிருக்க, நியமங்கள் வற்புறுத்தப் பெறுவது உண்டு.

இருவர் சீட்டாடுகின்றனர். விளையாடுபவரின் கைக்கு வந்து சீட்டுகளைக் கொண்டுதான் விளையாட முடியும். இவற்றை மாற்றவோ கூட்டாளிகளுடன் கூடிப்பகிர்ந்து கொள்ளவோ இயலாது. ஆனால் (1) நல்ல சீட்டுகள் பெற்றும் ஆடத் தெரியாமல் தோற்கலாம். (2) நன்றாக ஆடி வெற்றி பெறலாம். (3) அனுகூலமல்லாத சீட்டைப் பெற்றிருந்தும் தன் திறமையால் எதிரில் ஆடுபவனைத் திகைக்கச் செய்து வெற்றியைத் தனது பங்காக்கிக் கொள்ளலாம், அல்லது (4) வழியின்றி தோற்கலாம். இந்த நான்கு நிலைகளும் ஆடுபவரின் அறிவையும் திறமையையும் பொறுத்தவை. வாழ்க்கையும் ஒழுங்காக ஆடினால் வெற்றி தருகிற விளையாட்டே. இதற்கு வேறொரு விளக்கம் உண்டு. கைக்கு எட்டிய சீட்டுகள் என்பதை வாழ்க்கையை அமைத்துக் கொடுத்த **விதி** எனக் கொள்வோம். இது மாற்ற இயலாதது. பிறரோடு பண்டமாற்றாகவோ பகிர்ந்தோ குறைக்கவோ கூட்டவோ முடியாது. ஆடுபவனின் திறமையை **மதி** எனக் கொள்வோம். கடமைகள் என்ற நியமங்கள் ஒருபுறம் கட்டுப்படுத்த, இறையருள் துணை கொண்ட மதி, விதியை அநுகூலமாயின் பயன் படுத்திக் கொண்டோ, அநுகூல மல்லாததாயின் பயனற்றுப் போகச் செய்தோ வெல்லலாம். அல்லது விதி, மதியை மழுங்கச் செய்து, கடமைகளையும் மீறச் செய்து, தோற்கடிக்கச் செய்யலாம். இந்நிலையில் **விதி விளையாடுகிறது** என்ற சோர்வு விளையாடுபவரிடம் காணும்.

இறையருளும் இங்கு விளையாடுகிறது. கடமையை விளையாட்டாகப் புரிய வழிகாட்டுகிறது. தோல்வியை — பலவீனத்தை — அநுகூலமில்லாத சூழ்நிலையை அனுகூலமாக்கித் தருகிறது.

मूकं करोति वाचालं पङ्गुं लंघयते गिरिम् ।
यत्कृपा तमहं वन्दे परमानन्दमाधवम् ॥

''பரமானந்தமே வடிவானவனும் லக்ஷ்மியின் மணாளனுமாய்த் திகழ்கின்ற இறைவனின் அருள் ஊமையை வாயாடியாக்கும். முடவனை மலை ஏறித் தாண்டச் செய்யும். அவரை வணங்குகிறேன்''. பரமானந்தமானவர் - லக்ஷ்மியின் கணவர் என்ற பொருள்படுகிற ஒரே சொல் - 'பரமானந்த மாதவம்'' இது ஒரு சேராச் சேர்த்தி. ஆனந்தம் தளும்பாத நிறை குடம், லக்ஷ்மி தளும்பிச் சலிப்பவள். இவ்விரண்டின் சேர்த்தியே நடைபெற வொண்ணாததை நடைபெறச் செய்கிறது. இது விதியின் போக்கை மாற்றுகிறது.

**''கூன் கொண்டு வந்தவன் தான் நிமிர்ந்தோடக் குருடன் கொம்பில்**
**தேன் கொண்டு காட்ட முடவன் அத்தேனை எடுக்க அயல்**
**தான் நின்ற ஊமை எனக் கென்று கேட்கத்தருவன் வரம்**
**வான்நின்ற சோலை வடமலை மேல் நின்ற மாயவனே**

ஊமை பேசுவான். பேச்சின் செல்வன் ஊமையாவான் என்றும் இது மாறும். (மூகம் வாசாலம் கரோதி - வாசாலம் மூகம் கரோதி) எப்போதும் தனது வாதத்திறமையால் அறிஞர்களை வென்ற ஸதாசிவரை அவரது குருநாதர் ஸ்ரீ பரமசிவேந்திர ஸரஸ்வதி அன்பால் கடிந்து 'உன்வாய் அடைக்காதா' என்றதும் மௌனியாகி அவதூதராகி ஸதாசிவ பிரும்மமாகத் திகழ வைத்ததும் அந்த குருவருளின் லீலைதான். வீண் அறிவுவாதத்தால் பயனில்லை. தத்துவத்தை உணர்ந்து அதில் கூடி நிற்பாய் என்று அது அருள்வாக்காகியது. 'அவசநேந ப்ரோவாச - மௌன வ்யாக்க்யா - மௌனம் வ்யாக்யானம்' என்ற ஞானியின் நிலை. விதியை மாற்றிய திருவருளின் லீலை. இறையருள் விதியை அனுகூலமாக்கும். முயற்சியைத் திருவினையாக்கும். முயற்சியால் விதி அனுகூலமாகியதா? திருவருள் அவ்வாறு மாற்றியதா?

விதியால் அமைந்த வாழ்க்கை முறையில் முயற்சிக்கு முக்கிய இடம் உண்டு. மஹாபாரதத்தில் வியாசர் கொடுத்துள்ள விளக்கம் பின் வருமாறு ''விதி என்பது அழிக்க முடியாத சிறு நெருப்புத்துண்டாக மனிதனிடம் ஒட்டிக் கொண்டுள்ளது. சென்ற பிறவிகளில் மனிதனின் முயற்சியும் செயலுமாக இருந்தவற்றின் பின் விளைவே விதி. செய்த செயலின் பின்விளைவைச் செய்தவனே அனுபவிப்பான். அந்த நெருப்புத் துண்டு அநுகூலமான நல்வினையின் விளைவாக

இருக்குமேயாகில் அதனைத் தூண்டித் தக்க எரிபொருள் தந்து பெரிது படுத்தலாம். அதுவே கெட்ட வினையின் விளைவாயின் அதனைத் தூண்டாமலும் தானே அது பெருக விடாமலும் சூழ்நிலையால் அது அடங்கியே இருக்குமாறும் தன் செயல் முறையை அமைத்துக் கொள்வதே விவேகம். தீவினையைத் தூண்டுகிற தீச்செயல்களில் ஈடுபடாமல், அதற்கெதிரான நல்வினை பயக்கின்ற செயல்களில் ஈடுபட அது அடங்கிவிடும். கெட்டவினை பயன்தர முனையும்போது உள்மனம் அதன் வசப்படாமல், உறுதியுடன் நற்செயலில் ஈடுபடும்படி சூழ்நிலை அமைத்து நன்முயற்சி மேற்கொள்ள வேண்டும்.

விதியும் மதியும் பற்றி மஹாபாரதத்தில் பீஷ்மர் தர்மபுத்திரருக்குத் தந்துள்ள மற்றொரு குறிப்பும் கவனத்திற்குரியது. விதிவலியதா மனித முயற்சி வலியதா என்ற கேள்விக்கு வ்யாஸர் விடை தருகிறார்.

"यथा बीजं, विना क्षेत्रं, उप्तं भवति निर्बलम् ।
तथा पुरुषकारेण विना दैवं न सिध्यति ॥
क्षेत्रं पुरुषकारस्तु दैवं बीजमुदाहृतम् ।

மனிதனின் முயற்சி வயலாகும். விதி விதையாகும். வயலின்றி விதை முளைக்க இயலாது. அது போன்று விதியும். (இப்பிறவியில் மனிதன் செய்கிற) முயற்சியால் தான் நிறைவுறுகிறது.

अकृत्वा मानुषं कर्म यो दैवमनुवर्तते ।
वृथा श्राम्यति संप्राप्य पतिं क्लीबमिवाङ्गना ॥

மனிதன் தான் முயற்சி செய்யாமல் விதியைப் பின்பற்றுவானாயின் அவனது உழைப்பு வீணே ஆகும். நபும்ஸகனைக் கணவனாகப் பெற்ற பெண்போல்.

यथाग्निः पवनोद्धूतः सुसूक्ष्मोऽपि महान्भवेत् ।
तथा कर्मसमायुक्तं दैवं साधु विवर्धते ॥

यथा तैलक्षयाद् दीपः प्रह्रासमुपगच्छति ।
तथा कर्मक्षयाद्दैवं प्रह्रासमुपागच्छति ॥

फलं पुरुषकारस्य सदा सन्दृश्य तत्त्वतः ।
अभ्युत्थानेन दैवस्य समारब्धेन कर्मणा ।
विधिना कर्मणा चैव स्वर्गमार्गमवाप्नुयात् ॥

*சிறு நெருப்பும் காற்றால் விசிறப்பட்டுப் பெரிதாகிவிடும். அதுபோல் விதி (இன்றையச்) செயலால் வளர்கிறது. எண்ணெய் குறைந்ததும் விளக்கு அணைவது போல் முயற்சி குறைந்ததும் விதி அணைந்துவிடும். அதனால் விடாமுயற்சியின் பலனை உணர்ந்து விதியை அனுகூலமாக்கச் செயல் தொடங்கி விதியும் முயற்சியும் ஒன்றுக்கொன்று உதவ வாழ்க்கை மேனிலையடைகிறது.'' (சாந்தி அத்.6)*

*முன்வினையாகிய விதி விதை போன்றது. அது முளைத்து வளரச் சூழ்நிலையும் பண்படுத்தப்பட்ட வயலும் தேவை. அந்தச் சூழ்நிலையையும் வயலையும் இன்றைய செயல் தருகிறது. விதியெனும் நெருப்பை இன்றைய செயல் முறை காற்றாகிப் பெருக்கலாம் அல்லது அணைக்கலாம். நல் விதியெனும் எரிகிற தீபத்தில் இன்றைய நற்செயல் என்ற எண்ணெய்யை விட தீபம் நன்கு ஒளிரும். கெட்ட விதி எனும் தீபத்திற்கு மறுபடி கெட்ட செயல் என்ற எண்ணெய்யை ஊற்றாதிருப்பது விவேகம்.*

*இதற்கான அறிவுத் தெளிவை - புலனடக்க முறையை, நன்கு வாழ்ந்து உண்மை கண்ட பெரியோர் உபதேசிக்கின்றனர். விதுர நீதி முதலியவை அத்தகைய உபதேச நூல்கள். இவை நூலளவில் கற்கப்பட்டு வெளியறிவு நிலையில் நின்று விடாமல், செரிக்கப் பெற்றுத் தனதாக்கப் பெற்ற சுய அறிவின் உள்ளுணர்வாக உள்மனத் தூண்டலாகப் பதிந்தால் வாழ்க்கை சிறப்புறும்.*

*புறத்தறிவாலும் வினைப் பயனாகவும் அமைந்த வாஸனை ஸம்ஸ்காரம் என்ற ஆழ்மனப்பாதிப்பிற் குட்பட்ட மனம், தான் தெளிவதற்கு இறையருளை எதிர்பார்க்கிறது. உள் மனத்தை இறைவனிடம் பதித்தவனின் வாழ்க்கையில் விதி விளையாடுவதில்லை. - இறையருள் விளையாடுகிறது.*

'விதி' என்பது இறைவனின் க்ருத்தியத்தினுள் அடங்கும். இறைவனிடம் சரண் புகுந்தவனிடம் தன் கிருத்தியத்தை வலி விழக்கச் செய்து தன் லீலையைப் பெரிதும் காட்டி விதியை மாற்றியோ விதியை அனுகூலமாக்கியோ இறையருள் ஜாலம் காட்டுகிறதென்பதை, மஹாபாரதம், இறைவனின் லீலையில் பங்குபெற்ற பலரின் வாழ்க்கைச் சித்திரமாகக் காட்டுகிறது. இந்த லீலையில் ஒவ்வொருவரும் பெற்றதும் இழந்ததும் பல பல. ஆனால் இது இறைவனின் லீலையின் வெளிப்பாடு என்பதை உணர்ந்தவர் பீஷ்மர் விதுரர் வியாஸர் முதலிய மிகச் சிலரே.

இன்றும் அவ்வாறு இறையுணர்வுடன் அனுகூலமற்ற சூழ்நிலையிலும் தன் நிலை வழுவாமல் வாழ்கின்ற பெரியோர்கள் பலர் இருப்பர் - இருக்கின்றனர். அவர்களிடம் பரவுகிற அருளலை சூழ்நிலையிலும். பரவி அருள்பாலிக்கும் - அருள் பாலிக்கிறது. இதுவே விதுரநீதி காட்டுகிற உண்மை.

தேவியின் திருவருளும் கருணையும் உருக்கொண்ட காஞ்சீ காமகோடி பீடத் ததிபர்களான பெரியோர்கள் இப்பணி நன்கு நிறைவுறப் பூர்ணமான ஆசி வழங்கியுள்ளார்கள். அவர்கள் இவனிடத்தில் காரணமற்ற பரிவு கொண்டவர்கள். சிரம் தாழ்த்தி மனம் நெகிழ வாயடைத்து வணங்குவ தொன்றே இவனாலானது.

இந்நூலை வெளியிட முழுதும் உதவியவர் கோவை அசோகா பாக்குத்தூள் நிறுவனத்தின் அதிபர் ஸ்ரீ M.K. குப்புராஜ் அவர்கள். குருவருளும் தேவியினருளும் நிறையப் பெற்ற அவரது நல்லிதயத்திற்கு நம்மனம் நிறைந்த நன்றி.

22, வீரேசுவரம் அப்ரோச் ரோடு
ஸ்ரீரங்கம்,
திருச்சி-620006 **சி.வே. ராதாகிருஷ்ண சாஸ்திரி**
*11.5.1997*

# பொருளடக்கம்

# நூலைப் பற்றி

*உயிரினங்கள் அனைத்தும் வாழ்கின்றன. வாழ்வதற்குரியவற்றைத் தேடிப் பெறுகின்றன. தேடிப் பெற்றதை அனுபவித்து மகிழ்கின்றன. இதற்கு இடையூறாயிருப்பவைகளை வெறுப்பு, கோபம், கலகம், மற்றும் எதிர்ப்பைக் காட்டி அழிக்க முற்படுகின்றன. மனிதனும் ஓரளவில் இப்படி வாழ்பவன்தான். ஆனால் அவன் பெறுகிற கல்வியும், தாய் தந்தை,குரு, தெய்வம், உற்றார், உறவினர், நண்பர், ஊரார், உலகத்தினர் என்று விரிவடைகிற பல்வேறு நல்லோரின் இணக்கமும் காரணமாக மற்ற உயிரினங்களிடம் காணப்பெறுகிற நடைமுறையிலிருந்து அவனதுநடைமுறையில் மாற்றம் காண்கிறது. இந்த மாற்றம் காரணமாகவே அவன் மற்ற உயிரினங்களைவிட மேலானவனாக மதிக்கப்பெறுகிறான். மாற்றம் காணாத போது, மற்ற பிராணிகளைவிடத் தாழ்ந்தவனாக (சமமாகக் கூட அல்ல) மதிக்கப் பெறுகின்றான்.*

*மனிதன் தான் வாழ்வதற்குரிய சாதனங்களை வாழ்நாள் முழுவதும் நாடுகிறான். இப்படித் தேடப்படுபவையை ''அர்த்தம்'' (புருஷார்த்தம் — மனிதனின் நாட்டத்திற்குரியது) என்பர். அதனைப் பொருட்படுத்தியே வாழ்க்கையின் பல செயல்கள் அமைவதால் ''பொருள்'' என்றும் குறிப்பிடுவர். வாழ்கையின் குறிக்கோள் பொருளைப் பெறுதல் மட்டும் அல்ல. அவற்றைத் தன் இன்பமாக — தனக்கு இன்பம் தரவல்லதாகக் அமைத்துக் கொள்வதும் அவசியமாகிறது. அதுவே நாடுவதற்குரியதாக — விரும்பப்பெறுவதாக அமையும். அதனைக் **காமம்** என்றும் **இன்பம்** என்றும் அழைப்பர். இந்த இருபெரும் குறிக்கோள்களை வைத்தே வாழ்க்கையின் எல்லாச் செயல்களும் அமைகின்றன.*

*உண்மையில் காமத்திற்குச் சாதனமாக இருப்பதாலேயே அர்த்தத்திற்கு முக்கியத்துவம் தரப்படுகிறது என்றும் கருதுவர்.*

*மாந்தர் அனைவரும் அர்த்த-காமங்களை நாடிச் செல்லும்போது. தனது செயல் மற்றவரது செயலுடன் மோதாமல், மற்றவரது செயலால் மிதிடாமல், மற்றவர் தனது நிறைவைக் கண்டு பொறாமைப்படாமலிருக்க, தனக்கெனக் கட்டுப்பாடு, நடைமுறை அமைப்பு, ஒழுங்கு, நேர்மை, கடமை, அடக்கம், என்ற பல இனிய அடக்குமுறைகளுக்கு உட்பட வேண்டிவருகிறது. இது* ***தர்மம்*** *எனப்படும். தன்வரம்பு மீறுதவன் சமுதாயத்தின் வரம்பையும் காக்கிறான். அவனது நடைமுறை மற்றவரைக் காக்கிறது. தன்னையும் தாங்கி சமுதாயத்தையும் தாங்குவதன் மூலம் உலகின் தாங்கும் சக்தியாக இந்த தர்மம் செயல்படுகிறது. இந்த தர்மத்திற்கு முரண்படாத பொருளும் இன்பமுமே தெய்வத்தின் வடிவம்.* **"தர்மாவிருத்த: காமோ அஸ்மி"** *"தர்மத்திற்கு முரண்படாத காமமே நான்தான்" என்கிறார் கண்ணன் பகவத் கீதையில்.*

இதிஹாஸம்

*மனிதனின் நாட்டத்திற்குரியவற்றில் சிறந்த காமத்திற்கு அர்த்தமும் தர்மமும் அரணாகி நிற்கின்றன. அர்த்தத்தின் பயன் தர்மமும் காமமுமே. அர்த்தமும் காமமும் முரண்படாமல் மனித வாழ்வைச் செம்மைப் படுத்த உதவச்செய்வதே தர்மம்தான். அதனால் இனிய வாழ்க்கைக்கு இம் மூன்றும் ஒன்றோடொன்று இணையும் வகையில் இவற்றை நாடுவது அவசியமாகிறது. இந்தக் குறிக்கோளுடன் வாழ்ந்த பல பெரியோர்களின் கதையை* ***'இதிஹாஸம்'*** *என்பர்.*

*இதிஹாஸத்தின் கதாநாயகர்கள் வாழ்ந்து காட்டிய முறையை* ***தர்மசாஸ்த்ரம், அர்த்த சாஸ்த்ரம், காம சாஸ்த்ரம்*** *என்ற மூன்று தொகுப்புகளில் காணலாம். தர்மசாஸ்திரத்தில் அர்த்தத்திற்கும் காமத்திற்கும் இடமுண்டு. அர்த்த சாஸ்த்திரத்திலும், காம சாஸ்த்திரத்திலும் இவ்வாறே மற்ற இரண்டிற்கும் இடம் உண்டு. பொதுவாக இந்த மூன்றையும் நீதி சாஸ்திரம் என்றே கூறுவர்.*

ஒருவனை வழிகாட்டி அழைத்துச் செல்வதே நீதி. சுக்கிரர், சாணக்கியர், காமந்தகர் முதலியவர்கள் தனித்து நீதி சாஸ்திரம் எழுதியுள்ளனர். விதுர நீதியும் அத்தகைய நூல்களில் ஒன்று. விதுர நீதிக்கு ஒரு தனிப்பட்ட சிறப்புண்டு. மஹாபாரதத்தின் நடுவில் உத்யோக பருவத்தில் இது இடம் பெறுகிறது. பகவத் கீதை பீஷ்ம பருவத்தில் இடம் பெறுகிறது. பீஷ்மரின் நீதி விரிவுரை சாந்தி பர்வத்திலும் அனுசாஸன பர்வத்திலும் இடம் பெறுகின்றன. பீஷ்மரின் தர்மானுசாஸனம் என்று இதனைக் கூறுவர்.

गीता विदुरनीतिश्च धर्माः शान्तनवेरिताः ।
न श्रुता भारते येन तस्य जन्म निरर्थकम् ॥

"பகவத் கீதை, விதுரநீதி, பீஷ்மரின் தர்மானுசாஸனம் மூன்றையும் மஹாபாரதத்திலிருந்து எவன் கேட்டு அதன்படி தன் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வில்லையோ அவனது பிறவியே வீண்" என்றொரு பழமொழி உண்டு.

**நீதி-அனுசாஸனம்**

உலகில் எந்த மனிதனும் முற்றிலும் நல்லவன் என்றோ முற்றிலும் கெட்டவன் என்றோ அறுதியிட்டுக் கூற இயலாது. பல்வேறு பிறவிகளில் அவனவன் பெற்ற அனுபவங்களும், அவற்றிற்குக் காரணமான நற்செயல்களும் கெட்ட செயல்களும் உள் மனத்தினுள் ஆழ்ந்து பதுந்து வாஸனைகளாகி, விடுகின்றன. அவை எதிர்பாராத வகையில் மனிதனது போக்கைத் திடீரென்றோ, தொடர்ந்து தூண்டுகோலாக இருந்தோ மாற்றி, நல்லவனாகவும் கெட்டவனாகவும் காட்டிக் கொடுக்கின்றன. இந்த மாற்றம் அளவுக்கு மீறி நிகழ்ந்திருந்தால் மிக நல்லவன், மிகக் கெட்டவன் என முத்திரை குத்தப்பட்டு இதிஹாஸங்களில் கூறப்படுகிற அளவில் வெளியாகிறான். ராமாயணத்திலும் மஹாபாரதத்திலும் இத்தகைய கதாபாத்திரங்களை — சரித்திர நாயகர்கள் பலரைக் காண்கிறோம்.

மஹாபாரதக் கதை நல்லவர் கூட்டத்திற்கும் கெட்டவர் கூட்டத்திற்கும் இடையே நிகழ்ந்த மோதலை — தவிர்க்கத் தக்க விரோதத்தை — உருவகப்படுத்திக் காட்டுகிறது. பாண்டு

தர்ம புத்திரர், அவரது சகோதரர்கள், துரௌபதி, கண்ணன் என்ற நல்லவர் கூட்டம் ஒரு புறம். திருதராஷ்டிரர், துரியோதனன் அவனது சகோதரர்கள், சகுனி, கர்ணன் முதலிய கெட்டவரின் கூட்டம் மறுபுறம். கெட்டவரிடையே நல்லவர் உண்டு. பீஷ்மர், துரோணர், கிருபர், விதுரர் முதலான மிக நல்லவர். கெட்டவரை நல்லவராக்க அவர்களுடன் கூடவே இருந்து முயன்று தோற்கின்றனர். இவர்களது நீதிமுறை அவர்களிடம் சிறிதும் பயன்படவில்லை. நல்லவரிடையேயும், பாண்டுவின் காமம், தர்மபுத்திரரின் சூதாட்டநாட்டம், பீமனின் வஞ்சம் தீர்க்கிற வெறி, துரௌபதியின் பிறர் குறை கண்டு எள்ளி நகைத்தல், வஞ்சம், முதலியவை நல்லவருக்கும் கேடு விளைவிக்கின்றன. தரும புத்திரர், தனது பெரு மதிப்புக்குரிய விதுரர் தடுத்தும் சூதாடுகிறார். ஆக நல்ல வழிகாட்டப் பெற்றும் நல்லவரும் கெட்டவரும் மதிகெட்டுக் கேட்டிற்கு உட்படுகின்றனர்.

மனிதனின் ஆழ்மனம் நம்புதற்குரிய தல்ல. எப்போது அது கெட்ட எண்ணத்தை வெளிப்படுத்தும்? எப்போது நல்ல எண்ணத்தைப் பரப்பி நல்லதைச் செய்யும்? என்று கூற இயலாது. ஆனாலும் உள்மனத்திலுள்ள வாஸனைகளையும் ஸம்ஸ்காரங்களையும் பகுத்தறிந்து உள்ளே உள்ள ஆழ்ந்த கெட்டவாஸனைகளை அகற்ற மனிதன் எப்போதும் கருத்துடன் முயல்வது இன்றியமையாதது. கெட்ட வாசனைகளைப் போல் ஆழ்மனத்தில் நல் வாசனைகளும் இருக்கும். அவற்றை வலுப்படுத்தினால் கெட்டவாசனை வலிவிழக்கக் கூடும். கெட்டவாசனை வலிவிழக்காமல் அவ்வப்போது தலை தூக்கிக் கொண்டிருந்தால் மாற்று மருந்தாக நல்வாசனைகளை அதிக அளவில் தூண்ட நேரும். கெட்ட மணம் வீசுகின்ற இடத்தில் கெட்ட மணத்திற்குக் காரணமானவற்றை முதலில் அகற்றுகிறோம். அகற்ற இயலாத இடத்தில் நறுமண முள்ள புகை முதலியவற்றைப் போட்டு கெட்ட மணத்தின் பாதிப்பைக் குறைக்க முற்படுகிறோம். அதனாலும் கெட்ட மணத்தின் பாதிப்பு நீங்காவில் அவ்விடத்தை விட்டே அகன்று விடுகிறோம். திருத்த இயலாதபோது கெட்டவரைத் துறப்பதோ அவரைவிட்டுத் தூரவிலகுவதோ மேல்.

*துரியோதனுதியரைத் திருத்த முற்பட்ட பீஷ்மர் முதலானோர் வேறு தர்மபாசங்களால் கட்டுப்பட்டு அகன்றுவிட முடியாதபோது அவர்கள் துர்யோதனுதியருக்கு முன்னரே அழிவை எதிர் கொள்கின்றனர். தர்ம புத்திரர் முதலானோர் நல்லோர் உபதேசத்தால் நல்வழிநாடி நன்மை பெறுகின்றனர். ஆனுல் அவர்களும் கெட்ட வழியில் சிறிதளவேனும் சென்றதால் பெற்ற துன்பம் அளவிலடங்காதது. அதனுல் நன்மை தீமைகளிடேயே நடைபெறும்போர் மிகக் கொடுமையானது. தேவாசுரப் போர் போன்று இடைவிடாமல் நடைபெறுகிறது. இதில் வெற்றிபெறவே நீதி நூல்கள் பல கட்டுப்பாடுகளையும் நடைமுறைகளையும் வரையறைகளையும் அமைத்துத் தருகின்றன.*

விதுரநீதியின் தோற்றுவாய்

*விதுரநீதியில் சிறப்பம்சம் ஒன்று உண்டு. மற்ற நீதி நூல்கள் பல நல்வழிகளைக் காட்டினுலும் அவை வாழ்க்கையின் எந்த நிலைகளில் மிகவும் பயன் படுகின்றன என்பதை நாமேதான் ஊகித்தறிய வேண்டும். விதுரநீதியோ வாழ்க்கையின் பல்வேறு நிலைகளில் அவ்வப்போது நேர்ந்த நெருக்கடிகளுக்கேற்ப விதுரர் உபதேசித்தவைகளின் தொகுப்பு.*

*விதுரநீதி தோன்றிய நிலைக்களன் விசித்திரமானது. பாண்டவர்கள் பன்னிரண்டாண்டுகள் வனவாசமும் ஓராண்டு அஜ்ஞாத வாஸமுமிருந்து, விராட நகரில் வெளிப்பட்டு, விராட அரசனின் மகள் உத்தரையை அர்ஜுனனின் மகன் அபிமன்யுவின் மனைவியாக மணம் முடித்து விராடனின் மிகப் பெருமதிப்புக்குரிய விருந்தினரானுர்கள். அஜ்ஞாத வாஸத்தின்போதே அர்ஜுனனின் போர்த்திறமையை சுவைத்தறிந்த கௌரவவீரர் வருங்காலத்தைக் கவலையுடன் எதிர்பார்த்திருக்க, கௌரவரும் பாண்டவரும் போருக்கு ஆயத்தமாகிப் படைகளைச் சேமிக்கப் பல அரசர்களை நேரிலும் தூதர்மூலமும் கண்டு உதவவேண்டினர்.*

பாண்டவர்களின் சார்பில் துருபதராஜனின் புரோகிதர் தூதராக வந்து திருதராஷ்டிரரிடம், வனவாசம் முடிந்துவிட்டதால் ஒப்பந்தப்படி பாண்டவரின் ராஜ்யத்தைப் பாண்டவரிடம் திருப்பித்தரக் கோரினர். கௌரவர்கள் இதனை ஏற்கவில்லை. திருதராஷ்டிரர் தனது மெய்க்காவலனை ஸஞ்ஜயனைப் பாண்டவரிடம் தூது அனுப்பிச் செய்தி அனுப்பினர். போரிட்டு வென்றால்தான் அரசைத் திரும்பப் பெறலாம். போரில் வெற்றி தோல்வி முன் அறிய முடியாதது. துரியோதனன் அரசைத் திருப்பித்தர சம்மதிக்கவில்லை. வீணே சகோதரர்களுடன் பாண்டவர் ராஜ்யத்தின் பொருட்டுப் போரிடுவது தர்மமல்ல. நான் இரு பக்கத்திலும் சமாதானத்தையை விரும்புகிறேன். அதனல் பாண்டவர் ராஜ்யத்தைத் திரும்பப்பெறுகிற முயற்சியில் ஈடுபட வேண்டாம்'' என்று அந்தச் செய்தி.

பாண்டவர் இதற்குச் சம்மதிக்க வில்லை. ''இந்திரப் ப்ரஸ்த ராஜ்யத்தைத் திரும்பிப் பெறுவதே எங்கள் குறிக்கோள். தர்மம் காப்பாற்றப்படத் தக்கதே. எனினும் கௌரவர் அதர்மத்தை தர்மமாகக் கையாண்டு எங்களுக்கென வேறு தர்மத்தைக் காட்டுகின்றனர். பிறர் தமது உரிமையைப் பறிக்கும் போது, தமது உரிமையைக் காத்துக் கொள்ளப் போரிடுவது க்ஷத்திரியரின் தர்மமே. போரிட்டுத் தன் உரிமையைப் பாதுகாப்பதில் ஏற்படுகிற உற்றார் உறவினரின் பேரிழப்பு தவிர்க்க முடியாததே. போரில் புறமுதுகு காட்டாது போரிட்டு மாள்வதே க்ஷத்திரியனுக்குப் பெரிய புனிதமுடிவு. கௌரவர்களுக்கு அழிவு ஏற்படாமல், எமக்கு ராஜ்யம் கிடைப்பதையே பெரிதும் விரும்புகிறோம். துரியோதனனிடம் இதைத் தனித்துத் தெரிவிப்பீர். பாண்டவருக்கு அரசைத் திருப்பித் தராமல் வஞ்சித்துத் தான் ஏகபோகமாக ராஜ்யத்தை அனுபவிக்கலாம் என்று அவன் நினைத்தால் அது நிறைவேற வாய்ப்பில்லை. முழு அரசைக் கொடுக்க விருப்பமில்லாவிடினும் நாங்கள் ஆண்ட தலைநகரான வாரணாவதத்துடன் அவிஸ்தலம், விருகஸ்தலம், மாகந்தீ, மற்றும் ஒரு க்ராமம் என்ற ஐந்து இடங்களாவது தந்து சகோதரனும் சகோதரனும் மோதிக் கொள்ளாமல் செய்யட்டும். சமாதானத்துடன் வாழவும் போரிடவும் நான்

ஆயத்தமாயுள்ளேன்'' என்று ஸஞ்சயன் மூலம் செய்தி அனுப்பினுர்.

பீஷ்மர் விதுரர் போன்று நேர்மையும் நல்லெண்ணமும் படைத்தவர்களில் ஸஞ்ஜயனும் ஒருவன். திரும்பி அஸ்திநாபுரம் வந்த ஸஞ்ஜயன் திருதராஷ்டிரரை வணங்கி தர்மபுத்திரர் தன் வணக்கத்தைத் தெரிவித்துள்ளதைத் தெரிவித்தார். ''அரசே! தர்மபுத்திரர் சிறிதும் பாப எண்ணம் இல்லாமல் அமைதியாக உள்ளார். பாபச் செயல் அனைத்தும் உம்மிடம் குடி கொண்டுள்ளது. புத்திரர் வசப்பட்ட நீர் அதர்மத்தைத் தர்மம் என மதிக்கிறீர். வரவிருக்கின்ற கேடுகளைத் தடுத்து நிறுத்துகிற வாய்ப்புகள் அனைத்தையும் ஒன்றன் பின் ஒன்ருக இழந்து வருகிறீர். நீர் இந்த அரசைக் காப்பாற்றுகிற திறமையை இழந்து விட்டீர். தற்போது ரத யாத்திரையில் வந்த களைப்புடனுள்ள எனக்கு விடை தாரீர். நான் இன்றிரவு ஓய்வெடுத்து நாளைக் காலை அரசவையில் பாண்டவர்களுடைய செய்தியைக் கௌரவர்கள் எதிரில் விளக்குவேன்'' என்று கூறி வணங்கிச் சென்று விட்டான்.

பாண்டவர் நாட்டைத் திரும்பப் பெற முனைந்துள்ளனர். நாட்டைத் திருப்பித் தந்தால்தான் சமாதானம் ஏற்படும் என்பதை ஸஞ்சயன் மறை பொருளாகச் சொல்லிவிட்டான் என்றுணர்ந்த திருதராஷ்டிரர் பெருங்கவலை மூண்டதால் தூக்கமிழந்து நிலை கொள்ளாமல் தவிக்கத் தொடங்கினுர். இந்நிலையில் விதுரர் ஒருவரே உதவக் கூடும். ஆனுல் விதுரரோ முன் தினத்தில் துரியோதனனின் வரம்பு மீறிய தூஷணைகளால் நொந்து ஒதுங்கி நிற்கிருர். தானே வலியவந்து இனி அவர் ஆலோசனை கூற வாய்ப்பில்லை. அதனுல் வாயிற்காப்போன் மூலம் விதுரரை திருதராஷ்டிரர் தம் இருப்பிடத்திற்கு அழைத்துவரச் செய்தார்.

விதுரர் இதற்கு முன் தன் அண்ணனின் அருகே வர அனுமதி பெறுவதில்லை. இன்று நிலைமை மாறிவிட்டது. வாசலிலேயே நின்று வாயிற் காப்போனிடம் ''விதுரன் அரசரின் திருவடி வணங்கிப்போக அரசர் எதிரில் வர அனுமதி கோருகிருன்'' என அரசரிடம் தெரிவிப்பாய் என்று

விண்ணப்பித்தார். திருதராஷ்டிரர் இதனை அறிந்து "விதுரன் என்றும் என்னை எந்நிலையிலும் பார்க்கவர உரிமை பெற்றிருப்பதாகச் சொல்" என்று வாயிற்காப்போனிடம் சொல்ல, வாயிற் காப்போன் அதனை விதுரரிடம் கூறி அவரை உள்ளே அழைத்துச் சென்றான்.

உள்ளே அரசர் ஏதோ கவலையுடன் இருப்பதை உணர்ந்த விதுரர் தான் வந்திருப்பதை உணர்த்தியதும் திருதராஷ்டிரர் தன் கவலையைத் தெரிவித்தார். "விதுரரே! பாண்டவர்களைக் கண்டு வந்த ஸஞ்ஜயன், நடந்ததும் நடக்க விருப்பதுமான தவறுகள் அனைத்திற்கும் என்னைப் பொறுப்பாளியாக்கி ஏசிவிட்டுச் சென்றான். தர்மபுத்திரரின் கருத்தை நாளை ஸபையில் அவன் சொல்லவிருக்கிறான். அது பற்றி எதுவும் அறியமுடியாத நிலையில் உள்ள நான் உள்ளம் நொந்து தூக்கமிழந்து தகிப்புடன் நிற்கிறேன். என் புலன்கள் தடுமாறுகின்றன. மனம் அமைதியுறவில்லை. நாளை ஸஞ்ஜயன் என்ன செய்தி சொல்வானோ என்று திகில் ஏற்பட்டுள்ளது. ஆறுதல் தருவாய்! என்கிறார்.

விதுரரோ துர்யோதனனின் விபரீதப் போக்கில் நிலைமை கட்டுக்கடங்காத நிலைக்குப் போய்விட்டதென்று உணர்ந்தாலும், அண்ணனிடம் உள்ள பாசம், உற்றார் உறவினருக்குள் ஏற்பட்ட தீராத சிக்கலைத் தீர்க்க இயலாத அவல நிலை, அறநிலை கூறி வழிகாட்டினாலும் அவ்வழி செல்லச் சிறிதும் இடம் கொடுக்காத சூழ்நிலை இவற்றை நன்கு உணர்ந்தவராதலால் பொதுவான நீதிகளையும் அரசன், குடும்பத்தலைவன், தந்தை, உறவினன், நண்பன், நல்ல குடிமகன், இளமையில் தந்தையை இழந்து காப்பாரற்ற நிலையில் தன்னிடம் அடைக்கலம் புகுந்த பாண்டவர்களின் வளர்ப்புத் தந்தை என்ற பல நிலைகளிலும் தன்னைப் பொறுத்திப் பார்த்து நேர்கிற பல தர்மசங்கடங்களிலும் நடுநிலையில் நின்று தர்மம் காக்க வேண்டியவன் என்று திருதராஷ்டிரர் சீர்தூக்கிப் பார்க்க வேண்டிய பல நிலைகளுக்கு ஏற்ற அறவழிகளைத் தெளிவுபடுத்தினார்.

## விதுர நீதி அன்று பயனற்றுப்போனது ஏன்?

திருதராஷ்டிரர் பிறவிக் குருடர். குருடராகக் காரணம் முன் வினைப் பயன் என்பதை விடத் தெரிந்த காரணமும் உண்டு. இவரது தந்தை விசித்ரவீர்யர், அம்பிகா அம்பாலிகா என்ற இரு பெண்களை மணந்தும் பிள்ளைப்பேறு அடையாமலே மறைந்தார், அக்காலத்தில் வழக்கிலிருந்த நியோக தர்மப்படி வியாசர் மூலம் அம்பிகை திருதராஷ்டிரரைப் பெற்றாள். வியாசருடன் கூடும்போது உயர் குலத்துப் பெண்களுக்குரிய அருவருப்பு அம்பிகையின் கண்களை மூடச் செய்தது. இதன் பின் விளைவு இத்தனை கோரமாக இருக்கும் என்று அப்போது அவள் அறியவில்லை. அவள் அறியாது செய்த பிழை திருதராஷ்டிரரைக் குருடனாக்கியது. குருடன் அரசாள முடியாது என்ற சமூக நீதி திருதராஷ்டிரர் மூத்த பிள்ளையாயிருந்தும் அரசுரிமை பெறுவதைத் தடுத்தது.

அரசர் தேவை என்ற நிர்ப்பந்தம் அம்பாலிகையை வியாசருடன் கூடச் செய்தது. அவளுக்கு ஏற்பட்ட குலமகளின் இயல்பான திகில், கூடும் நேரத்தில், உடலை வெளுக்கச் செய்தது. அதன் விளைவு சமுதாயம் மதிப்புடன் நோக்காத வெண்ணிறத்துடன் பாண்டு பிறந்தார். அவருக்கும் அரசுரிமை தரலாமா என்ற ஐயம் மக்களிடையே ஏற்பட, மறுபடியும் அம்பிகை நிர்பந்தப் படுத்தப்பட்டாள். அவள் மனம் ஒப்பாமல் தனக்கு மாற்றாகத் தன் பணிப்பெண்ணை கூடலுக்கு அனுப்பினாள். பணிப் பெண் தன் தூய்மையால் வியாசரின் நன் மதிப்பைப் பெற்றாள். விதுரர் பிறந்தார். விதுரர் க்ஷத்திரிய குலத்தவரல்ல என்ற காரணத்தால் அரசுரிமை பெற இயலவில்லை. வேறு வழியின்றி பாண்டு அரசனாக்கப்பட்டார்.

திருதராஷ்டிரருக்குத் தன் தாய் செய்த தவறு காரணமாகத் தான் ஒரு பேரிழப்பை அடைந்ததாக உள்ளக் குமுறல் இருந்தது. பாண்டுவிற்குத் தர்மபுத்திரர் பிறந்த பிறகே இவருக்கு துர்யோதனன் பிறந்ததும், அது அதிகமாயிற்று. தன் வம்சத்திற்கு அரசுரிமை மறுக்க உதவிய அந்த விதியை நொந்து வாழத் துணிந்த போது, பாண்டு தனக்கு நேர்ந்த

சாபத்தை விட்டு அரசைத் துறந்து காடு சென்றான். பாண்டுவின் மறைவால் அரசை நடத்தும் பொறுப்பு திருதராஷ்டிரருக்குக் கிட்டியதும் நாடாளுவதைத் தானும் தன் மக்களும் நிரந்தரமாக்கிக் கொள்ள வழி தேடினார். அர்த்த சாஸ்திரத்தில் வல்லுனரான கணிகர் என்ற மந்திரி கூடநீதி என்ற குறுக்கு வஞ்சனை முறைகளைப் போதித்தார். (இதன் சுருக்கம் பின்னர் இடம் பெறுகிறது.) திருதராஷ்டிரருக்கு அந்நிலையில் கணிக நீதி வழிகாட்டியது. சகுனி அவ்வழியில் முன் சென்றான். திருதராஷ்டிரரின் உள்ளத்தில் அத்தனை குமுறல்களுக்கிடையேயும் இடம்பெற்றிருந்த பண்பாடு விடை பெற்றது. விதுரரும் பீஷ்மரும் மற்றவரும் அவரைத் திருத்த எடுத்த முயற்சிகள் வீணாயின. விதுரரின் நீதியுரையைக் கேட்டபின்னரும் அவர் நிலையில் எந்த மாறுதலும் ஏற்படவில்லை.

### விதுரரின் முன் நிலை

விதுரருக்கு நீதியில் அசைக்க முடியாத பற்று ஏற்படக் காரணம் உண்டு. மாண்டவ்யர் என்ற ருஷி தன் ஆசிரமத்தில் அடைக்கலம் கேட்டசிலருக்குத் தங்க இடம் தந்தார். அவர்கள் முன்நாளிரவில் அரசரின் அரண்மனையில் திருடியவர்கள். மாண்டவ்யர் இதனை அறியார். திருடர்களைத் தேடி வந்த அரசரது வீரர்கள் திருடர்களைப் பிடித்தனர். அவர்களுக்கு அடைக்கலம் தந்த ருஷி போலியாக ருஷிவேடம் தரித்த திருடன் எனக்கருதித் திருடர்களுடன் ரிஷியையும் அரசரிடம் இழுத்துச் சென்றனர். அரசன் திருடர்களைக் கழுவிலேற்ற உத்தரவிட்டான். மாண்டவ்யருக்கும் அந்த தண்டனை கிட்டியது. தன் தவ வலிமையால் தன் உடல் வேதனை தன்னை பாதிக்காதவாறு, ரிஷி மனத்தைப் பிரம்பொருளிடம் செலுத்தினார். தன்னைத் தேடி வந்த முனிவர்களுக்கு அந்நிலையிலிருந்து கொண்டே போதித்தார். அரசரின் வீரர்கள் உடன் இந்நிகழ்ச்சியை அரசரிடம் தெரிவிக்க மகான் ஒருவரைத் தவறாகத் தான் தண்டித்துள்ளதை உணர்ந்த அரசன் கொலைக்களம் சென்று கழுவிலிருந்து அவரைப் பிரித்தெடுக்க

முயன்றான். பிரிக்க இயலாதபோது இரும்பாலான அந்த கழுமரத்தை உடலில் பதிந்த அளவுடன் முறித்தெடுத்தான். ருஷி தன்னுள் பதிந்த ஆணியுடன் அரச மரியாதையுடன் தன் ஆசிரமம் சென்றார். பின் யமனின் உலகம் சென்று தவத்திலிருந்த தனக்கு இந்த வாதனை ஏன் நேர்ந்ததெனக் கேட்டார். சிறு வயதில் வண்ணப் பூச்சிகளைப் பிடித்து அவற்றின் வால்களில் மெல்லிய கூரான ஈர்க்குச்சிகளைச் செறுகிப் பிடித்து வேடிக்கை பார்த்ததற்கான தண்டனை இது என்றார் யமன். பன்னிரண்டு வயதுவரை சிறுவன் செய்த பாபங்களுக்கு அவனுக்குத் தண்டனை இல்லை என்றொரு நீதி உண்டல்லவா? நீதியைக் காப்பாற்றுகிற யமனே நீதியில் தவறியதால் அவரும் மனிதனாகப் பிறந்து உலகிற்கு நெறிமுறை போதித்துத்தானும் அதன்படி வாழ்ந்து வரும்படி மாண்டவியர் சபித்தார். அதனால் யமன் விதுரராகப் பிறந்தார். எந்தச் சூழ்நிலையிலும் அறநெறி தான் மாறாமல் வாழ்ந்து விட்டதுமன்றி, விதுரர், தன் உற்றாரும் உறவினரும் அறநெறி வழிப்பட முழுவதும் முயன்றார்.

விதுரர் நீதி உபதேசித்தும் திருதராஷ்டிரரின் மனம் மாறவில்லை. தமது யோக பலத்தால் ஸநத்ஸுஜாதரை அழைத்துத் தத்வஞானம் பெறச் செய்தார். கண்ணனே நேரில் தூதராக வந்து பாண்டவருக்கு ஐந்து க்ராமங்களை வழங்கி அமைதியை நிலைநாட்டுமாறு வேண்டினார். திருதரர்ஷ்டிரர் சிறிதும் தன் நிலையிலிருந்து மாறவில்லை. தான் இனி ஹஸ்தினாபுரத்திலிருந்தால் நடக்க விருக்கிற போரில் அதர்மத்தின் பங்கில் நின்று போராட நேரும் என உணர்ந்த விதுரர் தன் வில்லை அரண்மனையின் வாயிலில் வைத்துவிட்டுத் தீர்த்தயாத்திரை சென்றார். யாத்திரையில் உத்தவர் மூலம் போர் முடிவையும் கண்ணன் மறைந்ததையும் கேட்டு ஹஸ்திநாபுரம் வந்தார். அங்கு யுதிஷ்டிரரின் அன்புத்தளையில் சிக்கி பீமன் சுமந்து தந்த உணவுக்குவியலை உண்டு தன் நிலைமறந்து வாழ்ந்த திருதராஷ்டிரரையும் காந்தாரியையும் காடு புகச் செய்து தவத்தில் இறுதி நாட்களைக் கழிக்கச் செய்தார். தானும் தன்னைக் காணவந்த தர்மபுத்திரருட் புகுந்து மறைந்தார்.

**நீதி நூல் பயன் தரத் தேவையானவை**

*விதுரரே நேரில் உபதேசித்தும் பயன்பெறாத நீதிகள் நமக்கு எவ்வகையில் பயன் தரும்? என்ற கேள்வி எழும். தீவிர மனப்பாதிப்பு உள்வாசனையாக நன்கு பதிந்திருந்த திருதராஷ்டிரரின் மனம் கணிகனின் துஷ்டநீதியால் தவறான பாதையைச் சிக்கெனப் பிடித்துக் கொண்டது. பொதுவாக நீதியைப் பிறருக்கு உபதேசிப்பது எளிது. அதனை ஏற்றுத் தம் வாழ்க்கையில் கடைபிடிப்பது மிகவும் அரிது.*

*கல்வியறிவும் உபதேசமும் பதிய, மனம் பண்பட்டிருக்க வேண்டும். சாணக்கியர் தமது அர்த்த சாஸ்திரத்தில் முதல் அதிகரணத்திலேயே வித்யையையும் விநயத்தையும் வற்புறுத்தியவர், விநயம் படியத்தக்க மனநிலைபற்றிக் குறிப்பிடுகிறார். (வித்யை - கல்வி, விநயம் - வழிப்படுதல், கட்டுப்பாடு, பண்பாடு.)*

**कृतकः स्वाभाविकश्च विनयः। क्रिया हि द्रव्यं विनयति नाद्रव्यम्। शुश्रूषा - श्रवण - ग्रहण - धारण - विज्ञान - ऊह - अपोह - तत्त्वाभिनिविष्ट बुद्धिं विद्या विनयति, नेतरम्।''** (1.5.3:5)

*''கல்வியால் ஏற்படுகிற செயற்கையான விநயம் (பண்பாடு) இயற்கையான விநயம் என விநயம் இருவகை. செயற்கையாக ஊட்டப் பெறுகிற விநய சிட்சை பண்பாட்டிற்கு இணங்க முற்படுபவனையே வழிப்படுத்தும். இணங்கமறுப்பவனையல்ல. (பண்படுத்தப்பட உட்படுபவனைத்தான் பண்படுத்தமுடியும். பண்பட விருப்பமின்றித் திமிருடன் இருப்பவனை பண்படுத்த இயலாது.) நல்வழி பற்றி கேட்டுத் தெரிந்து கொள்ள அவா, அதனைக் கேட்பது, கேட்டதை நல்லதென ஏற்பது, அதனை மனத்தில் பதித்துக் கொள்வது, அதனைத் தன்னறிவால் ஆராய்ந்து பார்ப்பது. பண்பாட்டிற்குச் சாதகமானதை ஏற்பது, கெட்டதைத் தவிர்ப்பது, அடிப்படைத் தத்துவத்தில் ஆர்வம் இவையைக் கொண்டவனைத்தான் நூலறிவு நல்வழிப்படுத்தும். இதற்கு மாறுபட்டவனையல்ல'' என்பதே சாணக்கியரின் கருத்து.*

*திருதராஷ்டிரர் நேர்மை தர்மம் பற்றி அறியாதவரல்ல. பிள்ளைப்பாசமும் அரசுரிமையில் பேராசையும் அவரது மனத்தையும் குருடாக்கி விட்டது. அவர் அடிக்கடி தன் நிலை பற்றிப் புலம்புவது உண்டு.*

जानामि धर्मं न च मे प्रवृत्तिः
  जानाम्यधर्मं न च मे निवृत्तिः ॥
केनापि दैवेन हृदि स्थितेन
  यथा नियुक्तोऽस्मि तथा करोमि ॥

*''தர்மத்தை நன்கு அறிவேன். அதில் ஏனோ எனக்கு நாட்டமில்லை. அதர்மத்தை நன்கு அறிவேன். அதிலிருந்து மனத்தைத் திருப்ப இயலவில்லை. உள்ளே இதயத்தினுள் நிலைத்துள்ள ஏதோ ஒரு தெய்வசக்தி (விதி) என்னை எப்படி ஆட்படுத்துகிறதோ அதன்படி செயல் புரிகிறேன்'' என. ஆனால் நல்ல வழியில் திரும்பச் சிறிதும் அவர் விரும்பவில்லை. திரும்பினால் துண்டாடப் பெறாத அரசுரிமை கிட்டாமல் போகுமோ என்ற பயம். பாண்டவருடன் பகிர்ந்து வாழ்ந்ததில் அவர்களது மேன்மை கண்டு பொறாமை வளர்கிறது. பாண்டவர் அழிந்தால்தான் நல்லது என்ற அளவில் தீய எண்ணம் குடி கொண்டதில் வியப்பதற் கொன்றுமில்லை. பண்பட விரும்பாதவரைப் பண்படுத்த விதுரரால் இயலவில்லை.*

இன்றையத்தேவை - நீதி புகட்டல்

துரியோதனனையோ திருதராஷ்டிரரையோ போன்று ஆழ்ந்த கெட்ட எண்ண முள்ளவர் கோடியில் ஒருவரே. அவரால் கெடுபவர் ஒருசில நூறுகளே. பொதுவில் கெட்டதும் நல்லதும் மிக ஆழப்பதியாத மக்களே பெரும்பாலானவர். இவர்கள் மனத்தில் ஆழப்பதிய விருக்கிற கெட்டவாஸனைகளை (எண்ணப் பதிவுகளை) எளிதில் நெறியுணர்வால் அகற்றி அழிக்க முடியும். நல்லெண்ணப் பதிவுகளை தம் செயலாற்றலுக்குத் துணை நிற்கும்படி அப்போது அமைத்துக் கொள்வதும் எளிதே. அவர்களின் பொருட்டே விதுர நீதியும்

அது வெளிவந்த சூழ்நிலை பற்றிய கதைகளும் பரப்பப்பட வேண்டும்.

பிறர் செய்கிற தவறு நமக்குத் தவருகவே தெரியும். அவருக்கு அது தவறெனத் தெரியாது. நாம் செய்கிற தவறு பிறர்கண்களில் படும். நம் கண்களில் படாது. அறநெறிக்கு உட்பட மிக எளிய வழி "பிறர் நம்முடன் பழகும்போது பிறரிடம் எந்தக் குறைகளைக் காண்கிருேமோ, அந்தக் குறைகள் நமது செயல்களில் காணப்பட்டால் அவற்றைத் தவிர்க்க வேண்டும். அவ்வாறே பிறரது செயலில் எதனை நற்செயல் எனக் காண்கிருேமோ அவற்றை நம் நடைமுறையில் கடைபிடிக்க வேண்டும். இது வியாஸரின் அறநெறி பற்றிய சுருக்கம். விதுரரின் நீதியிலும் இது இடம் பெறுகிறது. (ச்லோ. 511)

நமது விருப்பு வெறுப்புகளின் பாதிப்பின்றி நடுநிலை நோக்கோடு விதுரரின் நீதிகளை ஒவ்வொன்ருய் ஆராயும் போது, அவரது உபதேசத்தின் எளிமையும் உண்மையும் உணரப்படும். மனிதன் மனிதனுக வாழ, தேவனுக உயர இந்நெறிகளின் தொடர்ந்த கடைபிடிப்பு பெரிதும் உதவும் என்பதில் ஐயமில்லை.

**கணிகரின் (கூடம் - வஞ்சனை)**

பாண்டுவைப் போன்று விதுரரைப் போன்று நற்குலத்திலுதித்து, பீஷ்மரால் தக்க ஆசிரியர்கள் மூலம் நற்கல்வியும் போர் முறையும் கற்று, பீஷ்மரால் கண்ணும் கருத்துமாக வளர்க்கப்பெற்ற திருதராஷ்டிரர், இத்தகைய பெருங் கேடுகளை விளைவித்த - பண்பாடற்ற முறை கேடுகளுக்கு உடந்தையாக, தூண்டுகோலாக, மேற்பார் வையாளராக ஆனதில் அவரது பிறவிக் குறைக்குச் சமமாக, உண்மையில் அதற்கும் மேலாக, வித்தாக அமைந்தது கணிகரின் கூடநீதி. இது மஹாபாரதம் ஆதி பருவத்தில் 139வது அத்தியாயமாக இடம்பெறுகிறது. அதன் சுருக்கம் பின் வருமாறு—

கணிகர் ஓர் அந்தணர். அர்த்த சாஸ்திரத்தில் - அரசியலில் வல்லுனர். ''பாண்டவர்கள் வலிவு மிக்கவர்களாக மக்களைக் கவர்பவர்களாக வளர்கிறார்கள். அவர்களது வளர்ச்சியை என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. ஒப்பந்த மூலமாகவோ போர் மூலமோ அவர்களை வளராமல் செய்வது எப்படி?'' திருதராஷ்டிரர் அறிய விரும்பியது இதுதான். இது நேர்மையுடன் நடந்து நிறைவேற்றத் தக்கதல்ல. வஞ்சனையால்தான் அதனை நிறைவேற்றலாம். வஞ்சனைக்கும் முறையுண்டு. அதுவே கூட நீதி. இதனைக் கணிகர் உபதேசித்தார். அதன் சுருக்கம்.

தினமும் எதிலும் கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டும். தனது ஆற்றலைக் காட்டி, தன் குறைகளை மறைத்து, பிறர் குறைகளை விரிவுபடுத்தி, குறையின் அளவிற்கு அதிகமாகவே த்ண்டிக்க வேண்டும். ஆமைபோல் தன்செயல் தொடங்கிய திட்டத்தை மறைத்து வைக்க வேண்டும். செயலைத் திருந்தச் செய்ய ணேடும். முள்ளை அரை குறையாக எடுத்தால் புரையோடி வேதனை வலிவடையும். எதிர்ப்பவரை முழுதும் அழித்து விடுதல் நலம். நல்ல வீரனைக் கலகலக்கச் செய். நன்கு போர்புரிபவனை ஓடச் செய். அதனைச் சாதிக்க வழிமுறை பற்றிச் சிந்தியாதே. காலத்தில் செய். சிறுநெருப்பும் ஊரை எரித்துவிடும். அதனால் கண்காணித்துக் கொண்டேயிரு. குருடனாக இருக்க நேர்ந்தால் குருடனாயிரு.

அவ்வாறே செவிடனாயிருப்பதால் நலமாயின் செவிடனாவாய். அடிப்பட்ட மான் படுத்திருப்பதுபோல் படுத்திரு. வில்லைக் கோரைப் புல்லைபோல் தரையில் பரத்துவாய். வலிவற்றவன் என உன்னை நம்பியணுகும் போது, ஓநாய்போல் மேலே பாய்ந்து குதறிவிடு. தன்னிடம் அடைக்கலம் புகுந்தாலும் பரிவு காட்டாதே. முன் விரோத மிருந்தால் சிறுகச் சிறுகப் பணம் கொடுத்துக் கெடுத்துவிடு. எதிரியின் வேர் எங்குள்ளது எனக் கண்டுபிடி. வேருடன் அவனை அழிக்க வழிதேடு.

துரட்டியால் கிளையை மடக்கி இழுத்து ஒவ்வொரு காயாகப் பறிப்பதுபோல் எதிரியை அழிப்பாய். நீ

வலிவடையும் வரை எதிரியைத் தோளில் தாங்குவாய். வலிவு பெற்றதும் மண் குடத்தைத் தரையில் மோதுவதுபோல் மோதி அழிப்பாய். ஸமாதானமாகப் பேசியோ பொருளாசை காட்டியோ, மிரட்டியோ எதிர்த்தோ எதிரியை அழிப்பதிலேயே கருத்துடனிரு.

எதிரி பயந்தவனுயின் மேலும் பயங்காட்டுவாய் சூரனுயின் கைகூப்பிக் கெடுப்பாய். கஞ்சனுயின் பொருளைத் தந்து கெடு. தன்னேடு ஒத்தவனை அண்டிக் கெடுப்பாய்.

அண்ணன், தம்பி, நண்பன், தந்தை, குரு என்று பாகுபடுத்தாமல் எதிரியென்றே பாவித்து அழிப்பாய். எத்தனை கோபமிருந்தாலும் கோபத்தை வெளிக்காட்டாதே. அடிக்கவிருக்கும்போதே பிரியமாகப் பேசு. அடித்துக் கொண்டே பரிவு காட்டுவாய். வருந்துவாய், அழுவாய். ஆறுதல் கூறுவாய். உயிர் நீங்கும் வரை அவன் உன்னை எதிரி எனக் கருதமாட்டான். எதிர்க்கமாட்டான். அழிப்பதற்கு எளிய வழி இது. அவனை அழிக்கிருய் என்று எவருமே அறியக் கூடாது.

அழிக்க வேண்டியவன் வீட்டினுள் இருந்தால் வீட்டிற்குத் தீயிடு. அவனை ஊரைவிட்டே ஓடும்படி செய். நம்பி நிற்கும்போது கெடுப்பாய். எவரையும் நம்பாதே. புன்சிரிப்புடன் பேசு. கை கூப்புவாய். சபதம் செய், தலையால் வணங்கு. உன்னை நம்பும்படி செய். பூக்கும்; காய்க்காது. காய்க்கும், பழுக்காது. பழமிருக்கும்; அதன் மேல் ஏற முடியாது. பழம் நல்ல சுவையுடன் இருக்கும்; எளிதில் செரியாது. இத்தகைய மரம் போல் பழகுவாய்.

எவன் அறிவு ஏமாறுமோ, அவனைக் கடந்ததைக் காட்டி ஏமாறவிடு. துஷ்டனை வரவிருப்பதைக் காட்டி பயமடையச் செய். திடீரென யோசனை கூறி அறிவாளியைக் குழப்புவாய். எதிரியுடன் சமாதான மென்பது நடவாது. எதிரியுடன் சமாதானம் செய்து மரத்தின் மேற் கிளையில் பரண்கட்டிப் படுத்தவன், கீழே விழுந்தபின் தான் "உறுதியற்ற சமாதானம் அது" என்பதை உணர்வான். மீனைத் தூண்டிலில் சிக்கவைத்து ஏமாற்றி அழிப்பதுபோல் எதிரியை அழிப்பாய். இதில்

நியாயம் அநியாயம் என்ற சிந்தனைக்கு இடமில்லை. எதிரியின் வலிவைத்தானே சிறுகச் சிறுகக் குலையும்படி செய்வாய்.

உனது செயல் முறையைப் பிறர் முன்னதாக ஊகிக்க இடம் தராதே. நடைமுறைக்கு வந்த பின்னரோ நடந்த பின்னரோதான் அறிய வேண்டும். எங்கும் எதிலும் பயந்தவன் போல் நடமாடுவாய். பயம் நேரும்போது பயமின்றித் தாக்க வேண்டும். வரவிருப்பதை முன்னுணர்வாய். பயனின்றிச் செயல்படாதே.

பிறர் உன்னிடமிருந்து எதையேனும் எதிர்பார்க்கச் செய். எதிர் பார்வைக்குக் காலவரை காட்டு. காலவரையை அடிக்கடி தள்ளிப் போடுவாய். காலவரையைத் தாண்ட இடையூறுகளைக் காட்டு. இடையூறுக்குக் காரணம் காட்டு, எதிர்பார்த்து எதிர்ப்பார்த்தே அவன் கவனத்தில் குறையுடன் இருப்பான். அப்போது அவகாசம் தராமல் எதிர்த்து அழிப்பாய். பாண்டவர்கள் எதிரிகள் எனில் மறைந்திருந்து அவர்களுக்குக் கேடு செய்வாய். அவர்கள் மேலும் வலிவு பெறுமுன் அழிப்பாய். பின் வருந்திப் பயனில்லை.

இதுவே கணிகனின் கூடநீதி.

விதுர நீதி -நூலமைப்பு.

விதுர நீதி உத்யோக பர்வத்தில் பிரஜாகர பர்வம் (திருதராஷ்டிரரின் உறக்கமற்ற நிலை உணர்த்தும் இடம்) என்ற பகுதியில் எட்டு அத்தியாயங்களில் (33-40) தொகுக்கப்பட்டுள்ளது. இங்கு அதே அத்தியாய முறை 1-8 ஆக அமைக்கப் பட்டுள்ளது. ஒவ்வொரு அத்தியாயத்திற்கும் தனி ச்லோக எண் தராமல் தொடர்ந்து ச்லோக எண் தரப்பட்டுள்ளது. ஒப்புதல் நோக்கவும் பின் முன் குறிப்பு தரவும் அது எளிதாயிருக்கும்.

விதுர நீதி இடம் பெறுகிற எட்டு அத்தியாயங்களில் 604 சுலோகங்கள் உள்ளன. இதன்தொடக்கத்திலுள்ள கதைப்பகுதியிலும் நடுவே இடம் பெறுகிற சுதன்வா விரோசனன் கதைப் பகுதியிலும் உள்ள சுலோகங்களின்

# विदुरनीतिः

## प्रथमोऽध्यायः

# விதுர நீதி

## முதல் அத்தியாயம்

**विदुरः उवाच-** *விதுரர் கூறுகிறார்*

**अभियुक्तं बलवता दुर्बलं हीनसाधनम् ।**
**हृतस्वं कामिनं चोरं आविशन्ति प्रजागराः ॥** 1
**कच्चिदेतैर्महादोषैः न स्पृष्टोऽसि नराधिप ।**
**कच्चिन्न परवित्तेषु गृध्यन् न परितप्यसे ॥** 2

*''அரசே! வலிவு மிக்கவனுடன் எதிர்த்துப் போராடுகின்ற வலிவில்லாதவன், சொத்து சுகமிழந்தவன், காதல் வசப்பட்டவன், திருடன் இவர்களையே உறக்கமின்மை ஆட்கொள்ளும். இந்தப் பெருங்குறைகள் தங்களைத் தீண்டவில்லையே! அல்லது நீர் பிறரது உரிமைகளிடம் கொண்ட பேராசையால் தவிக்கவில்லையே!'' (திருதராஷ்டிரர் இதற்கு விடையளிக்காமல் கவலை நீங்க வழி கேட்கிறார்.)*

**धृतराष्ट्रः उवाच-** *திருதராஷ்டிரர் கேட்கிறார்*

**श्रोतुमिच्छामि ते धर्म्यं परं नैश्रेयसं वचः ।**
**अस्मिन् राजर्षिवंशे हि त्वमेकः प्राज्ञसम्मतः ॥** 3

*''விதுர! மேன்மை தரவல்ல அறவழி பற்றிய உன் கருத்தைக் கேட்க விரும்பிகிறேன். இந்த ராஜருஷிகளின் வம்சத்தில் நீ ஒருவனே அறிவாளிகளாலும் மதிக்கப்பெறுபவன்.*

**विदुरः उवाच -** *விதுரர் கூறுகிறார்*

**राजा लक्षणसंपन्नः त्रैलोक्यस्याधिपो भवेत् ।**
**प्रेष्यस्ते प्रोषितश्चैव धृतराष्ट्र युधिष्ठिरः ॥** 4

विपरीततरश्च त्वं भागधेये न सम्मतः ।
अर्चिषां प्रक्षयाच्चैव धर्मात्मा धर्मकोविदः ॥ 5

*திருதராஷ்டிரரே! ஓர் அரசன் அரசருக்குரிய சிறப்புகளுடனிருந்தால் மூவுலகையும் ஆள்வான். அத்தகைய யுதிஷ்டிரன் நீர் உத்தரவிட்டதைப் பணிவுடன் முடிக்கிறவனாக இருந்தான். அவன் நாடு கடத்தப்பட்டான். கண்ணொளி இழந்தமையால் தர்மத்தை அறிந்தவராயும் தர்மத்தில் நாட்டம் உடையவராயு மிருந்தும் நீர் விபரீதமாகச் செயல்பட்டு நன்மையை மதிக்கவில்லை.*

आनृशंस्यात् अनुक्रोशात् धर्मात् सत्यात् पराक्रमात् ।
गुरुत्वात् त्वयि संप्रेक्ष्य बहून् क्लेशान् तितिक्षते ॥ 6

*பிறர் பொல்லாதவன் எனக் கூறுத வண்ணம் நடப்பது, பரிவு, கடமையுணர்வு, உண்மை, தன் எதிர்ப்புத் திறனில் நம்பிக்கை, உம்மிடம் மூத்தவர் என்ற மதிப்பு இவைகளை எல்லாம் கருதியே தர்மபுத்திரர் கஷ்டங்கள் பலவற்றையும் பொறுத்துக் கொள்கிறார்.*

दुर्योधने सौबले च कर्णे दुःशासने तथा ।
एतेष्वैश्वर्यमाधाय कथं त्वं भूतिमिच्छसि ॥ 7

*துரியோதனன் சகுனி கர்ணன் துச்சாசனன் இவர்களிடம் நாடாளும் பொறுப்பை ஒப்படைத்தபின் நலத்தை எப்படி எதிர்பார்க்கிறீர். (இவர்கள் மூடர்கள். அறிவாளிகள் ஆண்டால் நலம் பெருகும்).*

एकस्मात् वृक्षात् यज्ञपात्राणि राजन् स्रुक् च द्रोणी पेढनी पीडनी च ।
एतस्माद्राजन् ब्रुवतो मे निबोध एकस्माद्वै जायतेऽसच्च सच्च ॥ 8

*ஒரே மரத்திலிருந்து வேள்விக்கான பாத்திரங்களும் ஹோமக் கரண்டியும் உருவாகும். அதிலிருந்தே நீர்த் தொட்டியும் உரலும் உலக்கையும் கூட உருவாகும். ஒன்றிலிருந்தே கெட்டதும் நல்லதும் தோன்றலாம். (ஒரே குலத்தில் கௌரவர்களும் பாண்டவர்களும் அறிவிலியும், அறிவாளியும் தோன்றுவது இயல்பே)*

இவன் அறிவாளி

आत्मज्ञानं समारंभः तितिक्षा धर्मनित्यता।
यमर्थात् नापकर्षन्ति स वै पण्डितः उच्यते॥ 9
क्रोधो हर्षश्च दर्पश्च ह्रीः स्तंभो मान्यमानिता ।
यमर्थात् नापकर्षन्ति स वै पण्डित उच्यते॥ 10

சுய அறிவு, தகுதிக்கேற்ற முயற்சி, பொறுமை, நேர்மையில் உறுதி, கோபம், மகிழ்ச்சி, செருக்கு, தவறான செயலில் நாணம், திமிர், மதிக்கத்தக்கவர்களை மதிப்பது இவை எவனைத் தனது இலக்கிலிருந்து நழுவாமலிருக்கச் செய்கின்றனவோ அவனே பண்டிதன் - அறிவாளி. (அறமும் அறத்தின் வழியில் பெறப்பட்ட பொருளும் இன்பமும் (தர்மம், அர்த்தம், காமம்)முக்தி இவை மனிதன் நாடத்தக்க இலக்குகள். இலக்கைப் பெறத் தக்க அறிவு பண்டா. பண்டாவை அடைந்தவன் பண்டிதன்.)

यस्य कृत्यं न जानन्ति मन्त्रं वा मन्त्रिते परे ।
कृतमेवास्य जानन्ति स वै पण्डित उच्यते ॥ 11
यस्य संसारिणी प्रज्ञा धर्मार्थावनुवर्तते ।
कामादर्थं वृणीते यः स वै पण्डित उच्यते ॥ 12

எவனது செயல் முறையையும் அதற்கான திட்டத்தையும் செயலாக்கத்திற்குப் பின்னரே மற்றவர் அறிவார்களோ, முன்கூட்டி அறிய இயலாதோ அவனே அறிவாளி. எவனது பகுத்தறிவு (நீர் மேலிட்ட எண்ணெய்த் துளிபோல் விரைவில்) விரிவடைந்து அறத்தையும் பொருளையும் நாடித் தொடர்கிறதோ, இன்பத்தைவிடப் பொருளை அதிகம் விரும்புகிறதோ அவன் அறிவாளி

निश्चित्य यः प्रक्रमते नान्तर्वसति कर्मणः।
अवन्ध्यकालो वश्यात्मा स वै पण्डित उच्यते॥ 13
न हृष्यत्यात्मसम्माने नावमानेन तप्यते।
गाङ्गो ह्रद इवाक्षोभ्यो यः स पण्डित उच्यते॥ 14

*சுய அறிவிற்கேற்ற கல்வியறிவு, கல்வியறிவை ஒட்டிச் செல்கிற சுய அறிவு, பெரியோர்கள் வகுத்த தர்ம எல்லையை மீருதிருப்பது, இவற்றை கொண்டவரே பண்டிதர். (சுய அறிவு பிறவியிலேயே முன் பிறவிப்பயனாகப் பெற்றது. இப்பிறவியில் நூல்கள் பலவற்றைத் தக்க குருவிடமிருந்து கற்றுப் பெறுவது கல்வியறிவு. (நூலறிவு) இரண்டும் இணைந்து செயலாற்றுவது அவசியம். இத்தகைய அறிவாளிகளிடமே அரசாட்சிப் பொறுப்பைத் தருதல் நலம். துரியோதனாதியரை இத்தகைய அறிவாளிகளாகக் கருத இயலாது. அப்படியாயின் அறிவிலிகளா?, அறிவிலிக்கான அடையாளம் எது? விதுரர் விளக்குகிறுர்).*

இவன் அறிவற்றவன்,:-

अश्रुतश्च समुन्नद्धो दरिद्रश्च महामनाः ।
अर्थांश्चाकर्मणा प्रेप्सुर्मूढ इत्युच्यते बुधैः ॥ 25

*கல்வியறிவில்லாதவன், ஆனால் தலை கனத்தவன்; ஏழை, ஆனால் பெருமனம் படைத்தவன், நாடியதைக் குறுக்கு வழியில் அடைய விரும்புபவன், இவன் மூடன்.*

स्वमर्थं यः परित्यज्य परार्थमनुतिष्ठति ।
मिथ्याचरति मित्रार्थे यश्च मूढः स उच्यते ॥ 26

*தன்னலத்தை புறக்கணித்துப் பிறர் நலத்தைத் தொடர்ந்து செய்பவனும், நண்பனிடம் வஞ்சகமாக நடப்பவனும் மூடனே.*

अकामां (न्) कामयति यः कामयानां (न्) परित्यजेत् ।
बलवन्तं च यो द्वेष्टि तमाहुर्मूढचेतसम् ॥ 27

*தன்னை விரும்பாதவளை விரும்புபவனும், தன்னை விரும்புபவளைத் தவிர்ப்பவனும், தன்னைவிட வலிவுமிக்கவனை எதிர்ப்பவனும் அறிவிழந்தவனே. (தன்னிடம் நட்புடன் நடந்து கொள்ளாதவனிடம் நட்பு கொள்பவனும் நண்பனை இழப்பவனும் அறிவிலியே).*

अमित्रं कुरुते मित्रं मित्रं द्वेष्टि हिनस्ति च ।
कर्म चारभते दुष्टं तमाहुर्मूढचेतसम् ॥ 28

எதிரியை நண்பனெனக் கொள்பவனும், நண்பனை வெறுத்துத் துன்புறுத்துபவனும், கெட்டதென உணர்ந்தும் கெட்ட செயலைத் தொடங்குபவனும் அறிவு மழுங்கியவனே.

संसारयति कृत्यानि सर्वत्र विचिकित्सते ।
चिरं करोति शीघ्रार्थे स मूढो भरतर्षभ ॥ 29

அவ்வப்போது செய்யத்தக்கவற்றைத் தாமதத்துடன் செய்து கால்தேசங்களில் விரிவுபடுத்துபவனும், எங்கும் எதிலும் சந்தேகப்படுபவனும் (இது நல்லதா கெட்டதா செய்யத் தக்கதா தகாததா என்ற தீர்மானிக்க இயலாதவனும்) விரைவில் முடிக்கத் தக்கதைத் தாமதித்துச் செய்பவனும் அறிவிலியே.

श्राद्धं पितृभ्यो न ददाति दैवतानि न चार्चति ।
सुहृन्मित्रं न लभते तमाहुर्मूढचेतसम् ॥ 30

உயிர்நீத்த முன்னோர்களுக்குரிய சடங்குகளைச் சிரத்தையுடன் செய்யாதவனும், தெய்வங்களை வழிபடாதவனும் நல்லிதயம் படைத்த நண்பனைப் பெறாதவனும் அறிவிலியே.

अनाहूतः प्रविशति अपृष्टो बहु भाषते ।
अविश्वस्ते विश्वसिति मूढचेता नराधमः ॥ 31

அழைப்பின்றி நுழைபவனும், கேட்கப் பெறாமல் நிறையப் பேசுபவனும், நம்பத்தகாதவனை நம்புபவனும் அறிவிழந்தவனே. அவன் மனிதர்களில் மிகத் தாழ்ந்தவன்.

परं क्षिपति दोषेण वर्तमानः स्वयं तथा ।
यश्च क्रुध्यत्यनीशानः स च मूढतमो नरः ॥ 32

பிறரைக் குறை கூறுபவன், தான் அத்தகையகுறைகளுடன் வாழ்பவன், தனது கட்டுப்பாட்டிற்குள் அடங்காதவனிடம் கோபிப்பவன், இவன் கடைப்பட்ட மூடன்.

आत्मनो बलमज्ञाय धर्मार्थपरिवर्जितम् ।
अलभ्यमिच्छन् नैष्कर्म्यात् मूढबुद्धिरिहोच्यते ॥ 33

एकं हन्यात्, न वा हन्यात् इषुर्मुक्तो धनुष्मता।
बुद्धिः बुद्धिमतोत्सृष्टा हन्याद्राष्ट्रं सराजकम् ॥ 37

வில்லாளியால் எய்யப்பெற்ற அம்பு குறிபார்க்கப்பட்ட ஒருவனை அடித்தாலும் அடிக்கலாம். குறிதவறி அடிக்காமலும் வீணுகலாம். ஆனுல் அறிவாளியால் அரசனின் அழிவை நோக்கி எய்யப்பட்ட அறிவு, அரசனை மட்டுமல்ல, அவனுடன் நாட்டையும் அழிக்கும். (அறிவாளி அறிவை நாட்டின் நலனுக்காக மட்டுமே செலுத்த வேண்டும். அப்போதுதான் நாடு நலம் பெறும். அதற்காக அறிவாளி செய்யவேண்டியதை விதுரர் விளக்குகிருர்.)

அறிவாளியின் செயல்முறை

एकया द्वे विनिश्चित्य त्रींश्चतुर्भिर्वशे कुरु ।
पञ्च जित्वा विदित्वा षट् सप्त हित्वा सुखी भव॥ 38

ஒன்ருல் இரண்டை நிர்ணயித்துக் கொண்டு, மூன்ருல் நான்கை வசப்படுத்துவீர். ஐந்தை வென்று ஆறை உணர்ந்து ஏழைத் தவிர்த்து சுகம் பெறுவீர். (ஒன்று-நல்லறிவு என. இரண்டு - நல்லது கெட்டது என; மூன்று - நண்பன் எதிரி உதாசீனன் என; (நண்பனுக்வோ எதிரியாகவோ கருத இயலாதவன், நம்மீது பற்றற்றவன் உதாசீனன்) நான்கு - மென்மையுள்ள பேச்சு, (ஸாம) பொருளுதவி, (தானம்) மிரட்டிப் பணிவித்தல், (பேதம்) தண்டித்துப் பணிவித்தல். (தண்டம்) என. ஐந்து - பார்வை கேள்வி மணம் சுவை தொடு உணர்ச்சி என்ற புலனுணர்ச்சிகளால் ஏற்படும் நாட்டம் என. ஆறு - சமாதானம், போர், படையெடுப்பு, நல்லதருணம் பார்த்து எதிர்க்கும்வரை முற்றுகை, வஞ்சித்து மனம் மாறச் செய்தல், சரணடைதல் பற்றிய முறைகள் என. ஏழு - பெண்களிடம் (பெண் ஆணிடமும் ஆண் பெண்ணிடமும்) ஏமாறுதல், சூதாடுதல், வேட்டையாடுதல், மது அருந்துதல், தடித்துப் பேசுதல், கொடூரமான தண்டனை, பொருளாதாரத்திற்கு நாசம் விளைவித்தல் என.)

एकं विषरसो हन्ति शस्त्रेणैकश्च वध्यते ।
सराष्ट्रं सप्रजं हन्ति राजानं मन्त्रविप्लवः ॥ 39

விஷ நீர், குடித்தவனை மட்டும் கொல்லும். ஆயுதம், அதனால் அடிபட்ட ஒருவனை மட்டும் அழிக்கும். அரசவையில் செய்த மந்திராலோசனையில் ஏற்படுகிற தவறு, அரசனை, நாட்டுடன் நாட்டு மக்களுடன் அழிக்கும்.

"சில 'ஒன்று' நல்லவை. சில 'ஒன்று' கெட்டவை".

**एकः स्वादु न भुञ्जीत एकश्चार्थान्न चिन्तयेत् ।**
**एको न गच्छेदध्वानं नैकः सुप्तेषु जागृयात् ॥ 40**

*(பிறருடன் பகிர்ந்து கொள்ளாமல்) தனித்து ஒருவன் இனியதை உண்ணக் கூடாது. தனித்து ஒருவன் தன் நலம் பற்றிச் சிந்திக்கக் கூடாது. தனித்துப் பெருவழி செல்லக் கூடாது. மற்றவர் தூங்குகையில் தனித்து விழித்திருக்கக் கூடாது. (தான் பெற்றதைப் பிறர் பெறக் கூடாது;, தன் நலத்தைப் பற்றித் தனக்குத்தான் தெரியும். தன் நலத்துடன் பிறர் நலத்தைப் பற்றியும் சிந்திக்க வாய்ப்பு இருக்கக் கூடாது. என்ற கெட்ட எண்ணங்கள் தானே எழும். மற்றவர் இனிது தூங்க நாம் மட்டும் விழித்திருக்க நேரிட்டதே என்ற அங்கலாய்ப்பு, அவர்கள் தூங்குவதால் அவர்கள் அறியாமல் அவர்கள் குறுக்கீடின்றிக் கெட்டதைச் செய்யலாம் என்றவாறு கெட்ட எண்ணங்கள் மேன்மேலும் வளரும். தனித்துப் பெருவழி செல்லும் போது பயம் தயக்கம் மலைப்பு அசதி முதலியவை பயணத்தைக் கெடுத்துவிடும்.).*

**एकमेवाद्वितीयं तद् यद्राजन् नावबुध्यसे ।**
**सत्यं स्वर्गस्य सोपानं पारावारस्य नौरिव ॥ 41**

*உலகில் சத்தியம் என்ற ஒன்று உண்டு. அதற்கு ஈடான இரண்டாவது இல்லை. அதை நீர் உணரவில்லை. சத்தியம் சுவர்க்கத்திற்குப் படிக்கட்டு. இக்கரை அக்கரை அறிய இயலாத கடலுக்குக் கப்பல் போல சுவர்க்கத்தின் பரப்பை அறிய உதவுகிற ஒரே சாதனம்.*

**பொறுமை - மாபெரும் சக்தி**

**एकः क्षमावतां दोषः द्वितीयो नोपपद्यते ।**
**यदेनं क्षमया युक्तं अशक्तं मन्यते जनः ॥ 42**

பொறுமையாளிடம் ஒரே ஒரு குறை உண்டு. இரண்டாவது இருப்பதற்கில்லை. பொறுமையுள்ளவனை உலகம் திறமையற்றவன் என மதிக்கும் (பொறுமை யுள்ளவனை உலகம் மதிக்காது). பொறுமையே உருவான தருமபுத்திரரை நீங்கள் அனைவரும் மதிக்கத் தவறிவிட்டீர்கள்.

सोऽस्य दोषो न मन्तव्यः क्षमा हि परमं बलम्।
क्षमा गुणो ह्यशक्तानां शक्तानां भूषणं तथा॥ 43

பொறுமை என்பது குறையல்ல. பொறுமை பெரும் வலிவு. வலிவற்றவனிடம் பொறுமை சிறந்த குணமாகக் காணப் பெறும். வலிவுள்ளவனிடம் அது அணிகலனாக விளங்கும்.

क्षमा वशीकृतिर्लोके क्षमया किं न साध्यते।
शान्तिखड्गः करे यस्य किं करिष्यति दुर्जनः॥ 44

பொறுமை உலகை வசப்படுத்தும். பொறுமையால் சாதிக்கப் பெறாதது ஒன்றுமில்லை. பொறுமை என்ற கத்தியை ஏந்தி நிற்பவனுக் கெதிராகக் கொடியவனும் எதனையும் செய்ய இயலாது.

अतृणे पतितो वह्निः स्वयमेवोपशाम्यति ।
अक्षमावान् परं दोषैः आत्मानं चैव योजयेत्॥ 45

புல்முளைக்காத தரையிலிட்ட நெருப்பு தானே அணைந்துவிடும். பொறுமையற்ற மனிதன் பிறனையும் பிறகு தன்னையும் கெடுத்துக் கொள்வான். (பொறுமையின்மை பொறாமையாக மாறும். பொறாமை எனும் நெருப்பு விறகு கிடைத்தால் அதனை அழிக்கும். விறகில்லையேல் தன்னையும் அழித்துக் கொள்வான்).

एको धर्मः परं श्रेयः क्षमैका शान्तिरुत्तमा ।
विद्यैका परमा तृप्तिः अहिंसैका सुखावहा ॥ 46

*தர்மம் என்ற 'ஒன்று' மாபெரும் மேன்மை. பொறுமை என்ற 'ஒன்று' சிறந்த அமைதி. கல்வி என்ற, ஒன்று அளவற்றநிறைவு. அஹிம்ஸை என்ற ஒன்று தொடர்ந்து சுகம் தருவது.*

**சில 'இரண்டு'.**

**द्वाविमौ ग्रसते भूमिः सर्पो बिलशयानिव ।**
**राजानं चाविरोद्धारं ब्राह्मणं चाप्रवासिनम् ॥ 47**

*பாம்பு வளையிலுள்ளவைகளை விழுங்குவது போல் பூமி இருவரை விழுங்கும். எதிர்க்கப்படும் போது சண்டையிட்டு எதிர்ப்பை முறியடிக்காத அரசன், பண்பாட்டைப் பற்றியறிய நாடோடியாகாத (கிணற்றுத் தவளையாயுள்ள) அந்தணன், இவர்களே அந்த இருவர்.*

**द्वे कर्मणी नरः कुर्वन्नस्मिन् लोके विरोचते ।**
**अब्रुवन् परुषं किञ्चित् असतो नार्चयंस्तथा ॥ 48**

*பிறரைப் பற்றிக் கடிந்து பேசாதிருத்தல், கொடியவர்களைப் பாராட்டாதிருத்தல் என்ற இரு செயல்களைப் புரிபவர் இவ்வுலகில் புகழுடன் விளங்குவர்.*

**द्वाविमौ पुरुषव्याघ्र परप्रत्ययकारिणौ ।**
**स्त्रियः कामितकामिन्यो मूर्खाः पूजितपूजकाः ॥ 49**

*பிறர் செய்வதைக் காரணமாகக் காட்டிச் செயல்படுபவர் இருவர். மற்ற பெண்கள் நாடியவற்றிலேயே தாமும் நாட்டம் கொள்ளும் பெண்கள், (2) பிறரால் வழிபடப்பட்டவர்களையே வழிபடுகிற மூடர்கள். (சுய அறிவுடன் சிந்திக்கமாட்டார். அவர்கள் நாடுகிறார்களே. அது நல்லதாகத் தானிருக்கும் என்று மூடநம்பிக்கையுடன் செயல்படுபவர்கள் இவர்கள்).*

**द्वाविमौ कण्टकौ तीक्ष्णौ शरीरपरिशोषिणौ ।**
**यश्चाधनः कामयते यश्च कुप्यत्यनीश्वरः ॥ 50**

இவை இரு கூரியமுட்கள். உடலினுட்புகுந்து புரையோடி உடலைவற்றச் செய்பவை. செல்வமில்லாதவன் மனக்கோட்டை கட்டுவது, கட்டுப் படுத்தத் திறமையற்றவன் கட்டுப்படுத்த முடியாதவர்களிடம் கோபிப்பது. (செல்வமின்மை மனக் கோட்டையை இடித்துவிடும். தன்னை விஞ்சியவர்களிடம் கோபம் நிறைவேறாமல் தன்னையே வருத்தும், சுவற்றிலடித்த பந்துபோல்).

द्वावेव न विराजेते विपरीतेन कर्मणा ।
गृहस्थश्च निरारंभः कार्यवांश्चैव भिक्षुकः ॥ 51

இருவர் தனது முரண்பட்ட செயலால் விளங்குவதில்லை. இல்லறத்திலிருப்பவன் தன் குடும்ப நலத்திற்காக முயற்சி கொள்ளாதிருப்பது. ஆண்டி நலப்பணிகளில் அதிகம் ஈடுபடுவது.

द्वाविमौ पुरुषौ राजन् स्वर्गस्योपरि तिष्ठतः ।
प्रभुश्च क्षमया युक्तः दरिद्रश्च प्रदानवान् ॥ 52

இருவர் வானிற்குமேல் நிற்பவர், பொறுமையுள்ள செல்வந்தர், கிடைத்ததை வாரிவழங்குகின்ற ஏழை.

न्यायागतस्य द्रव्यस्य बोद्धव्यौ द्वावतिक्रमौ ।
अपात्रे प्रतिपत्तिश्च पात्रे चाप्रतिपादनम् ॥ 53

நேர்மையுடன் பெற்ற செல்வத்திற்கு இரு தவறான விநியோக முறைகள் - தகுதியற்றவனுக்கு வழங்குதல், தகுதியுள்ளவனுக்குக் கொடாதிருத்தல்.

द्वावंभसि निवेष्टव्यौ गले बध्वा दृढं शिलाम् ।
धनवन्तमदातारं दरिद्रं चातपस्विनम् ॥ 54

கழுத்தில் கல்லைக் கட்டி நீர் தேக்கத்தில் போட வேண்டியவர் இருவர் செல்வமிருந்தும் (உதவியை எதிர்பார்ப்பவருக்கு) வழங்காதிருப்பவர், சிறிதும் உழைக்க விரும்பாத ஏழை. (உடலை வருத்திக் கொள்ள விரும்பாத ஏழை).

द्वाविमौ पुरुषव्याघ्र सूर्यमण्डलभेदिनौ ।
परिव्राड् योगयुक्तश्च रणे चाभिमुखो हतः ॥ 55

*சூர்ய மண்டலத்தைப் பிளந்து கொண்டு வானுலகம் செல்பவர் இருவர் - துறவியாகி யோகமுறையில் உயிரை நீப்பவர், (புறமுதுகு காட்டாதவாறு) முன் நின்று போரிட்டு மடிபவர்.*

சில மூன்று

त्रयो न्याया मनुष्याणां श्रूयते मनुजर्षभ ।
कनीयान्मध्यमः श्रेष्ठ इति वेदविदो विदुः ॥ 56

*மனிதனை வழிப்படுத்துகிற ஸாம-தான-பேத தண்டங்கள் என்கிற உபாயங்களில் (ச்லோ.38) பேதம் தாழ்ந்தது, தானம் மத்தியமம், ஸாமம் உயர்ந்தது. (தண்டம்) முன் மூன்றும் பயனளிக்காத போது மட்டும் உபயோகிக்கத்தக்கது).*

त्रिविधाः पुरुषा राजन् उत्तमाधममध्यमाः ।
नियोजयेद्यथावत्तान् त्रिविधेष्वेव कर्मसु ॥ 57

*அரசன் உத்தமன் மத்தியமன் கடையவன் என நிர்ணயித்து உத்தமனுக்கு உத்தமப்பணியையும் மத்தியமனுக்கு மத்தியமப் பணியையும் கடையவனுக்குக் கீழ்த்தரப் பணியையும் கணக்கிட்டு அவரவரவரின் தரப்படி அமர்த்த வேண்டும்.*

त्रय एवाधनाः राजन् भार्या दासः तथा सुतः ।
यत्ते समधिगच्छन्ति यस्यैते तस्य तद्धनम् ॥ 58

*அடிமை, அடிமையின் மனைவியும் மகனும், என்ற மூவரும் தனித்துத் தனக்கெனச் செல்வம் இல்லாதவர்கள். இவர்கள் தனித்துப் பெறுகிற செல்வம், இவர்கள் எவருக்கு அடிமையோ அவருடையதாகிறது. (ஸ.ப.71-1)*

हरणं च परस्वानां परदाराभिमर्शनम् ।
सुहृदश्च परित्यागः त्रयो दोषाः क्षयावहाः ॥ 59

பிறரது பொருளைப் பறித்தல், பிறரது மனைவியைத் தீண்டல், நண்பனைக் கைவிடுதல் என்ற மூன்றும் அழிவைக் கொணரும்.

त्रिविधं नरकस्येदं द्वारं नाशनमात्मनः ।
कामः क्रोधस्तथा लोभस्तस्मादेतत् त्रयं त्यजेत्॥ 60

ஆசையும் கோபமும் பேராசையும் நரகத்திற்கு இட்டுச் செல்கிற மூன்று வாயில்கள். மனிதனின் அழிவுக்குக்காரண மாகுபவை. அதனால் இம்மூன்றையும் தவிர்க்க வேண்டும்.

भक्तं च भजमानं च तवास्मीति च वादिनम् ।
त्रीनेतान् शरणं प्राप्तान् विषमेऽपि न सन्त्यजेत्॥ 61

தன்னிடம் மனத்தால் ஒன்றியவர், தனக்கு அன்புடன் பணிவிடை புரிபவர், தன்னைக் காப்பான் என்று கருதி அடைக்கலம், புகுந்தவர் ஆக இம்மூவரும் தன்னையே நம்பியிருப்பவர். இவர்களை எந்த நெருக்கடியிலும் கைவிடக்கூடாது. (சரணாகத ரக்ஷணம் என்பது பெருந்தர்மம்.)

वरप्रदानं राज्यं च पुत्रजन्म च भारत ।
शत्रोश्च मोक्षणं कृच्छ्रात् त्रीणि चैकं च तत्समम्॥ 62

எதிரியை அவனுக்கு ஏற்பட்டுள்ள பெரும் நெருக்கடியிலிருந்து விடுவிப்பது மிகழ்ச்சி தரும் பெரும் தர்மம். அதற்குச் சமமாக ஒருவன் விரும்பியதை அளித்தல், நல்லாட்சி, நன்மகனைப் பெறுதல் என்ற மூன்றையும் கூறுவர்

சில "நான்கு".

चत्वारि राज्ञा तु महाबलेन वर्ज्यान्याहुः पण्डितस्तानि विद्यात्।
अल्पप्रज्ञैः सह मन्त्रं न कुर्यात् न दीर्घसूत्रैः अलसैश्चारणैश्च॥

மிக வலிவுள்ள அரசனாலும் தவிர்க்கத்தக்கவை **நான்கு.** மந்திராலோசனை (ஆட்சி பற்றித் திட்டமிடுதல்)யில் சுய அறிவு குறைந்தவர், வெகு நேரம் சிந்தித்துச் சிந்தித்தே பொழுதைப் போக்கிச் செயல் முறையைத் தாமதிக்கச் செய்பவர், சோம்பல்

மிக்கவர், யோசிக்காமல் தலையாட்டி முகஸ்துதி செய்பவர். இந்நால்வரோடு கூடி யோசிக்கக் கூடாது.

चत्वारि ते तात गृहे वसन्तु श्रियाभिजुष्टस्य गृहस्थधर्मे।
वृद्धो ज्ञातिरवसन्नः कुलीनः सखा दरिद्रो भगिनी चानपत्या॥ 64

இல்லறத்தில் வாழ்கிற செல்வந்தனது வீட்டில் இந்த நால்வரும் தங்கி இருக்கட்டும். வயது முதிர்ந்த உற்றார், நொடித்துப் போன நற்குலப் பண்புள்ளவன். ஏழையான நண்பன். மக்கட் பேறற்ற சகோதரி. (குடும்பப்பண்பை வளர்க்க முதிர்ந்த உறவினனும், குலப்பழக்கத்தை நினைவுப்படுத்த நற்குலத்தானும், இனியதல்லதாதாயினும் நல்லதைக் கூற நண்பனும், செல்வமும் அன்பும் கேடுறாதிருக்கச் சகோதரியும் உதவுவர்).

चत्वार्याह महाराज साद्यस्कानि बृहस्पतिः ।
पृच्छते त्रिदशेन्द्राय तानीमानि निबोध मे ॥ 65

देवतानां च संकल्पं अनुभावं च धीमताम् ।
विनयं कृतविद्यानां विनाशं पापकर्मणाम् ॥ 66

உடன் பலன் தரத்தக்கவை நான்கு என பிருஹஸ்பதி இந்திரனிடம் கூறினார். தேவதைகளின் ஸங்கல்பம் (செயல்திட்டம்), மகான்களின் சக்தி, கல்வி கற்றுச் சிறந்தோரின் அடக்கம், கெட்ட செயல்களின் அழிக்கும் தன்மை. (இறைவனின் ஸங்கல்பம் உடன் நிறைவேறும். அகஸ்தியர் வசிஷ்டர் போன்றோரின் சக்தி (பெருமை) இயற்கையையே மாற்றிவிடும். கல்வியின் பயனாக குருவருளால் பெற்ற அடக்கம் வெற்றியைத் தரும். வலிவுமிக்க ராவணன் சீதையிடம் புரிந்த தீச்செயலால் உடன் அழிந்தான்.)

चत्वारि कर्माण्यभयङ्कराणि भयं प्रयच्छन्त्ययथाकृतानि।
मानाग्निहोत्रं उत मानमौनं मानेनाधीतं उत मानयज्ञः ॥ 67

முறைப்படி அமைகின்ற அக்னிவழிபாடு, மௌனம், வேதம் ஓதுதல், வேள்வி என்ற நான்கும் பயமற்ற நிலையைத் தருபவை. ஆனால் முறையின்றி அமைந்தால் இவையே பயத்தைத் தருபவை.

சில ஐந்து

पञ्चाग्नयो मनुष्येण परिचर्याः प्रयत्नतः ।
पिता माताऽग्निरात्मा च गुरुश्च भरतर्षभ ॥ 68

தந்தை, தாய், அக்கினி, ஆத்மா, குரு என்ற ஐவரும் அக்கினி பகவான் போல் பணிவிடை செய்யத்தக்கவர். (இந்த ஐவருக்கும் நெருப்புபோல் இரு நிலைகள் உண்டு. நெருப்பு பௌதிக நிலையில் உடலினுள் தாபம் பரிணாமம் அளித்தும் வெளியில் ஒளி-சூடு அளித்தும் உதவுகிறது. தெய்விக நிலையில் செல்வச் செழிப்பும் புகழும் பெருமையும் தருகிறது. அவ்விதமே தந்தை தாய் குரு இவர்களிடம் பௌதிகமான உதவியும் தெய்விகமான அருளும் பெற முடிகிறது. ஆத்மா பௌதிகமான உடல் மனம் இவற்றை இயக்குவதுடன் பரமாத்மாவுடன் இணைந்து பேரானந்தப் பெருநிலை பெறவும் உதவுகிறது.)

पञ्चैव पूजयन् लोके यशः प्राप्नोति केवलम् ।
देवान् पितॄन् मनुष्यांश्च भिक्षूनतिथिपञ्चमान् ॥ 69

தேவர்கள், பித்ருக்கள், மனிதர்கள், துறவிகள், அதிதிகள் இந்த ஐவரையும் வழிபடுபவன் பெரும் புகழ்பெறுகிறான். (நமக்குள்ளே இந்திரியங்களை (வாக்கில் அக்கினியாக, கண்களில் சூரியனாக, மனத்தில் சந்திரனாக இவ்வாறு நின்று) இயக்கியும் வெளியில் மழை வெப்பம் காற்று முதலியவற்றைத் தந்து உதவுகிற தேவதையாக உலகத்தை வாழவைத்தும் உதவுபவர் தேவர். நமக்கு ஒரு உருவமளித்து ஆயுளும் அறிவும் சக்தியும் பொருளும் தந்து உதவிப் பின் மறைந்த பின்னரும் நம் நலனைக் கோரி நிற்கின்ற பித்ருக்கள். நம் கூட வாழ்ந்து நண்பனாக உறவினனாக, பக்கத்து

வீட்டுக்காரஞக, உணவு ஆடை குடியிருப்பு முதலிய வாழ்க்கை வசதிகளைச் செய்து தருபவஞக உள்ள மனித இனம். பற்றற்றுத் திரிந்து நல்லதையும் நலம் தருவதையும் தேனீ தேன் சேமிப்பது போல் சேமித்து நமக்களிக்கின்ற துறவி. தனக்கென நேரம் காலம் இடம் என்ற எதனையும் வகுத்துக் கொள்ளாமல் நாடோடியாக என்றோ ஒருநாள் அறிமுகமின்றி "இறைவனே இவ்வுருவில் வருகிறுன்" என வீட்டினுள் வசிப்பவரால் சமைத்த உணவிற்கு முதல் பங்காளராக ஏற்கப்படுகின்ற அதிதி. இந்த ஐவரையும் சமூகத்திற்கு உதவவந்த இறைவனின் ப்ரதிநிதிகளாக ஏற்பர்.)

पञ्च त्वाऽनुगमिष्यन्ति यत्र यत्र गमिष्यसि ।
मित्राण्यमित्रा मध्यस्था उपजीव्योपजीविनः ॥ 70

நீ எங்கெங்கு செல்கிருயோ அங்கங்கு உன்னைத் தொடர்பவர் ஐவர். -நண்பர், எதிரி, நண்பரும் எதிரியுமல்லாத நடுவர், உன்னை அண்டி வாழ்பவர், உன்ஞல் அண்டப்பட வேண்டியவர். (உன்ஞல் ஆதரிக்கப்பட வேண்டியவரும் உன்னை ஆதரிப்பவரும்).

पञ्चेन्द्रियस्य मर्त्यस्य छिद्रं चेदेकमिन्द्रियम् ।
ततोऽस्य स्रवति प्रज्ञा दृतेः पात्रादिवोदकम् ॥ 71

மனிதனுக்கு ஐந்து இந்திரியங்களில் (கண் காது மூக்கு நாக்கு தொடு உணர்ச்சி தரும் தோல் என்ற ஐந்தில்) ஏதேனும் ஒரு இந்திரியம் பழுதுற்று ஓட்டையாஞல் அதன் வழியே அறிவு கசிந்து வெளியாகிவிடும், தோல் பையின் ஓட்டை வழியே நீர் வெளியாவது போல். (நீரைக் கொணரத் தோலாலான பை முன்னர் பயன்பட்டுவந்தது.)

சில "ஆறு"

षड्दोषाः पुरुषेणेह हातव्या भूतिमिच्छता ।
निद्रा तन्द्री भयं क्रोधः आलस्यं दीर्घसूत्रता ॥ 72

தூக்கம், சோர்வு, பயம், கோபம், சோம்பல், சிந்திப்பதில் நேரம் கடத்திச் செயலில் ஈடுபடாமை என்ற ஆறும்

பெருங்குறைகள். நலத்தை விரும்புகிறவனுல் தவிர்க்கத் தக்கவை.

षडिमान् पुरुषो जह्याद्भिन्नां नावमिवार्णवे ।
अप्रवक्तारमाचार्यं अनधीयानमृत्विजम् ॥ 73

अरक्षितारं राजानं भार्यां चाप्रियवादिनीम् ।
ग्रामकामं च गोपालं वनकामं च नापितम् ॥ 74

சடங்கு செய்யவந்த புரோகிதர் — ஆனுல் வேத மோதாதவர், அரசர் — ஆனுல் நாட்டைக் காக்காதவர், மனைவி — ஆனுல் மனம் கசக்கும்படி பேசுபவள், மாடுமேய்ப்பவன் — ஆனுல் வீட்டினுள் தங்க விரும்புபவன். நாவிதர் — ஆனுல் காட்டைச் சுற்றிப் பார்க்க விரும்புபவர். (குறிப்பிட்ட இடத்தில் இல்லாமல் ஊர் சுற்றுபவர்) பயன் படாத அந்த அறுவரும் கடலில் ஓட்டைப் படகு போல் தவிர்க்கத்தக்கவர். (கவைக்கு உதவாதவர்)

षडेव तु गुणाः पुंसा न हातव्याः कदाचन ।
सत्यं दानमनालस्यं अनसूया क्षमा धृतिः ॥ 75

ஸத்யம், தானம், சுறுசுறுப்பு, அஸூயையின்மை, பொறுமை, உறுதி என்ற ஆறு குணங்களை மனிதன் இழக்கக் கூடாது.

अर्थागमो नित्यमरोगिता च प्रिया च भार्या प्रियवादिनी च।
वश्यश्च पुत्रोऽर्थकरी च विद्या षड्जीवलोकस्य सुखानि राजन्॥ 76

மனித வாழ்வில் சுகம் தருபவை ஆறு- தடையற்ற பொருள் வரவு, என்றும் உடல் நிலை குன்ருமை, இனிய மனைவி, இனிக்கப் பேசுபவளும் கூட. அடங்கி நடக்கின்ற மகன், பயன்தருகின்ற கல்வி, என.

आरोग्यमानृण्यमविप्रवासः सद्भिर्मनुष्यैः सह संप्रयोगः।
स्वप्रत्ययावृत्तिरभीतवासः षड् जीवलोकस्य सुखानि राजन्॥ 77

நோயின்மை, கடனின்மை, உற்றார் உறவினரிடமிருந்து பிரியாமை, நல்லோரிணக்கம், தன் வசத்திலுள்ள பிழைப்புக் கான வழி (தொழில் முதலியவை) பயமற்ற குடியிருப்பு இவை ஆறும் உலக வாழ்க்கையில் சுகம் தருபவை.

षण्णामात्मनि नित्यानां ऐश्वर्यं योऽधिगच्छति।
न स पापैः कुतोऽनर्थैः युज्यते विजितेन्द्रियः॥ 78

தன் மனத்தில் நித்தியமாகக் குடி கொண்டுள்ள காமம் கோபம், பேராசை. மதிமயக்கம், செருக்கு, பொறாமை என்ற ஆறை அடக்கி ஆள்கிறவனும் புலன்களைத் தன் வசத்தில் கொண்டுள்ளவனுமான மனிதனைப் பாபமும் கேடுகளும் எப்படி நெருங்கமுடியும்?

षडिमे षट्सु जीवन्ति सप्तमो नोपपद्यते ।
चोराः प्रमत्ते जीवन्ति व्याधितेषु चिकित्सकाः ॥ 79

प्रमदाः कामयानेषु यजमानेषु याजकाः ।
राजा विवदमानेषु नित्यं मूर्खेषु पण्डिताः॥ 80

இந்த அறுவர் அந்த அறுவரால் பிழைக்கின்றனர். திருடர்கள் கவனமின்றி மெத்தனமாக இருப்பவர்களாலும், மருத்துவர்கள் நோய்வாய்ப் படுபவர்களாலும், பெண்கள் காம மிகுந்தவர்களாலும், ருத்விக்குகள் வேள்வி புரிபவர்களாலும், அரசன் ஒருவருக்குகொருவர் சண்டையிடுபவர்களாலும், அறிஞர்கள் மூடர்களாலும் பிழைக்கின்றனர். இத்தகைய ஏழாமவன் உலகில் காணக்கிடைக்கமாட்டான்.

षडिमानि विनश्यन्ति मुहूर्तमनवेक्षणात् ।
गावः सेवा कृषिर्भार्या विद्या वृषलसङ्गतिः ॥ 81

இந்த ஆறும் ஒரு நாழிகை நேரம் கவனிக்காவிடினும் அழிவுறும். பசுக்கள், தொழில் (பிழைப்பு) விவசாயம், மனைவி, கல்வி, நீசனுடன் உறவு.

षडेते ह्यवमन्यन्ते नित्यं पूर्वोपकारिणम् ।
आचार्यं शिक्षिताः शिष्याः कृतदाराश्च मातरम् ॥ 82

नारीं विगतकामाश्च कृतार्थाश्च प्रयोजकम् ।
नावं निस्तीर्णकान्तारा: नातुराश्च चिकित्सकम् ॥ 83

*இந்த அறுவரும் முன் உதவி செய்தவரை (தன் பணி முடிந்ததும்) பொருட்படுத்த மாட்டார்கள். ஆசார்யனை அவரால் போதிக்கப்பட்ட சீடர்களும், மணம் புரிந்தவர் தாயையும், காம மடங்கியவர் ஸ்த்ரீயையும் காரியம் முடித்துக் கொண்டவர் அதற்கு உதவியவரையும் கடும் கடலைத் தாண்டியவர் ஓடக்காரனையும் நோய் நீங்கியவர் மருத்துவரையும் பொருட்படுத்தமாட்டார். (அவர்களின் தேவை அகன்றதே காரணம்.)*

ईर्षुर्घृणी नसन्तुष्टः क्रोधनो नित्यशङ्कितः ।
परभाग्योपजीवी च षडेते नित्यदुःखिताः ॥ 84

*பொறாமை யுள்ளவன், கருணை யுள்ளவன், எதிலும் மனநிறைவு பெறாதவன், கோபிக்கிற வழக்கமுள்ளவன், எதையும் எப்போதும் சந்தேகிப்பவன், பிறரது செழிப்பில் வாழ்பவன் இவர் அறுவரும் எப்போதும் துயரடைவர்.*

சில "ஏழு"

सप्त दोषाः सदा राज्ञा हातव्याः व्यसनोदयाः ।
प्रायशो यैर्विनश्यन्ति कृतमूला अपीश्वराः ॥ 85

स्त्रियोऽक्षा मृगया पानं वाक्पारुष्यं च पञ्चमम् ।
महच्च दण्डपारुष्यं अर्थदूषणमेव च॥ 86

*அரசருக்கு இந்த ஏழும் கெடுதிக்குக் காரணமாகுபவை. வேரூன்றிய பேரரசர்களும் இவற்றால் அழிவர். பெண்களிடம் மோகம், சூதாட்டம், வேட்டை, மதுவருந்துதல், தடித்த பேச்சு, கடுந் தண்டனை, பொருளாதாரத்தின் கேடு. இவை அந்த ஏழு. (சுலோ. 38)*

சில 'எட்டு'

अष्टौ पूर्वनिमित्तानि नरस्य विनशिष्यतः ।
ब्राह्मणान् प्रथमं द्वेष्टि ब्राह्मणैश्च विरुध्यते ॥ 87

ब्राह्मणस्वानि चादत्ते ब्राह्मणांश्च जिघांसति ।
रमते निन्दया चैषां प्रशंसां नाभिनन्दति ॥ 88

नैनान्स्मरति कृत्येषु याचितश्चाभ्यसूयति ।
एतान् दोषान् नरः प्राज्ञो बुद्ध्या बुध्वा विसर्जयेत् ॥ ८९

*அழிய விருக்கின்ற மனிதனை அடையாளம் காட்டுகிற அவனது செயல்கள் எட்டு. அந்தணரை வெறுப்பான். அந்தணரால் வெறுக்கப் பெறுவான். அந்தணரின் உடைமைகளைப் பறிப்பான். அவர்களை அழிக்க முயல்வான். அவர்களைப் பற்றி அவதூறாகப் பேசி மகிழ்வான். அவர்கள் பாராட்டப் பெறுவதை விரும்பமாட்டான். அவர்களைக் காரியநேரத்தில் நினைவில் கொள்ள மாட்டான். அவர்கள் தன்னிடம் ஏதேனும் வேண்டினால் வெறியடைவான். அறிவாளி இந்த எட்டையும் சுய அறிவால் உணர்ந்து தவிர்க்க வேண்டும். (உலகினர் அனைவருக்கும் எக்காலும் நண்பனாகப் பழகுபவர் அந்தணர்.)*

अष्टाविमानि हर्षस्य नवनीतानि भारत ।
वर्तमानानि दृश्यन्ते तान्येव स्वसुखान्यपि ॥ 90

समागमश्च सखिभिः महांश्चैव धनागमः ।
पुत्रेण च परिष्वङ्गः सन्निपातश्च मैथुने ॥ 91

समये च प्रियालापः सयूथ्येषु समुन्नतिः ।
अभिप्रेतस्य लाभश्च पूजा च जनसंसदि ॥ 92

*இந்த எட்டும் மகிழ்ச்சியை வெண்ணெய் போல் திரட்டித் தருபவை. தானே உணர்ந்து ரசிக்கக் கூடியவை. நண்பர்களுடன் சேர்க்கை, பெருத்த பணவரவு, மகனைக் கட்டி அணைத்தல், இனிய மனைவியுடன் இணைதல், உரிய நேரத்தில்*

இனிய பேச்சு, தன் கூட்டாளிகளின் வளர்ச்சி, விரும்பியதைப் பெறுதல், மக்கள் கூட்டத்தில் பாராட்டப் பெறுதல் இவை அந்த எட்டு.

अष्टौ गुणाः पुरुषं दीपयन्ति प्रज्ञा च कौल्यं च दमः श्रुतं च।
पराक्रमश्चाबहुभाषिता च दानं यथाशक्ति कृतज्ञता च॥ 93

மனிதனை எட்டு குணங்கள் பெருமைப்படுத்துகின்றன. சுய அறிவு, நற்குலத் தோன்றல், புலனடக்கம், கல்வி, எதிர்ப்பு சக்தி, மிதமான பேச்சு, சக்திக் கேற்ற கொடை; நன்றியுணர்வு என்பவை அவை.

ஒரு ஒன்பது.

नवद्वारमिदं वेश्म त्रिस्थूणं पञ्चसाक्षिकम् ।
क्षेत्रज्ञाधिष्ठितं विद्वान् यो वेद स परः कविः॥ 94

ஒன்பது வாயில்கள் (இரு காதுகள் இரு கண்கள், இரு மூக்கு துவாரங்கள், வாய், மலவழி, சிறுநீர் வழி என) கொண்ட இந்த உடலெனும் வீட்டில் மூன்று தூண்கள் (வாயு பித்தம் கபம் என) ஐந்து சாட்சிகள். (பிருதிவி, ஜலம், நெருப்பு, வாயு, ஆகாசம் என ஐந்து பூதங்கள்) ஒரு உடமையாளன் (ஆத்மா) உண்டு என்பதை உணர்ந்தவனே அறிஞன்.

ஒரு 'பத்து'

दश धर्मं न जानन्ति धृतराष्ट्र निबोध तान् ।
मत्तः प्रमत्तः उन्मत्तः श्रान्तः क्रुद्धो बुभुक्षितः ॥ 95

त्वरमाणश्च लुब्धश्च भीतः कामी च ते दश ।
तस्मादेतेषु भावेषु न प्रसज्जेत पण्डितः ॥ 96

நல்லொழுக்கத்தை இந்தப் பத்து மனிதர்கள் உணர மாட்டார்கள். போதையிலுள்ளவன், கவனமில்லாதவன், பித்தன், களைத்தவன், கோபிப்பவன், பசித்தவன், அவசரப்படுபவன், பேராசையுள்ளவன், பயந்தவன், காம

மிக்கவன் என. இந்நிலை ஏற்படாதபடி பாதுகாத்துக் கொள்ள வேண்டும்.

अत्रैवोदाहरन्तीमं इतिहासं पुरातनम् ।
पुत्रार्थमसुरेन्द्रेण गीतं चैव सुधन्वना ॥ 97

*அசுரர் தலைவனான பிரஹ்லாதனுக்கும் ஸுதன்வா என்ற அந்தணனுக்கும் இடையே பிரஹ்லாதனின் குமாரன் விரோசனனைப் பற்றி நடந்த பேச்சுவார்த்தைப் பற்றி ஒரு வரலாற்றைக் கூறுவர். அதில் ஸுதன்வா சொன்ன நீதிகள் இவை. (இந்த வரலாறு 208வது ச்லோகத்தின் முன்னுரையில் காணப் பெறுகிறது ஸபா. 68 அத்).*

வெற்றிபெறுகிற அரசன்

यः काममन्यू प्रजहाति राजा पात्रे प्रतिष्ठापयते धनञ्च।
विशेषवित् श्रुतवान् क्षिप्रकारी तं सर्वलोकः कुरुते प्रमाणम्॥

*ஆசையையும் கோபத்தையும் விட்டவன், செல்வத்தைத் தக்கவர்களிடம் பாதுகாப்பாக வைத்தவன், பகுத்தறிவாளன், கல்வி நிறைந்தவன், சுறுசுறுப்புள்ளவன் இத்தகைய அரசரை நாட்டு மக்கள் ப்ரமாணமென நம்புவர்.*

जानाति विश्वासयितुं मनुष्यान् विज्ञातदोषेषु ददाति दण्डम्।
जानाति मात्रां च तथा क्षमां च तं तादृशं श्रीर्जुषते समग्रा॥

*பிறர் தன்னை நம்பும்படி நடக்கத் தெரிந்தவர், குற்றத்தை நன்கு தெரிந்த கொண்ட பின் தண்டிப்பவர், தண்டிக்கிற அளவை உணர்ந்தவர், அதே சமயம் மன்னிக்கவும் தெரிந்தவர், அத்தகையவரை செல்வமும் சீரும் உடனே சென்றடையும்.*

सुदुर्बलं नावजानाति कञ्चित् युक्तो रिपुं सेवते बुद्धिपूर्वम्।
न विग्रहं रोचयते बलस्थैः काले च यो विक्रमते स धीरः॥

*அறிவைச் சீரிய முறையில் செலுத்துபவன். தன் எதிரி வலிவில் குன்றியவனுயினும் அவனை மதிக்கத் தவறமாட்டான். போரில் பொருதிய நிலையிலும் கருத்துடன்*

*கவனித்து எதிரியுடன் கைகலப்பான். தன்னைவிட வலிவுமிக்கவனுடன் சண்டையை விரும்பமாட்டான். நேரம் பார்த்தே தன் வலிவைக் காட்டுவான்.*

प्राप्यापदं न व्यथते कदाचित् उद्योगमन्विच्छति चाप्रमत्तः।
दुःखं च काले सहते महात्मा धुरन्धरः, तस्य जिताः सपत्नाः॥
101

*நெருக்கடியைக் கண்டு கலங்கமாட்டான். கவனம் சிதறாதவனாகப் பணியில் இறங்குவான். பெருந்தன்மையுடையவனாக நேர்கிற துன்பத்தைப் பொறுத்துக் கொள்வான். பொறுப்பு ஏற்பான். இதனால் அவனது எதிரிகள் அவனிடம் தோற்றுவிடுவர்.*

अनर्थकं विप्रवासं गृहेभ्यः पापैः सन्धिं परदाराभिमर्शम् ।
दंभं स्तैन्यं पैशुनं मद्यपानं न सेवते यः स सुखी सदैव॥
102

*காரணமின்றி வீட்டைவிட்டு வெளியே தங்கமாட்டான். கெட்டவருடன் ஒப்பந்தம், பிறர் மனைவியைத் தீண்டுதல், போக்கிரித்தனம், திருட்டு, புறங்கூறல், மதுவருந்துதல் இவற்றில் ஈடுபடமாட்டான். அவன் எப்போதும் சுகமாக வாழ்வான்.*

न संरंभेणारभते त्रिवर्गं आकारितः शंसति तत्त्वमेव ।
न मित्रार्थे रोचयते विवादं ना पूजितः कुप्यति चाप्यमूढः॥ 103

*அறம் பொருள் இன்பம் என்ற நாடவேண்டியவற்றைக் கூட பரபரப்புடன் தொடங்கமாட்டார். கேட்கப்படும் போது உண்மையையே கூறுவர். நண்பனுக்காகக் கூட கருத்து மோதலை விரும்பமாட்டார். தன்னைப் பாராட்டாததற்காகச் சினம் கொள்ளமாட்டார். இவரே அறிஞர்.*

न योऽभ्यसूयत्यनुकम्पते च न दुर्बलः प्रातिभाव्यं करोति।
नात्याह किञ्चित्क्षमते विवादं सर्वत्र तादृग् लभते प्रशंसाम्॥ 104

பிறரிடம் அசூயைப் படாமல் பரிவுடன் நடப்பார். வலிவற்ற நிலையிலிருந்துகொண்டு பிறருக்காகப் பிணை நிற்கமாட்டார். அளவுக்கு மீறிப் பேசமாட்டார். பேச்சு முற்றிக்கலகம் நேரும்போது பொறுமை காட்டுவார். இவர் எங்கும் பாராட்டைப் பெறுவார்.

यो नोद्धतं कुरुते जातु वेषं न पौरुषेणापि विकत्थतेऽन्यान्।
न मूर्च्छितः कटुकान्याह किञ्चित् प्रियं सदा तं कुरुते जनो हि॥ 105

திமிர் பிடித்தவராகத் தன்னைக் காட்டிக் கொள்ளார். அகந்தையுடன் பிறரைத் தாழ்த்திப் பேசமாட்டார். உணர்ச்சிவசப்பட்டு கசப்பான சொற்களைக் கூறமாட்டார். அதனால் மக்கள் இவரை அன்புக்குரியவராகக் கொள்வர்.

न वैरमुद्दीपयति प्रशान्तं न दर्पमारोहति शान्तिमेति ।
न दुर्गतोऽस्मीति करोत्यकार्यं तमार्यशीलं परमाहुरार्याः ॥106

அடங்கிய பழைய விரோதத்தைக் கிளப்பிவிட மாட்டார். திமிர் காட்டாமல் அடங்கி அமைதியுடன் நடப்பார். தான் தாழ்நிலையை அடைந்ததற்காகத் தகாத செயலைச் செய்ய மாட்டார். இவரை நல்லொழுக்கமிக்கவர் எனப் பெரியோர் கருதுவர்.

न स्वे सुखे वै कुरुते प्रहर्षं नान्यस्य दुःखे भवति प्रहृष्टः।
दत्वा न पश्चात्कुरुतेऽनुतापं स कथ्यते सत्पुरुषार्यशीलः ॥ 107

தனது சுகத்தில் பெருமிதமோ, பிறரது துன்பத்தில் மகிழ்ச்சியோ கொள்ளாதவனும், தானமாக வழங்கிவிட்டுப் பின் அதனைப் பற்றி வருந்தாதவனும், நன்னடத்தை மிக்கவன்.

देशाचारान् समयान् जातिधर्मान् बुभूषते यस्य परावरज्ञः।
स यत्र तत्राभिगतः सदैव महाजनस्याधिपत्यं करोति ॥ 108

உள்ளூர் நடைமுறை, சமுதாய வழக்கம், இன வழக்கம் இவற்றின் கீழ் மேல் உணர்ந்து முடிந்தவரை இவற்றைக் கடைபிடிப்பவனுக்குச் சென்ற விடமெல்லாம் சிறப்பு. மக்கள் தலைவனாவான்.

दंभं मोहं मत्सरं पापकृत्यं राजद्विष्टं पैशुनं पूगवैरम्।
मत्तोन्मत्तैर्दुर्जनैश्चापि वादं यः प्रज्ञावान् वर्जयेत् सः प्रधानः ॥109

கர்வம், மதிமயக்கம், பொறாமை, தீச்செயல் புரிவது, அரசனிடம் விரோதம், புறங்கூறல், சமுதாய விரோதம், போதையில் உள்ளவனிடமும் பித்தனிடமும் கெட்டவனிடமும் கலகமிடுதல் இவற்றைச் சுயபுத்தி உள்ளவன் தவிர்க்க வேண்டும். இத்தகையவன் மக்கள் தலைவனாவான்.

दमं शौचं दैविकं मङ्गलानि प्रायश्चित्तान् विविधान् लोकवादान्।
एतानि यः कुरुते नैत्यकानि तस्योत्थानं देवता राधयन्ति॥ 110

புலனடக்கம், செய்யும் பணிக்கேற்ற உடல் மனத்தூய்மை, தெய்வ வழிபாடு, மங்களச் செயல்களில் ஈடுபாடு, செய்த தீச்செயலுக்கேற்ற கழுவாய் செய்தல், சமுதாய நலப்பணி இவற்றில் ஈடுபட்டவனின் மேலெழுச்சியை தேவர்கள் அருள்வார்கள்.

समैर्विवाहं कुरुते न हीनैः समैः सख्यं व्यवहारं कथां च।
गुणैर्विशिष्टांश्च पुरो दधाति विपश्चितस्तस्य नयाः सुनीताः॥ 111

தன்னோடு ஒத்தவருடன் மட்டும் திருமணம் முடிப்பான், அதுபோல், பழக்கம், பேச்சு வார்த்தை இவற்றை வைத்துக் கொள்வான். தன்னைவிடத்தாழ்ந்தவருடனல்ல. தன்னைவிடச் சிறந்தவரை முன்னே வைப்பான். அந்த அறிவாளியின் வாழ்க்கைமுறை பண்பட்டது.

मितं भुंक्ते संविभज्याश्रितेभ्यः मितं स्वपित्यमितं कर्म कृत्वा।
ददात्यमित्रेष्वपि याचितः सन् तमात्मवन्तं प्रजहत्यनर्थाः॥ 112

தன்னை அண்டியவர்களுடன் பகிர்ந்து, தான் அளவுடன் உண்பான். கடும் உழைப்பிற்குப் பின்னரும் அளவுடன் தூங்குவான். விரோதியாயினும் வேண்டினால் வாரி வழங்குவான். சுயவலிவுள்ள அவனை விட்டுக் கேடுகள் தானே அகலும்.

चिकीर्षितं विप्रकृतं च यस्य नान्ये जनाः कर्म जानन्ति किञ्चित्।
मन्त्रे गुप्ते सम्यगनुष्ठिते च नाल्पोऽप्यस्य च्यवते कश्चिदर्थः॥ 113

*அவன் செய்ய விரும்பியதையும் நேரத்தில் செய்யத் தவறியதையும் (தவருகச் செய்ததையும்) பிறர் அறியமாட்டார். செயலைப் பற்றி ரகசியமாக ஆலோசித்துத் திட்டமிட்டுச் செயலாற்றிய அவனது செயல்கள் என்றும் பயன் தராமல் வீணாவதில்லை.*

यः सर्वभूतप्रशमे निविष्टः सत्यो मृदुर्मानकृत् शुद्धभावः।
अतीव स ज्ञायते ज्ञातिमध्ये महामणिर्जात्य इव प्रसन्नः॥ 114

*எல்லா உயிரினத்துடனும் அமைதியுடன் வாழ்வதில் அக்கரையுள்ளவன், மெய்பேசுபவன், மென்மையுள்ளவன், பிறரை மதித்து நடப்பவன், தூய உள்ளமுள்ளவன், இத்தகையவன் உற்ருர் உறவினரிடையே உயர்ந்த ஜாதி ரத்தினம் போல் ஒளிமிக்கவனாக இருப்பான்.*

य आत्मनाऽपत्रपते भृशं नरः स सर्वलोकस्य गुरुर्भवत्युत।
अनन्ततेजाः सुमनाः समाहितः स तेजसा सूर्य इवावभासते॥ 115

*தன்னிடமுள்ள குறைகளை உணர்ந்து வருந்துபவன் உலகிற்கு வழிகாட்டியாகிருன். திருந்தியபின் நல்மனமும் அமைதியும் கொண்டு பேரொளிமிக்கவனுக பேரொளியால் சூரியனுக்கு ஒப்பாக விளங்குவான். (இவ்வாறு ஸுதன்வா பிரஹ்லாதனுக்கு நீதி போதித்தான்.)*

பாண்டவரது நலம் கருதுவீர்

वने जाताः शापदग्धस्य राज्ञः पाण्डोः पुत्राः पञ्च पञ्चेन्द्रकल्पाः।
त्वयैव बाला वर्धिताः शिक्षिताश्च तवादेशं पालयन्ति आम्बिकेय॥ 116

*அம்பிகை மைந்தனே! (மானாகி நின்ற ருஷியின்) சாபத்தால் தன் நிலை இழந்த பாண்டுவின் ஐந்து குமாரர்களும் காட்டில் பிறந்தவர்கள். சிறுவர்களான அவர்கள் ஐவரும் ஐந்து இந்திரர்களுக் கொப்பானவர்கள். நீரே அவர்களை வளர்த்துக்*

கல்வி புகட்டினீர். அவர்கள் உமது கட்டளையை எப்போதும் நிறைவேற்றுகின்றனர்.

(சிவனும் பார்வதியும் கைலாசத்தில் விளையாடிக் கொண்டிருந்தனர். அங்கு சென்ற இந்திரன் அவர்கள் யார் என்பதை அறியாமல் செருக்கால் திரிலோகாதிபதியான தன்னை வரவேற்காமலிருப்பதாகச் சிவனை குற்றம் சாட்டினான். இந்திரனது செருக்கை அடக்க அவனைச் சிவன் சிறையில் அடைத்தார். இவனுக்கு முன்னரே நான்கு இந்திரர்கள் சிவனிடம் தவருக நடந்தமைக்காக சிறைப்பட்டிருந்தனர். இந்த இந்திரனும் அந்த நால்வரும் சிவனிடம் மன்னிப்பு கோர பாண்டவர்களாகப் பிறந்து சாபத்திலிருந்துவிடுபட அருளினார். அதனால் ஐந்து இந்திரர்களே பாண்டவர்களாகப் பிறந்தனர் என்பதை விதுரர் சுட்டிக்காட்டுகிறார்).

प्रदायैषां उचितं तातराज्यं सुखी पुत्रैः सहितो मोदमानः ।
न देवानां नापि च मानुषाणां भविष्यसि त्वं गर्हणीयो नरेन्द्र ॥ 117

பாண்டவர்களுக்கு உரித்தான அவர்களது தந்தை ஆண்ட அரசைத் தந்து நீரும் உமது புதல்வர்களுடன் மகிழ்ச்சியுடன் சுகமாக தேவர்களும் மனிதர்களும் உம்மை நிந்திக்காதபடி வாழ்வீர்.

★ ★ ★

# विदुरनीतिः
## द्वितीयोऽध्यायः
# விதுர நீதி
## இரண்டாம் அத்தியாயம்

धृतराष्ट्रः उवाच- *திருதராஷ்டிரர் கேட்கிறார்*

जाग्रतो दह्यमानस्य यत्कार्यमनुपश्यसि ।
तद्ब्रूहि त्वं हि नस्तात धर्मार्थकुशलः शुचिः ॥ 118

तस्माद्यथावद्विदुर प्रशाधि प्रज्ञापूर्वं सर्वमजातशत्रोः ।
यन्मन्यसे पथ्यमदीनसत्त्व श्रेयस्करं ब्रूहि तद्वै कुरूणाम् ॥ 119

पापाशङ्की पापमेवानुपश्यन् पृच्छामि त्वां व्याकुलेनात्मनाहम् ।
कवे तन्मे ब्रूहि तत्त्वं यथावन् मनीषितं सर्वमजातशत्रोः ॥ 120

*ஐயனே! உறக்கமின்றி விழித்தும் தபித்தும் கொண்டிருக்கிற நான் எதனைச்செய்ய வேண்டும் என்று கருதுகிறாயோ அதனைக் கூறுவாய். நம் குலத்தில் நீ ஒருவனே, தர்மமும் பொருளாதாரமும் நன்கு உணர்ந்தவன். தூயவனும் கூட. தர்மபுத்திரனுக்கு எதிரியே தோன்றியதில்லை. அவனுக்கும் எது நல்லதோ, குருவம்சத்திற்கு எது மேன்மை தரக்கூடியதோ அதனைச் சொல்வாய். எப்போது கெடுதி நேருமோ என்று பயந்து கெடுதியையே எப்போதும் எதிர்பார்த்துக் கலங்கியவனாக நான் உன்னைக் கேட்கிறேன். தர்மபுத்திரன் என்ன செய்ய விரும்புகிறான்? உண்மையை முழுவதும் கூறுவாய்.*

विदुरः उवाच *விதுரர் கூறுகிறார்*

शुभं वा यदि वा पापं द्वेष्यं वा यदि वा प्रियम् ।
नापृष्टः कस्यचिद्ब्रूयात् यस्य नेच्छेत्पराभवम् ॥ 121

*நல்லதோ கெட்டதோ, பிரியமானதோ வெறுப்பிற் குரியதோ, பிறர் அதனை அறிய விரும்பிக் கேட்காதபோது சொல்லக்கூடாது. அவமதிப்பு ஏற்படாதிருக்க விரும்பினால் கேட்கப்படாதவரை சொல்லக் கூடாது. (நம்மைச் சார்ந்தவருக்கு அவமதிப்பு ஏற்படாதிருக்க விரும்பினால் அவர் கேட்காவிடினும், நல்லதையோ கெட்டதையோ பிரிய மானதையோ வெறுப்பதையோ தானறிந்ததை உள்ளபடி சொல்லத்தான் வேண்டும் என்ற மாறுபட்ட பொருளையும் கூறுவதுண்டு.* **ना पृष्टः - न आपृष्टः** *விவரமாகக் கேட்கப் படாவிடினும்).*

**तस्माद्वक्ष्यामि ते राजन् हितं यत्स्यात्कुरून् प्रति।**
**वचः श्रेयस्करं धर्म्यं ब्रुवतस्तन्निबोध मे ।।** 122

*அதனால் குருவம்சத்தினருக்கு நன்மையளிக்கவல்ல தர்மத்தை ஒட்டிய வழியைக் கூறுகிறேன். புரிந்து கொள்வீர்.*

பின் விளைவு பற்றி சிந்தனை

**मिथ्योपेतानि कर्माणि सिद्ध्येयुर्यानि भारत ।**
**अनुपायप्रयुक्तानि मास्म तेषु मनः कृथाः ।।** 123

*வஞ்சகமாக முறை தவறிச் செய்கிற செயல்கள் (தற்சமயம்) பலனைத் தரும். தாற்காலிக நன்மை தரும். அவற்றில் மனத்தைச் செலுத்தாதீர்.*

**तथैव योगविहितं यत्तु कर्म न सिद्ध्यति ।**
**उपाययुक्तं मेधावी न तत्र ग्लापयेन्मनः ।।** 124

*முறைப்படி நேர்மையான வழியில் செய்த செயலும் பலன் தராமலாகலாம். அறிவாளி அதனால் மனம் நோகக்கூடாது. (பலன் தராததாயினும் நன்மை பயக்கக் கூடும் என்று நம்பித் தொடர்ந்து செயல்பட வேண்டும்.)*

**अनुबन्धानवेक्षेत सानुबन्धेषु कर्मसु ।**
**संप्रधार्य च कुर्वीत सहसा न समाचरेत् ।।** 125

*ஒவ்வொரு செயலும் பலவற்றுடன் தொடர்புள்ள படியால் பின் விளைவு பற்றிச் சிந்திக்க வேண்டும். நன்கு யோசித்துச் செயல்படவேண்டும். முறை தவறி, உணர்ச்சிவசப்பட்டுச் செயல்படக் கூடாது.*

अनुबन्धं च संप्रेक्ष्य विपाकं चैव कर्मणाम् ।
उत्थानमात्मनश्चैव धीरः कुर्वीत नैव वा ॥ 126

*பின் விளைவைப் பற்றி நன்கு சிந்தித்து, செயல் அமையும் போக்கையும் தன் சக்தி (முயற்சி)யையும் கணக்கிட்டு செய்வதா செய்யாமலிருப்பதா என்ற முடிவிற்கு வரவேண்டும்.*

यः प्रमाणं न जानाति स्थाने वृद्धौ तथा क्षये।
कोशे जनपदे दण्डे न स राज्येऽवतिष्ठते॥ 127

*தன் நிலே, பொருளாதாரம், நாட்டின் நிலே, ஆட்சியின் தரம், நிறைவு, குறை இவற்றின் அளவு தெரியாமல் செயல்படுகிற அரசன் ஆட்சியில் நிலேக்கமாட்டான்.*

यस्त्वेतानि प्रमाणानि यथोक्तान्यनुपश्यति ।
युक्तो धर्मार्थयोर्ज्ञाने स राज्यमधिगच्छति ॥ 128

*முன் கூறியவற்றின் நிலே, அளவு பற்றி நன்கு தொடர்ந்து கண்காணித்து, தர்மத்தையும் பொருளாதாரத்தையும் சீர்தூக்கிப்பார்ப்பவனே ஆட்சியை வசப்படுத்துகிறான்.*

அரசும் வரியும்.

न राज्यं प्राप्तमित्येव वर्तितव्यमसांप्रतम् ।
श्रियं ह्यविनयो हन्ति जरा रूपमिवोत्तमम् ॥ 129

*ஆட்சி தம் வசமுள்ளதென்ற மிதப்பில் இருப்பது நல்லதல்ல. நல்வழிப்படாதிருத்தல் செல்வத்தை அழித்திடும். முதுமை அழகை அழிப்பதுபோல். (அழகாக இருக்கிறோம் என்ற மெத்தனம் நொடிக்கு நொடி கிழத்தன்மை வருவதை உணர முடியாமல் செய்துவிடும். கவனக் குறைவும், மெத்தனமும் ஆட்சி நழுவி வருவதை உணரவிடாது.)*

भक्ष्योत्तमप्रतिच्छन्नं मत्स्यो बडिशमायसम् ।
अन्नाभिलाषी ग्रसते नानुबन्धमवेक्षते ॥ 130

*மீன் உணவை விரும்பி இனிய தின்பண்டத்தால் மறைக்கப்பட்ட இரும்புத் தூண்டிலை விழுங்கிகுகிறது. ஆனால் அதன் பின் விளைவைக் கவனிப்பதில்லை.*

यच्छक्यं ग्रसितुं ग्रास्यं ग्रस्तं परिणमेच्च यत् ।
हितं च परिणामे यत् तदाद्यं भूतिमिच्छता ॥ 131

*விழுங்கத்தக்கதும் விழுங்கமுடிந்ததும் செரிக்கக் கூடியதும், செரித்தபின் உடலுக்கு இதமுமானதையே உடல் நலனை விரும்பியவன் சாப்பிட வேண்டும்.*

वनस्पतेरपक्वानि फलानि प्रचिनोति यः ।
स नाप्नोति रसं तेभ्यो बीजं चास्य विनश्यति॥ 132

*மரத்திலிருந்து முதிர்ந்து பழுக்காத காய்களைப் பறிப்பவன் அவற்றின் சாற்றையும் பெறுவதில்லை. அதன் விதையும் (முதிராமல் மறுபடி முளைக்க இயலாதபடி) அழிகிறது.*

यस्तु पक्वमुपादत्ते काले परिणतं फलम् ।
फलाद्रसं स लभते बीजाच्चैव फलं पुनः ॥ 133

*உரிய காலத்தில் முதிர்ந்து பழுத்த பழத்தை எடுப்பவன் பழத்திலிருந்து சாற்றையும் பெறுகிறான். விதையிலிருந்து (விதை மரமாகிக் காய்த்துப்பின்) பழத்தையும் மறுபடி பெறுகிறான்.*

यथा मधु समादत्ते रक्षन्पुष्पाणि षट्पदः ।
तद्वदर्थान्मनुष्येभ्यः आदद्यादविहिंसया ॥ 134

*எப்படித் தேனீ பூக்களைக் காப்பாற்றிக் கொண்டே தேனை எடுக்கிறதோ, அதுபோல் மனிதர்களிடமிருந்து பொருளைத் துன்புறுத்தாமலே எடுத்துக்கொள்ள வேண்டும். (தேனீ பூக்களிலிருந்து தேனைச் சேகரிக்கும்போது பூமீது அமராமல் கொஞ்சி முத்தமிடுவதுபோல் பூக்களுக்கு ஆனந்தமளித்துக்*

கொண்டு மகரந்தத்தை உறுஞ்சுகிறது. பூ பின்னர் விதையாகி மற்றொரு செடியாவதற்குத் தேனீயே உதவுவதும் உண்டு. அரசன் வரியை மக்களிடமிருந்து பெறும்போது துன்புறுத்தாமலும், வரியைக் கொடுப்பதில் அவர்களுக்கு மகிழ்ச்சி ஏற்படுமாறும், வரியைப் பெறுகிற அரசன் மக்களின் நல்வாழ்விற்கு உதவுவதை உணர்த்துவதாவும் அது அமைய வேண்டும்.)

पुष्पं पुष्पं विचिन्वीत मूलच्छेदं न कारयेत् ।
मालाकार इवारामे न यथाङ्गारकारकः ॥ 135

தோட்டத்திலிருந்து மாலை தொடுப்பதற்காக பூவைப் பறிப்பவன் (மற்ற பகுதிகளுக்குச் சேதம் விளைவிக்காமல்) எப்படிப் பூவை மட்டும் பறிக்கிறானோ, செடிக்கு (அதன் வேருக்கு) ஆபத்து வராமல் அதனைச் செய்கிறானோ, அதுபோல் அரசன் வரியைப் பெற வேண்டும். (எரிபொருளாக) கரியாக்கிவிற்கிறவன் போல் தேவையிராமல் வேருடன் பிடுங்கி அழிக்கக் கூடாது. (பூக்காரனுக்கு அந்த பூச்செடி மறுநாளும் தேவை. அதனால் செடிக்கு நீரூற்றி வளர்த்துச் சேதமின்றி பூவை மட்டும் பறிப்பான். கரியாக்குபவனோ அதன் அழிவிலேயே குறியுள்ளவன். வேருடன் களைந்து எரிக்கத் தயங்கமாட்டான். மக்கள் சீராக வாழ்ந்தால் வரிதொடர்ந்து கிட்டும். வரி பெறும் முயற்சியில் மக்கள் அழிந்தார்களே எனில் மறுபடி வரிபெற வாய்ப்பே இல்லை. பொன் முட்டை இடும் வாத்தைக் காப்பது போல் மக்களை மென்மையுடன் கவனத்துடன் பாதுகாப்பது அவசியம்.)

किं नु मे स्यादिदं कृत्वा किं नु मे स्यादकुर्वतः ।
इति कर्माणि संचिन्त्य कुर्याद्वा पुरुषो न वा ॥ 136

இதனைச் செய்வதால் எனக்கு என்ன நேரும்? இதனைச் செய்யாததால் என்ன நேரலாம் என ஒவ்வொரு செயலையும் ஆராய்ந்து செய்யலாம்; செய்யாமலுமிருக்கலாம்.

வீணே செயல்படுபவர்

अनारभ्या भवन्त्यर्थाः केचिन्नित्यं तथाऽगताः ।
कृतः पुरुषकारो हि भवेद्येषु निरर्थकः ॥ 137

*சில செயல்களைத் தொடங்கவே கூடாது. சிலவற்றைச் செய்தாலும் முன் நிலைபோல் தானிருக்கும். (பலன் எதுவும் ஏற்படாது). அவற்றிற்காகச் செய்த முயற்சியும் உழைப்பும் வீணாகும்.*

अनर्थे चैव निरतं अर्थे चैव पराङ्मुखम् ।
न तं भर्तारमिच्छन्ति षण्डं पतिमिव स्त्रियः ॥ 138

*பலனற்றதில் ஈடுபடுபவனும், பலன் தருவதில் பராமுகமாயிருப்பவனுமான குடும்பத்தின் அல்லது அரசின் தலைவனை எவரும் விரும்ப மாட்டார்கள். நபும்ஸகனை கணவனைப் பெண்கள் போல்.*

प्रसादो निष्फलो यस्य क्रोधश्चापि निरर्थकः ।
न तं भर्तारमिच्छन्ति षण्डं पतिमिव स्त्रियः ॥ 139

*எவன் சுமுகமாயிருப்பது எந்தப் பயனையும் விளைவிக்காதோ, கோபமும் பயனற்றதோ அவனைத் தலைவராக்கிக் கொள்ள எவரும் விரும்புவதில்லை. நபும்ஸகனைப் பெண்கள் போல்.*

कांश्चिदर्थान्नरः प्राज्ञो लघुमूलान्महाफलान् ।
क्षिप्रमारभते कर्तुं न दीर्घयति तादृशान् ॥ 140

*அறிவாளியான மனிதன் முதலீடு குறைவாகவும், பலன் அதிகமாகவுமுள்ள செயலை விரைவில் செய்யத் தொடங்குவான். அத்தகையதைத் தாமதிக்க விடமாட்டான்.*

மக்கள் விரும்பும் அரசன்

ऋजु पश्यति यः सर्वं चक्षुषा नु पिबन्निव ।
आसीनमपि तूष्णीकं अनुरज्यन्ति तं प्रजाः ॥ 141

*மௌனமாக எதனையும் செய்யாதிருந்தாலும், நேர்மையுடன் கண்களால் பருகுபவன்போலப் பேராவலுடன் கண்காணிப்பவனை மக்கள் பிரியத்துடன் பின்பற்றுவர்.*

सुपुष्पितः स्यादफलः फलितः स्याद्दुरारुहः ।
अपक्वः पक्वसङ्काशो न तु शीर्येत कर्हिचित् ॥ 142

ஒரு மரம் நன்கு பூத்திருக்கும். காய்த்திருக்காது. (பார்த்துத் திருப்தி அடையலாம்). காய்த்திருக்கும். எளிதில் அதன்மேல் ஏற முடியாது. (காய் நிலேயிலேயே எவனும் பறித்துவிட மாட்டான்.) காய் முதிர்ந்திருக்கும். ஆனால் பழுத்த பழம் போல் காணும். (தேவையுள்ளவன் பழத்தைப் பறித்துக் கொள்வான். பறித்தவனும் மகிழ்வான். மரத்திற்கும் சேதமில்லே). ஆனால் அந்தமரம் பட்டுப்போகக் கூடாது. (அதனே யாரும் சீண்டமாட்டார். அந்த மரம் போல் அரசன். அரசன் மக்களிடம் பிரியத்தைக் காட்டவேண்டும். (பூ) மக்களுக்கு உதவ இருப்பவனுகக் காட்டிக் கொள்ள வேண்டும். (காய்) அதேசமயம் மக்கள் எளிதில் அரசனே நெருங்கக் கூடாது. அரசனது முயற்சிகள் நிறைவுற்று பலன் தரும் தருவாயில் தான் மக்களுக்கு அரசனே நன்மை தருவான். மக்களே நன்மை பெற முந்தக் கூடாது. அரசனிட முள்ள குறைகள் மக்கள் கண்களில் படாதவாறு பாதுகாக்க வேண்டும். முன் சொன்ன பூ-காய்-பழ நிலேகளில் கவனத்துடன செயல்படுகிற அரசன் மக்களின் பார்வையில் குறையுள்ளவனுகப் படமாட்டான்.)

चक्षुषा मनसा वाचा कर्मणा च चतुर्विधम् ।
प्रसादयति यो लोकं तं लोकोऽनुप्रसीदति ॥ 143

கண், மனம், வாக்கு, செயல் இவற்றால் மக்களே மகிழ்விக்கின்ற அரசனே மக்கள் மகிழ்விப்பர்.

यस्मात् त्रस्यन्ति भूतानि मृगव्याधात् मृगा इव ।
सागरान्तामपि महीं लब्ध्वा स परिहीयते ॥ 144

வேடனேக் கண்டு மான்கள்போல் எந்த அரசனேக் கண்டு மக்கள் திகிலுறுகிறார்களோ அவன் கடல்வரை விரிந்த அரசைப் பெற்றும் குறையுள்ளவனே.

पितृपैतामहं राज्यं प्राप्यापि स्वेन कर्मणा ।
वायुरभ्रमिवासाद्य भ्रंशयत्यनये स्थितः ॥ 145

*தந்தை பாட்டன் வழியேவந்த நிலைத்த அரசைத் தன் செயல் முறைகளால் முழுவதும் பெற்றிருந்தும் நேர்மையின்மையில் ஊறிய அரசன் காற்று மேகத்தைச் சிதற அடிப்பதுபோல் அரசைச் சிதறச் செய்வான்.*

சீரிய ஆட்சி முறை

धर्ममाचरतो राज्ञः सद्भिश्चरितमादितः ।
वसुधा वसुसंपूर्णा वर्धते भूतिवर्धिनी ॥ 146

*பெரியோர்கள் ஆதிமுதல் நடைமுறையாகக் கொண்டிருந்த தர்மத்தைக் கடைபிடிக்கிற அரசனுக்கு பூமி, செல்வம் நிரம்பியதாக செழிப்பைப் பன் மடங்கு பெருக்குவதாக விரிந்து கொண்டே இருக்கும்.*

अथ सन्त्यजतो धर्मं अधर्मं चानुतिष्ठतः ।
प्रतिसंवेष्टते भूतिरग्नौ चर्माहितं यथा ॥ 147

*தர்மத்தைக் கைவிட்டு அதர்மத்தையே விடாப்பிடியாகத் தொடர்பவனது செல்வம் நெருப்பிலிட்ட தோல் போல் கருகிச் சுருங்கிவிடும்.*

य एव यत्नः क्रियते परराष्ट्रविमर्दने ।
स एव यत्नः कर्तव्यः स्वराष्ट्रपरिपालने ॥ 148

*எதிரியின் நாட்டை அழிப்பதில் காட்டுகிற முயற்சியின் அளவே, தன் நாட்டைக் காப்பதிலும் காட்டப்பட வேண்டும்.*

धर्मेण राज्यं विन्देत धर्मेण परिपालयेत् ।
धर्ममूलां श्रियं प्राप्य न जहाति न हीयते ॥ 149

*ஆட்சியை தர்மத்தால் பெற வேண்டும். தர்மத்தால் காக்க வேண்டும். தர்மத்தின் மூலம் பெற்ற சீரும் அகலாது. இவனும் சீரைப் பிரிய மாட்டான்.*

अप्युन्मत्तात्प्रलपतो बालाच्च परिजल्पतः ।
सर्वतः सारमादद्यात् अश्मभ्य इव काञ्चनम् ॥ 150

*பிதற்றுகிற பித்தனுயினும், மழலை பேசுகிற சிறுவனுயினும் அவர்களிடமிருந்து உண்மையை ஏற்க வேண்டும். மண்கட்டியிலிருந்து தங்கத்தைப் பெறுவதுபோல்.*

सुव्याहृतानि महतां सुकृतानि ततस्ततः ।
सञ्चिन्वन् धीर आसीत शिलाहारी शिलं यथा ॥ 151

*விவசாயி நெற்கதிர்களை அறுத்துச் சென்ற பின் களத்தில் உதிர்ந்து கிடக்கின்ற நெல்மணிகளைப் பொறுக்கி அதனை உணவாக்கிக் கொள்கிறவன் நெல் மணிகளைச் சேமிப்பதுபோல் கவனத்துடன் பெரியோர்களின் சொல் மணிகளையும் செயல்களையும் சேகரிக்க வேண்டும்.*

गन्धेन गावः पश्यन्ति वेदैः पश्यन्ति ब्राह्मणाः ।
चारैः पश्यन्ति राजानः चक्षुर्भ्यामितरे जनाः ॥ 152

*மற்ற மக்கள் கண்களால் பார்த்து உணர்வது போல் முகர்வதன் மூலம் பசுக்கள் பொருளைக் கண்டுபிடிக்கும். வேதத்தின்மூலம் அந்தணரும், ஒற்றர்கள் மூலம் அரசரும் நிலை உணர்வார்கள்.*

भूयांसं लभते क्लेशं या गौर्भवति दुर्दुहा ।
अथ या सुदुघा राजन्नैव तां वितुदन्त्यपि ॥ 153

*கறப்பதற்கு இடம் கொடுக்காத முரட்டுப் பசு பலதுன்பங்களை (கால்கள் கட்டுப்பட்டு, மூக்கணாங்கயிற்றில் பிணைக்கப்பட்டு) வேதனையுறும். எளிதில் கறக்க முடிகிற பசுவைச் சிறிதும் எவரும் துன்புறுத்துவதில்லை.*

यदतप्तं प्रणमति न तत्सन्तापमर्हति ।
यच्च स्वयं नतं दारु न तत्सन्नामयेद्बुधः ॥ 154

एतयोपमया धीरः सन्नमेत बलीयसे ।
इन्द्राय स प्रणमते नमते यो बलीयसे ॥ 155

*எது நெருப்பில் வாட்டப் பெறாமலே வளைகிறதோ அதைக் காய்ச்சுவதில்லை. தானே வளைந்த மரத்தை அறிவாளி வளைக்கமாட்டான். இதனை முன் மாதிரியாகக் கொண்டவன் வலிவுமிக்கவன் முன் பணிவான். வலிவு மிக்கவனிடம் பணிபவன் இந்திரனிடம் பணிபவனாகிறான்.*

पर्जन्यनाथाः पशवो राजानो मन्त्रिबान्धवाः ।
पतयो बान्धवाः स्त्रीणां ब्राह्मणा वेदबान्धवाः ॥ 156

*பசுக்களுக்கு மழையே நாதன். அரசர்களுக்கு மந்திரியே பந்து. பெண்களுக்குக் கணவனே பந்து. அந்தணர்கள் வேதத்தையே பந்துவாகக் கொண்டவராம். (நெருக்கடியில் நாடக் கூடியவன் நாதன். நெருக்கடியில் கட்டி அணைத்து உதவுபவன் பந்து).*

सत्येन रक्ष्यते धर्मो विद्या योगेन रक्ष्यते ।
मृजया रक्ष्यते रूपं कुलं वृत्तेन रक्ष्यते ॥ 157

*தர்மம் ஸத்தியத்தாலும் கல்வி செயல்முறைப்பழக் கத்தாலும், அழகு தேய்த்துக் குளிப்பதாலும் குலம் ஒழுக்கத்தாலும் காப்பாற்றப்படுகின்றது.*

मानेन रक्ष्यते धान्यं अश्वान् रक्षेदनुक्रमात् ।
अभीक्ष्णदर्शनाद् गावः स्त्रियो रक्षेत्कुचेलतः ॥ 158

*தானியத்தை அளந்து அளந்து காப்பாற்ற வேண்டும. குதிரைகளை தேகப்பயிற்சி மூலமும், பசுவை அடிக்கடி கண் காணிப்பதன் மூலமும் காக்க வேண்டும். பெண்களை கந்தலாடைகளைக் கொண்டாவது மானத்துடனிருக்கக் காக்க வேண்டும். (பெண்களைக் கந்தலான ஆடை அணியாதவாறு நல்லாடை அளித்துக் காக்கவேண்டும் என்றும் பொருள்படும்.)*

न कुलं वृत्तहीनस्य प्रमाणमिति मे मतिः ।
अन्त्येष्वपि हि जातानां वृत्तमेव विशिष्यते ॥ 159

*ஒழுக்கக் குறைவுள்ளவனுக்கு குலம் ஏற்றம் தராது. கீழ் இனத்தில் பிறந்தவனுக்கும் ஒழுக்கம் சிறப்பு தரும்.*

य ईर्षुः परवित्तेषु रूपे वीर्ये कुलान्वये ।
सुखसौभाग्यसत्कारे तस्य व्याधिरनन्तकः ॥ 160

*பிறரது செல்வத்திலும் அழகிலும் வீரத்திலும் குலப் பெருமையிலும் சுகத்திலும் பாக்கியத்திலும் அவனுக்குக் கிடைக்கிற பாராட்டிலும் பொறாமைப் படுவோர் முடிவற்ற நோய்க்கு ஆளாவர்.*

अकार्यकरणाद्भीतः कार्याणां च विवर्जनात् ।
अकाले मन्त्रभेदाच्च येन माद्येन्न तत्पिबेत् ॥ 161

*செய்யக் கூடாததைச் செய்வதிலிருந்தும், செய்யத் தக்கவற்றைக் கைவிடுவதிலிருந்தும், உரியதல்லாத நேரத்தில் ரகசியமாக நடத்த வேண்டிய ஆட்சித் திட்டம் வெளியாவதிலிருந்தும், பயந்தவன் (இவை நடக்கக் கூடாதென விரும்புபவன்) மதிமயக்கத்தைத் தரக்கூடிய மதுபானங்களைத் தவிர்க்க வேண்டும்.*

विद्यामदो धनमदस्तृतीयोऽभिजनो मदः ।
मदा एतेऽवलिप्तानां एत एव सतां दमाः ॥ 162

*கல்வியும் செல்வமும் குலப் பிறப்பும் திமிர் உள்ளவனிடம் செருக்காக உருவெடுக்கும். நல்லோர் களிடத்தில் இவையே கட்டுப்பாட்டிற்கு வழிகோலும்.*

असन्तोऽभ्यर्थिताः सद्भिः क्वचित्कार्ये कदाचन ।
मन्यन्ते सन्तमात्मानं असन्तमपि विश्रुतम् ॥ 163

*கெட்டவன், தன்னை உலகம் கெட்டவன் என மதிப்பதை உணர்ந்திருந்தாலும், என்றோ எதற்காகவோ நல்லவர்கள் அவனை நாடினால், அவன் தன்னை நல்லவன் என்றே*

நம்பிவிடுகிறான். (உலகம் அவனைக் கெட்டவனாக மதிப்பது தவறு என்று எண்ணுவான்.)

गतिरात्मवतां सन्तः सन्त एव सतां गतिः ।
असतां च गतिः सन्तः न त्वसन्तः सतां गतिः ॥ 164

தன்னடக்கமுள்ளவர்களுக்கும் நல்லோரே கதி (போக்கிடம்). நல்லோருக்கும் நல்லோரே கதி. கெட்டவருக்கும் நல்லோரே கதி. கெட்டவர் எவருக்கும் கதியல்ல

மனிதனின் மதிப்பு

जिता सभा वस्त्रवता मिष्टाशा गोमता जिता ।
अध्वा जितो यानवता सर्वं शीलवता जितम् ॥ 165

நல்லாடை உடுத்தியவனை சபை மதிக்கும். பசுக்கள் நிறைந்தவன் ருசிமிக்க உணவை நிரம்பப் பெறுவான். வாகனமுள்ளவன் எளிதில் நெடுந்தூரப் பயணம் செய்வான். நல்லொழுக்க முள்ளவன் அனைத்தையும் எளிதில் வெல்வான்.

शीलं प्रधानं पुरुषे तद्यस्येह प्रणश्यति ।
न तस्य जीवितेनार्थः न धनेन न बन्धुभिः ॥ 166

ஒழுக்கம் ஒன்றே மனிதனுக்கு முக்கியம். அது அழியுமானால் நீண்ட ஆயுளாலோ செல்வத்தாலோ உற்றார் உறவினராலோ ஆவதொன்று மில்லை.

आढ्यानां मांसपरमं मध्यानां गोरसोत्तरम् ।
तैलोत्तरं दरिद्राणां भोजनं भरतर्षभ ॥ 167

செல்வந்தர்களுக்கு மாம்ஸம் அதிகமானதும் நடுத்தரத்திலுள்ளவர்களுக்கு பால் தயிர் அதிகமானதும ஏழைகளுக்கு எண்ணெய் அதிகமானதுமான உணவு விரும்பத்தக்கது.

संपन्नतरमेवान्नं दरिद्रा भुञ्जते सदा ।
क्षुत् स्वादुतां जनयति सा चाढ्येषु सुदुर्लभा ॥ 168

ஏழை மக்கள் தம் உணவை ருசிமிக்கதாக உணர்ந்தே சாப்பிடுவர். பசிதான் உணவில் ருசியைக் கூட்டுகிறது. செல்வந்தர்களிடத்தில் பசி காணக்கிடைக்காதது.

प्रायेण श्रीमतां लोके भोक्तुं शक्तिर्न विद्यते ।
जीर्यन्त्यपि हि काष्ठानि दरिद्राणां महीपते ॥ 169

அனேகமாக உலகில் செல்வந்தருக்கு சாப்பிட்டதைச் செரிக்கின்ற சக்தி இருப்பதில்லை. ஏழைகளுக்கு மரக்கட்டையும் செரித்து விடும்.

முன் கவனம் தேவை

अवृत्तिर्भयमन्त्यानां मध्यानां मरणाद्भयम् ।
उत्तमानां तु मर्त्यानां अवमानात्परं भयम् ॥ 170

கீழ்த்தர மக்களுக்கு பிழைக்க வழியின்மையில் பயம். நடுத்தரமனிதருக்கு மரணத்தில் பயம். உயர் நிலை மனிதருக்கு அவமானத்தில் பெரும் பயம்.

ऐश्वर्यमदपापिष्ठाः मदाः पानमदादयः ।
ऐश्वर्यमदमत्तो हि नापतित्वाऽवबुध्यते ॥ 171

மதுபானத்தால் ஏற்படும் மதிமயக்கத்தைவிட செல்வச் செருக்கால் ஏற்படும். மதிமயக்கம் அதிகமாகப் பாபச் செயலைச் செய்யத் தூண்டும். (மற்ற போதைப் பொருளில் நடுநடுவே தெளிவு காணப்படும். பாபச் செயல்களின் இடையே தெளிவே வராது.) செல்வச் செருக்கால் மயக்க முற்றவன் முழுவதும் சறுக்கி விழுந்த பின்னரே விழித்துக் கொள்வான்.

इन्द्रियैरिन्द्रियार्थेषु वर्तमानैरनिग्रहैः ।
तैरयं तप्यते लोकः नक्षत्राणि ग्रहैरिव ॥ 172

கட்டுப்பாடின்றி செயல்படுகின்ற கண் முதலிய இந்திரியங்கள் தான் விரும்பிய வற்றையே பெற முனைவதால் மனிதன் வாட்டப் பெறுகிறான். நட்சத்திரங்கள் சூரியன் முதலிய கிரகங்களால் போல். (நட்சத்திரங்கள் தனித்து

*நல்லதையோ கெட்டதையோ செய்வதில்லை. ஆனால் அவற்றில் அமர்ந்த கிரகங்கள் செய்கிற நல்லது கெட்டதை இவை செய்வதாக கூறப்படுகின்றது. அதுபோல இந்திரியங்கள் செய்கிற செயலுக்கு மனம் கெட்ட பெயர் பெற நேரிடுகிறது.)*

**தன்னடக்கம்**

यो जितः पञ्चवर्गेण सहजेनात्मकर्षिणा ।
आपदस्तस्य वर्धन्ते शुक्लपक्ष इवोडुराट् ॥ 173

*வளர் பிறையில் சந்திரன் தானே வளர்வது போல், மனத்தைக் குலைக்கின்ற — கூடப் பிறந்தே கெடுக்கின்ற — ஐந்து இந்திரியங்களால் அவனுக்கு ஆபத்து தினமும் வளர்ந்து கொண்டே போகிறது.*

अविजित्य य आत्मानं अमात्यान्विजिगीषते ।
अमित्रान् वा अजितामात्यः सोऽवशः परिहीयते ॥ 174

*தன்னை அடக்கிக் கொள்ளாமல் அமைச்சர்களைக் கட்டுப்படுத்த விரும்புபவனும், அமைச்சர்களைக் கட்டுப்படுத்தாமல் எதிரியைக் கட்டுப்படுத்த விரும்புபவனும் தன் வசமிழந்து கெடுவான்.*

आत्मानमेव प्रथमं द्वेष्यरूपेण यो जयेत् ।
ततोऽमात्यानमित्रांश्च न मोघं विजिगीषते ॥ 175

*தன்னையே முதலில் எதிரியாகக் கருதி அடக்குபவன், பின்னர் மந்திரிகளையும் எதிரிகளையும் கட்டுப்படுத்த முற்படும்போது அவன் முயற்சி வீணாவதில்லை.*

वश्येन्द्रियं जितामात्यं धृतदण्डं विकारिषु ।
परीक्ष्यकारिणं धीरमत्यन्तं श्रीर्निषेवते ॥ 176

*தன் புலன்களைக் கட்டுப்படுத்தி, அமைச்சர்களை வென்று, தவறு செய்பவர்களைத் தண்டித்து, எதிலும் சிந்தித்துச்*

செயல்படுகிற தீரனைச் செல்வம் (சீர்) என்றும் தானே சென்றடையும்.

रथः शरीरं पुरुषस्य राजन् आत्मा नियन्ता, इन्द्रियाण्यस्य चाश्वाः ।।
तैरप्रमत्तः कुशली सदश्वैः दान्तैः सुखं याति रथीव धीरः ।। 177

ஆத்மாவிற்கு உடல் தான் தேர். மனம் தேரோட்டி. கண் காது முதலியவை குதிரைகள். ஓட்டுனருக்குப் பணிந்து ஓடுகிற நல்ல குதிரைகள் மூலம் கவனம் சிதறாமல் திறமையுடன் தேர் ஓடுவதால் ஆத்மா சுகமாகப் பயணம் செய்கிறான்.

एतान्यनिगृहीतानि व्यापादयितुमप्यलम् ।
अविधेया इवादान्ताः सरथं सारथिं हयाः ।। 178

கட்டுக்கடங்காத திமிர்பிடித்த குதிரைகள் தேருடன் தேரில் அமர்ந்திருப்பவரையும் அழிப்பதுபோல் இந்த இந்திரியங் களும் கட்டுக் கடங்காவிடில் கேடு விளைவிப்பவையே.

अनर्थमर्थतः पश्यन् अर्थं चैवाप्यनर्थतः ।
इन्द्रियैरजितैर्बालः सुदुःखं मन्यते सुखम् ।। 179

சிறு பிள்ளைத் தனத்துடன் நடப்பவன் கெட்டதை நல்லதென்வும் நல்லதைக் கெட்டதெனவும் காண்பான். இந்திரியங்கள் கட்டுப்படாமையால் துக்கத்தை இன்பமாகப் பார்ப்பான்.

धर्मार्थौ यः परित्यज्य स्यादिन्द्रियवशानुगः ।
श्रीप्राणधनदारेभ्यः क्षिप्रं स परिहीयते ।। 180

ஒழுக்கத்தையும் பொருளாதாரத்தையும் கைவிட்டு, இந்திரியங்கள் இழுத்துச் சென்ற பாதையில் செல்பவன் சீரையும் செல்வத்தையும் உயிரையும் குடும்பத்தையும் விரைவில் இழப்பான்.

अर्थानामीश्वरो यः स्यात् इन्द्रियाणामनीश्वरः ।
इन्द्रियाणामनैश्वर्यात् ऐश्वर्याद्भ्रश्यते हि सः ।। 181

பெரும் பொருளுடையவனுயினும் புலன்களைக் கட்டுப்படுத்தாதவன், புலக்கட்டுப்பாடின்மையாலேயே செல்வாக்கை இழக்கிறுன்.

आत्मानमात्मनाऽन्विच्छेत् मनोबुद्धीन्द्रियैर्यतैः ।
आत्मा ह्येवात्मनो बन्धुरात्मैव रिपुरात्मनः ॥ 182

बन्धुरात्माऽऽत्मनस्तस्य येनैवात्माऽऽत्मना जितः ।
स एव नियतो बन्धुः स एवानियतो रिपुः ॥ 183

மனம் — அறிவு — புலன்களைக் கட்டுப்படுத்தி தன் ஆத்மாவைக் கண்டறிய வேண்டும். ஆத்மாவைக் கண்டறிய விரும்புபவனுக்கு மனம் முதலியவற்றைக் கட்டுப்படுத்திய அவனே உற்ற நண்பன். கட்டுப்படுத்தாத அவனே எதிரி. கட்டுப்பட்ட அவனே அவனுக்கு உற்றுர் உறவினர். கட்டுப்படாத அவனே அவனுக்கு எதிரி.

क्षुद्राक्षेणेव जालेन झषावपिहितावुरू ।
कामश्च राजन् क्रोधश्च तौ प्रज्ञानं विलुम्पतः ॥ 184

பெரு மீன்கள் மெல்லிய வலையைத் துண்டு துண்டாக்கி விடுவதுபோல காமமும் கோபமும் அறிவைச் சிதறச் செய்கின்றன.

समवेक्ष्येह धर्मार्थौ संभारान्योऽधिगच्छति ।
स वै संभृतसंभारः सततं सुखमेधते ॥ 185

ஒழுக்கத்தையும் பொருளாதாரத்தையும் நன்கு சீர்தூக்கிப் பார்த்து, அவற்றிற்கேற்ற ஸாதனங்களைச் சேகரித்துச் செயல்படுபவன் எப்போதும் இன்பமடைவான்.

यः पञ्चाभ्यन्तरान् शत्रूनविजित्य मनोमयान् ।
जिगीषति रिपूनन्यान् रिपवोऽभिभवन्ति तम् ॥ 186

மனத்தின் கோணல்களான (காமம், கோபம், பேராசை, மதிமயக்கம், திமிர் என்ற) ஐந்து உள்ளெதிரிகளை வெல்லாமல்

வெளி எதிரிகளை வெல்லவிரும்புபவன் எதிரிகளிடம் தோற்பான்.

दृश्यन्ते हि महात्मानः बध्यमानाः स्वकर्मभिः ।
इन्द्रियाणामनीशत्वात् राजानो राज्यविभ्रमैः ॥ 187

*புலனடக்கமின்மையால் தன்தன் வினைகளால் கட்டுப்பட்டு மிகப் பெரிய அரசர்களும் அரசுக்குழப்பங்களால் அலைக்கழிக்கப் பெறுவதைக் காணலாம்.*

असन्त्यागात् पापकृतां अपापान्
तुल्यो दण्डः स्पृशते मिश्रभावात् ।
शुष्केणार्द्रं दह्यते मिश्रभावात्
तस्मात्पापैः सह सन्धिं न कुर्यात् ॥ 188

*பாபிகளைக் கைவிடாததால் பாபமில்லாதவர் கூட பாபிகளின் உறவால் பாபிகளுக்குச் சமமான தண்டனை பெறுகிறார்கள். காய்ந்த விறகுடன் ஈரவிறகும் சேர்ந்தெரியும். அதனால் பாபிகளுடன் கூட்டுறவு கூடாது.*

निजानुत्पततः शत्रून् पञ्च पञ्चप्रयोजनान् ।
यो मोहान् न निगृह्णाति तमापद्ग्रसते नरम् ॥ 189

*ஐந்து இந்திரியங்களும் ஐந்து விதமான பலனை அடைய விரும்பித் தானே வெளிக்கிளம்புகின்றன. மதிமயக்கத்தால் அவற்றை அடக்காதவனை ஆபத்து விழுங்கி விடும்.*

अनसूयाऽऽर्जवं शौचं सन्तोषः प्रियवादिता ।
दमः सत्यमनायासो न भवन्ति दुरात्मनाम् ॥ 190

*அசூயையின்மை, நேர்மை, தூய்மை, கிடைத்ததில் திருப்தி, இனிய பேச்சு, அடக்கம், ஸத்யம், உடலைத் தேவையின்றி துன்புறுத்தாதிருத்தல், (உறுதி) இவை கெட்டவர்களிடம் காணப்பெறாது.*

आत्मज्ञानं असंरम्भः तितिक्षा धर्मनित्यता ।
वाक् चैव गुप्ता दानं च नैतान्यन्त्येषु भारत ॥ 191

*தன்னைப் பற்றிய அறிவு, பரபரப்பின்மை, பொறுமை, அறவழியில் என்றும் நடத்தல், அடக்கத்துடன் பேச்சு, கொடை இவை கீழ்த்தர மக்களிடம் இருக்காது.*

இனிய சொல்லும் சுடு சொல்லும்

आक्रोशपरिवादाभ्यां विहिंसन्त्यबुधा बुधान् ।
वक्ता पापमुपादत्ते क्षममाणो विमुच्यते ॥ 192

*கொடிய உரத்த பேச்சாலும் குற்றம் சுமத்தலாலும் அறிஞர்களை அறிவிலிகள் துன்புறுத்துவர். பேசுபவன் பாபத்தை ஏற்கிறான். பொறுத்தவன் பாபத்திலிருந்து விடுபடுகிறான். (ஒருவனது பாபம் பிறரது நிந்தையால் குறைகிறது. நிந்திப்பதால் பாபம் கூடுகிறது).*

हिंसा बलमसाधूनां राज्ञां दण्डविधिर्बलम् ।
शुश्रूषा तु बलं स्त्रीणां क्षमा गुणवतां बलम् ॥ 193

*கொடியவருக்குப் பிறரைத் துன்புறுத்துவது பலம். அரசருக்கு தண்டிக்கும் முறை பலம். பெண்களுக்குப் பணிவிடை பலம். குணச்சிறப்புள்ளவனுக்குப் பொறுமை பலம்.*

वाक्संयमो हि नृपते सुदुष्करतमो मतः ।
अर्थवच्च विचित्रं च न शक्यं बहु भाषितुम् ॥ 194

*வாயைக் கட்டுப்படுத்துவது எளிதல்ல. பொருளுடனும். அழகாகவும் நிறையப் பேச இயலாது.*

अभ्यावहति कल्याणं विविधं वाक्सुभाषिता ।
सैव दुर्भाषिता राजन्ननर्थायोपपद्यते ॥ 195

*இனிய பேச்சு பல மங்களங்களைக் கொணர்கிறது. கெட்ட பேச்சு பல கேடுகளைக் கொணர்கிறது.*

रोहते सायकैर्विद्धं वनं परशुना हतम् ।
वाचा दुरुक्तं बीभत्सं न संरोहति वाक्क्षतम् ॥ 196

அம்பால் துளைத்த உடலும், கோடரியால் வெட்டப்பட்ட காடும் மறுபடி வடு ஆறித் துளிர்க்கும். சொல் அடிபட்டபுண் அருவருப்பு தரும். ஆறாது.

कर्णिनालीकनाराचान् निर्हरन्ति शरीरतः ।
वाक्शल्यस्तु न निर्हर्तुं शक्यो हृदिशयो हि सः ॥ 197

இறக்கை உள்ள அம்பு, குழாய் வழியே செலுத்தப்படும் அம்பு, ரம்பம் போன்ற பற்களுள்ள அம்பு இவை உடலைத் துளைத்ததும் அவைகளை உடலிருந்து பிடுங்கி எடுப்பர். வாயால் எய்யப்பட்ட இந்த முள்ளம்பு இதயத்தினுட்புகுந்துள்ளதால் பிடுங்கி எறியமுடியாது.

वाक्सायका वदनान्निष्पतन्ति यैराहतः शोचति रात्र्यहानि ।
परस्य नामर्मसु ते पतन्ति तान्पण्डितो नावसृजेत्परेभ्यः ॥ 198

சுடு சொல் என்ற அம்புகள் வாயிலிருந்து வெளி வருகின்றன. அவற்றால் அடிபட்டவர் இரவும் பகலும் துயரடைவர். அவை பிறரது மர்மங்களிலேயே விழும். அதனால் அறிவாளி அவற்றைப் பிறர் மீது எய்யக் கூடாது.

விதிகெட மதிகெடும்

यस्मै देवाः प्रयच्छन्ति पुरुषाय पराभवम् ।
बुद्धिं तस्यापकर्षन्ति सोऽवाचीनानि पश्यति ॥ 199

தெய்வம் எவனுக்குத் தோல்வியைத் தர விழைகிறதோ அவனுக்கு முதலில் அறிவைக் குறைத்து விடும். அதன் பின் அவன் கீழ்த்தரமானதையே கடைபிடிப்பான்.

बुद्धौ कलुषभूतायां विनाशे प्रत्युपस्थिते ।
अनयो नयसङ्काशः हृदयान्नापसर्पति ॥ 200

அறிவு கலங்கியதும் அழிவு நெருங்கும்போது அநியாயம் நியாயமாகத் தோன்றி இதயத்திலிருந்து அகலாது.

सेयं बुद्धिः परीता ते पुत्राणां भरतर्षभ ।
पाण्डवानां विरोधेन न चैनानवबुध्यसे ॥ 201

*பாண்டவர்களுடன் விரோதத்தால் உன் புதல்வர்களுக்கு அறிவு விபரீதமாகிவிட்டது. (அநியாயம் நியாயமாகத் தோன்றுகிறது). நீர் அவர்களுக்குப் புத்திமதி கூறவில்லை.*

राजा लक्षणसंपन्नः त्रैलोक्यस्यापि यो भवेत् ।
शिष्यस्ते शासिता सोऽस्तु धृतराष्ट्र युधिष्ठिरः ॥ 202

*திருதராஷ்டிரரே! எல்லா சிறப்புகளும் கொண்ட மூவுலகிற்கும் அரசனாக ஆகத்தக்க யுதிஷ்டிரன் உன் சொல்படி நடப்பவன். அவன் அரசனாகட்டும்.*

अतीव सर्वान्पुत्रांस्ते भागधेयपुरस्कृतः ।
तेजसा प्रज्ञया चैव युक्तो धर्मार्थतत्त्ववित् ॥ 203

अनुक्रोशादानृशंस्यात् योऽसौ धर्मभृतां वरः ।
गौरवात्तव राजेन्द्र बहून् क्लेशांस्तितिक्षति ॥ 204

*உன் புதல்வர்களைவிடத் தகுதி மிக்கவன், பாக்கிய முள்ளவன், வீரமும் சுய அறிவும் மிக்கவன். தர்மமும் பொருளாதாரமும் உணர்ந்தவன். பரிவாலும் பொல்லாப் பின்மையாலும் உம்மிட முள்ள பெருமையை மதித்தும், அந்த நேர்மையாளன் பலதுன்பங்களைப் பொறுத்துக் கொள்கிறான்.*

★ ★ ★

# विदुरनीतिः
## तृतीयोऽध्यायः
# விதுர நீதி
## மூன்றுவது அத்தியாயம்

நேர்மை

सर्वतीर्थेषु वा स्नानं सर्वभूतेषु चार्जवम् ।
उभे त्वेते समे स्यातां आर्जवं वा विशिष्यते ॥ 205

आर्जवं प्रतिपद्यस्व पुत्रेषु सततं प्रभो ।
इह कीर्तिं परां प्राप्य प्रेत्य स्वर्गमवाप्स्यसि ॥ 206

यावत्कीर्तिर्मनुष्यस्य पुण्यलोके प्रगीयते ।
तावत्स पुरुषव्याघ्र स्वर्गलोके महीयते ॥ 207

*எல்லா புண்ய தீர்த்தங்களிலும் நீராடுதல், எல்லா உயிரினங்களிடத்திலும் நேர்மை இவை இரண்டும் சமமானதே. இவ்விரண்டில் நேர்மை அதிகச் சிறப்புள்ள தெனலாம். உன் புதல்வர்களிடத்தில் (பாண்டவர்களிடத்தில்) நேர்மையைக் கடைபிடிப்பீர். இங்கும் புகழ், மறைந்த பின்னும் ஸ்வர்க்கம் கிடைக்கும். நேர்மையாளனுக்கு இவ்வுலகிலும் புகழ், ஸ்வர்க்கத்திலும் சிறப்பு*

*இங்கு ஒரு கதையை விதுரர் கூறுகிறார் :-*

*அதன் சுருக்கம் பின் வருமாறு — கேசினி என்பவள் க்ஷத்திரியப் பெண். அவள் தனக்கேற்ற கணவனை வரிக்க ஸ்வயம்வரம் நடந்தது. ப்ரஹ்லாதனின் புதல்வன் விரோசனன் என்ற அஸுரனும் ஸுதன்வா என்ற அந்தணனும் அதற்கு வந்தனர். அந்தணர் உயர்ந்தவரா அசுரர் உயர்ந்தவரா என்ற சந்தேகம் வந்தது. கசியப்பர் என்ற ப்ரஜாபதியின் மக்களானதால் அஸுரர் உயர்ந்தவர், தேவர்களோ அந்தணர்களோ அல்ல, என்று விரோசனன் கூறுகிறான்.*

ஸ்வயம்வரதினத்தில் முன்னதாக வந்த விரோசனனுக்கு ஆஸன மளிக்கப்பட்டிருந்தது. பின்னர் வந்த ஸுதன்வா அதே ஆஸனத்தில் விரோசனனுடன் கூட உட்கார மறுத்தான். ''இரு அந்தணர்களோ இரு க்ஷத்திரியர்களோ சம ஆஸனத்தில் அமரலாம். தங்கத்தாலான ஆஸனத்தில் நீ அமர்வாய், நான் தனியே உட்காருகிறேன்'' என்று ஸுதன்வா கூறியதும் ''உனக்கு தர்ப்பாஸனமோ பலகையோ தான் ஏற்றது'' என விரோசனன் பரிகாசமாகக் கூறினான். ''உன் தந்தையான ப்ரஹ்லாதராயிருந்தால் நான் உட்கார்கிற ஆஸனத்திற்குத் தாழ்வான ஆஸனத்தில் தான் அமர்வார். நீ சிறுவன். சுகமாக வளர்ந்தவன்.பண்பு அறிய மாட்டாய்'' என ஸுதன்வா கூற, விரோசனன் வெகுண்டு ''தங்கம், பசுமாடு, குதிரை அல்லது அசுரரது செல்வம் அனைத்தையும் நான் பணயம் வைக்கிறேன். நான் உயர்ந்தவனா, நீ உயர்ந்தவனா என நடுவர் மூலம் நிச்சயம் செய்வோம்'' என்றான். ஸுதன்வாவோ ''தங்கமும் குதிரையும் செல்வமும் உன்னிடமே இருக்கட்டும். உயிரையே இருவரும் பணயம் வைப்போம்'' என்றான். நடுவராக யாரை வைப்பது என்ற சந்தேகம் ஏற்பட்டபோது ''தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் முன்னர் தீர்ப்புக்கு நான் நிற்கமாட்டேன். வேறு யாரிடம் செல்வோம்'' என விரோசனன் கேட்க, ஸுதன்வா ''உன் தந்தை ப்ரஹ்லாதரிடம் செல்வோம். புதல்வன் சம்பந்தப்பட்டதாயினும், ப்ரஹ்லாதர் நேர்மையில்லாமல் நடக்கமாட்டர்'' என்று கூற இருவரும் பிரஹ்லாதரிடம் வந்தனர்.

ப்ரஹ்லாதர் ஸுதன்வாவை வரவேற்று பாத்யம் முதலிய உபசாரங்களைச் செய்ய முற்பட்டார். ஸுதன்வாவோ அந்தணன் உயர்ந்தவனா, விரோசனன் உயர்ந்தவனா என்ற விவாதத்தை முன் வைத்து முடிவு சொல்லும்படி கேட்டான். ''கல்மாஷரோ கபிலரோ லோஹிதரோ (ருஷிகள்) கூறத்தயங்குகிற தர்மத்தை, கத்திமுனை போன்று கூரானதை, நான் தீர்வு செய்ய முடியாது. நான் சாட்சியாயிருக்கிறேன். விரோசனன் எனக்கு ஒரே பிள்ளை. உங்களுக்குள் வந்த விவாதத்தை என்னைப் போன்றவன் நிர்ணயிக்க இயலாது'' என்று ப்ரஹ்லாதர் தயங்கியதும், சரியாகத் தீர்வு கூறாவிடினும், நேர்மையற்றுக் கூறினாலும் உன் தலை வெடித்துவிடும் என ஸுதன்வா கூறினார். அப்போது பிரஹ்லாதரின் முன் அதிதி குலத்தோன்றலான ரிஷியுடன்

ஒரு துறவி (ஹம்ஸர்) அங்கு வந்தார். அவரிடம் ப்ரஹ்லாதர் வினயத்துடன் விண்ணப்பித்துக் கொண்டார்.

ஸபையில் நடுவரின் நிலை

प्रह्लाद उवाच *ப்ரஹ்லாதர் கேட்கிறார்.*

पुत्रो वाऽन्यो भवेद् ब्रह्मन् साक्ष्ये चापि भवेत्स्थितः ।
तयोर्विवदतोः प्रश्नं कथमस्मद्विधो वदेत् ॥ 208

*ஒருவர் தனது புதல்வன், மற்றவர் முன்பின் அறியாதவர். இருவரிடையே விவாதம் வந்துள்ளது. நடுவராக உள்ளவன் எந்த தர்மத்தைப் பின்பற்ற வேண்டும். (தீர்வு பிள்ளையைச் சார்ந்தால் மற்றவருக்குத் துரோகமாகும். மற்றவரைச் சார்ந்தால் பிள்ளைக்குத் துரோகமாகும். இந்த ஸங்கடத்தில் எது தர்மம்?)*

हंस उवाच- *ஹம்ஸர் கூறினார்*

गां प्रदद्यादौरसाय यद्वाऽन्यत् स्यात् प्रियं धनम् ।
द्वयोर्विवदतो राजन् प्रश्नं सत्यं यथा वदेत् ॥ 209

*புதல்வனுக்கவன் விரும்பிய பசுவை(பூமியை)யோ அல்லது வேறு செல்வத்தையோ தரலாம். ஆனால் இருவரிடையே உள்ள விவாதத்தில் எது உண்மையோ அதனைச் சொல்ல வேண்டும்.*

प्रह्लाद उवाच - *ப்ரஹ்லாதர் கேட்டார்.*

अथ यो नैव प्रब्रूयात् सत्यं वा यदि वाऽनृतम्।
हंस ! तत्वं च पृच्छामि कियदेनः करोति सः ॥ 210

*ஒருவன் ஸத்யத்தையோ அதற்கு மாறுபட்டதையோ சொல்லாமலிருந்து விட்டால் எத்தனை பாபம் ஏற்படும்? உண்மை நிலையைக் கூறுவீர்.*

हंस उवाच - *ஹம்ஸர் சொன்னார்*

पृष्टो धर्मं न विब्रूयात् गोकर्णशिथिलं चरन् ।
धर्माद्भ्रश्यति राजंस्तु नास्य लोकोऽस्ति न प्रजाः ॥ 211

தர்மத்தைப் பற்றிய விவாதத்தில் நடுநிலையிலிருப்பவன் பசுவின் காதுபோல் நிலையற்று தீர்ப்பு கூறக்கூடாது. அப்படிக் கூறுபவன் கடமை தவறியவனாகிறான். மக்களோ அவனது நாடோ அவனை மதிக்க மாட்டார். (பசுவின் காது எப்போதும் தளர்ந்து முன்னும் பின்னும் அசைந்தவாறு இருக்கும்.

धर्म एतान् संरुजति यथा नद्यस्तु कूलजान् ।
ये धर्ममनुपश्यन्तः तूष्णीं ध्यायन्त आसते ॥ 212

தர்மத்தை (நேர்மையானதை)க் கண்டு கொண்டபின் அதனைக் கூறாமல் மௌனமாக உள்ளவரை அந்த தர்மமே ஆற்று வெள்ளம் கரையிலுள்ள மரங்களை அடித்துச் சென்று அழிப்பது போல் அழித்துவிடும்.

श्रेष्ठोऽर्धं तु हरेत्तत्र भवेत्पादश्च कर्तरि ।
पादस्तेषु सभासत्सु यत्र निन्द्यो न निन्द्यते ॥ 213

தவறு செய்தவனைக் கண்டிக்காத சபையில் நடுவராக உள்ளவர் பாதி பாபத்தையும் செய்தவன் பாபத்தில் கால் பங்கையும் சபையினர் கால் பங்கையும் அனுபவிப்பர்.

अनेनाः भवति श्रेष्ठो मुच्यन्तेऽपि सभासदः ।
कर्तारमेनो गच्छेद्वा निन्द्यो यत्र हि निन्द्यते॥ 214

தவறு செய்தவன் கண்டிக்கப் பெறும் இடத்தில் நடுவரான தலைவர் பாபமற்றவராகிறார். ஸபையில் அமர்ந்துள்ளவரும் பாபத்திலிருந்து விடுபடுகிறார்கள். பாபம் செய்தவனிடம் திரும்பச் சென்றுவிடும்.

प्रह्लाद उवाच- ப்ரஹ்லாதர் கேட்டார்.

मोहाद्वा चैव कामाद्वा मिथ्यावादं यदि ब्रुवन् ।
धृतराष्ट्र! तत्वं पृच्छामि दुर्विवक्ता तु किं वसेत्॥ 215

ஹம்ஸரே! மதிமயக்கத்தாலோ, விரும்பியோ தவறாகக் கூறிய நடுவர் எந்த நிலையை அடைவர்? உண்மை அறியக் கேட்கிறேன்.

हंसः उवाच- ஹம்ஸர் கூறினார்.

यां रात्रिमधिविन्ना स्त्री यां चैवाक्षपराजितः ।
यां च भाराभितप्ताङ्गो दुर्विवक्ता तु तां वसेत्॥ 216

ஒருவள் மனைவியாக உள்ளபோதே மற்றவளைக் கணவன் மணக்கிறபோது முன் மனைவிக்கு ஏற்படும் துக்கத்தையும் சூதாட்டத்தில் தோற்கும் போதும் கடுமையான சுமையைத் தாங்கி வருந்தும் போதும் இராத் தூக்கமில்லாத போதும் ஏற்படும் துன்பத்தையும் தவறாகப் பேசுபவன் அனுபவிப்பான்.

नगरे प्रतिरुद्धः सन् बहिर्द्वारि बुभुक्षितः ।
अमित्रान् भूयसः पश्यन् दुर्विवक्ता तुं तां वसेत्॥ 217
यां च रात्रिमभिद्रुग्धो यां च मित्रे प्रियेऽनृते ।
सर्वस्वेन च हीनो यः दुर्विवक्ता च तां वसेत् ॥ 218

நல்ல பசியுடன் இருக்கும்போது நகரத்தினுள் (தன் ஊரினுள்) நுழைய முடியாமல் தடுத்து நிறுத்தப் படுகிறபோதும், தன் எதிரே பல எதிரிகள் சூழ்ந்துள்ளதை காணும்போதும், தன் பிரிய நண்பன் துரோகம் செய்து பொய் பேசும்போதும், எல்லா உடமைகளையும் இழந்து கதியற்று நிற்கும்போதும் இராத்தூக்கமின்றி துன்பப்படுபவனின் நிலையை நடுநிலை தவறிப் பேசுபவன் அடைவான்.

पञ्च पश्वनृते हन्ति दश हन्ति गवानृते ।
शतमश्वानृते हन्ति सहस्रं पुरुषानृते ॥ 219

ஒரு கால் நடைப்பிராணிக்காகச் சொன்ன பொய் தன் குலத்தினர் ஐவரை அழிக்கும். பசு மாட்டிற்காகச் சொன்னது பத்து பேரையும் குதிரைக்காகச் சொன்னது நூறு பேரையும், மனிதனுக்காகச் சொன்னது ஆயிரம் பேரையும் அழிக்கும்.

हन्ति जातानजातांश्च हिरण्यार्थेऽनृतं वदन् ।
सर्वं भूम्यनृते हन्ति मास्म भूम्यनृतं वदेः ॥ 220

*தங்கத்திற்காகப் பொய் சொல்பவன் தனக்குப் பிறந்தவர்களையும் பிறக்க விருப்பவர்களையும் பூமிக்காகப் பொய் சொல்லுபவன் எல்லாவற்றையும் அழித்து விடுவான். அதனால் பூமிக்காகப் பொய் சொல்லாதீர். (சுலோ. 98-115 பார்க்க).*

प्रह्लादः उवाच- பிரஹ்லாதர் கூறினார்.

मत्तः श्रेयान् अंगिरा वै सुधन्वा त्वद् विरोचन ।
माताऽस्य श्रेयसी मातुः तस्मात्त्वं तेन वै जितः ॥ 221

*"விரோசன! என்னைவிட உன்னைவிட இந்த அங்கிரஸ் கோத்திரத்தில் பிறந்த ஸுதன்வா உயர்ந்தவர். உன் தாயை விட இவரது தாய் உயர்ந்தவள். நீ இவரிடம் தோற்றாய்.*

विरोचन सुधन्वायं प्राणानामीश्वरस्तव ।
सुधन्वन् पुनरिच्छामि त्वया दत्तं विरोचनम् ॥ 222

*விரோசன! (நீ உயிரைப் பணயம் வைத்தபடியால்) ஸுதன்வா தான் உன் உயிருக்கு உடமையாளர். ஸுதன்வரே! நீர் விரோசனனை என்னிடம் உயிருடன் திருப்பித் தரும்படி வேண்டுகிறேன்.*

सुधन्वा उवाच- ஸுதன்வா கூறினார்.

यद्धर्ममवृणीथास्त्वं, न कामादनृतं वदीः ।
पुनर्ददामि ते पुत्रं तस्मात्प्रह्लाद दुर्लभम् ॥ 223

*(ப்ரஹ்லாதரே!) நீர் தர்மத்தையே கடைபிடித்தீர். பிள்ளைப்பாசத்தால் பேசவில்லை. அதனால், மறுபடி உமக்குக் கிடைக்க முடியாத உமது புதல்வனைத் திருப்பித் தருகிறேன்.*

एष प्रह्लाद पुत्रस्ते मया दत्तो विरोचनः ।
पादप्रक्षालनं कुर्यात् कुमार्याः सन्निधौ मम ॥ 224

*என்றால் உயிருடன் திருப்பித் தரப்பட்ட உம் புதல்வன் அந்தப் பெண் எதிரில் என் கால்களை அலம்பட்டும். (அவள் எதிரே நான் உயர்ந்தவன் என அவன் ஏற்றுக் கொண்டதை அவனே வெளிப்படுத்தட்டும்.)*

**विदुरः उवाच-** *விதுரர் கூறினார்*

**तस्माद्राजेन्द्र भूम्यर्थे नानृतं वक्तुमर्हसि ।**
**मा गमः ससुतामात्यो नाशं पुत्रार्थमब्रुवन् ॥ 225**

*அரசே! உமது புதல்வனுக்காகப் பூமிக்காகப் பொய் கூறாதீர். புதல்வர் அமைச்சர் எல்லோருடன் அழிவை அடையாதீர்.*

நல்லது - கெட்டது - பின் விளைவு

**न देवा यष्टिमादाय रक्षन्ति पशुपालवत् ।**
**यं तु रक्षितुमिच्छन्ति बुद्ध्या संयोजयन्ति तम् ॥ 226**

*தேவர்கள் (கால் நடைகளை) மேய்ப்பவர்கள் போல் தடியெடுத்துத் தவறு செய்வதிலிருந்தும் தடுத்துக் காப்பதில்லை. யாரைக் காக்கவிரும்புகிறார்களோ அவர்களை அறிவால் நல்வழிப்படுத்துகின்றனர். (ஒவ்வொரு மனிதனின் ஒவ்வோர் அங்கத்திலும் தேவர்கள் இயக்கும் சக்தியாக இருந்து உள்ளறிவில் இது தவறு இது நல்லது என்பதை அறிவுறுத்துவதுடன் நின்று விடுகின்றனர்.)*

**यथा यथा हि पुरुषः कल्याणे कुरुते मनः ।**
**तथा तथाऽस्य सर्वार्थाः सिद्ध्यन्ते नात्र संशयः ॥ 227**

*மனிதன் எந்த அளவில் மங்களமான நற்செயலில் ஈடுபடுகிறானோ, அந்த அளவில் அவன் நாடியதனைத்தும் கிட்டுகின்றன. ஐயமில்லை.*

**नैनं छन्दांसि वृजिनात्तारयन्ति मायाविनं मायया वर्तमानम् ।**
**नीडं शकुन्ता इव जातपक्षाः छन्दांस्येनं प्रजहत्यकाले ॥ 228**

*வஞ்சகனை-வஞ்சனையுடன் பழகுபவனை-அவன் ஓதிய வேதங்கள் (கற்ற கல்வி எதுவும்) பாபத்திலிருந்து (துன்பத்திலிருந்து) காப்பாற்றுவதில்லை. இறக்கை முளைத்த பட்சிகள் கூட்டைத்துறப்பது போல், வேதங்கள் (கல்வியறிவு) இவனை இறுதியில் கைவிட்டுவிடுகின்றன.*

தகாத கூட்டுறவு

मद्यपानं कलहं पूगवैरं भार्यापत्योरन्तरं ज्ञातिभेदम् ।
राजद्विष्टं स्त्रीपुंसयोर्विवादं वर्ज्यान्याहुः यश्च पन्थाः प्रदुष्टः ॥ 229

*மதுபானம், கலகம், சமுதாயத்துடன் விரோதம், கணவன் மனைவியிடையே சச்சரவு ஏற்படுத்தல், உறவினரிடையே கலகம் மூட்டுவது, அரசரிடம் விரோதம், ஆண்-பெண் விவாதம், கெட்டவழி செல்லுதல் இவை தவிர்க்கத் தக்கவை.*

सामुद्रिकं वणिजं चोरपूर्वं शलाकधूर्तं च चिकित्सकं च ।
अरिं च मित्रं च कुशीलवं च नैनान् साक्ष्ये त्वधिकुर्वीत सप्त ॥ 230

*அங்க அடையாளங்களை (ஸாமுத்திரிகா லக்ஷணங்களைக்) கொண்டு குறி சொல்பவர், திருட்டில் பழக்க முள்ள வணிகர், குறி சொல்லி ஏமாற்றுபவர், மருத்துவர், எதிரி, நண்பர், நடிகர் இவர்களைச் சாட்சியாகக் கொள்ளக் கூடாது.*

अगारदाही गरदः कुण्डाशी सोमविक्रयी ।
पर्वकारश्च सूची च मित्रध्रुक् पारदारिकः ॥ 231

भ्रूणहा गुरुतल्पी च यश्च स्यात्पानपो द्विजः ।
अतितीक्ष्णश्च काकश्च नास्तिको वेदनिन्दकः ॥ 232

स्रुवप्रग्रहणो व्रात्यः कीनाशश्चात्मवानपि ।
रक्षेत्युक्तश्च यो हिंस्यात् सर्वे ब्रह्महभिः समाः ॥ 233

*வீட்டைக் கொளுத்துபவன், விஷமிடுபவன், அலி, ஸோமரஸத்தை விற்பவன், ஆயுதம் செய்பவன், கோள் சொல்பவன், நண்பனுக்குத் துரோகம் செய்பவன், பிறர்*

மனைவியிடம் செல்பவன், கருவைக் கொல்பவன், குருவின் மனைவியை நாடுபவன், மதுவருந்துகிற அந்தணன், கொடூர மாக நடப்பவன், முடிந்த சண்டையைக் கிளப்பிவிடுபவன் (வஞ்சமுள்ளவன்) வேதத்தை நிந்திக்கிற நாஸ்திகன், வேள்வியைத் தடுத்துப் பணம் பறிப்பவன், உரிய வயதில் அந்தந்த வர்ணச் சடங்குகளைச் செய்து கொள்ளாதவன். பசுவைக் கொல்பவன், காப்பாற்று என்று சரணடைந்தவனைத் துன்புறுத்துபவன் இவர்கள் பிரும்மஹத்திக்குச் சமமான பாபம் புரிந்தவர்கள்.

நல்லோரின் அடையாளம்.

तृणोल्कया ज्ञायते जातरूपं वृत्तेन भद्रो व्यवहारेण साधुः ।
शूरो भयेष्वर्थकृच्छ्रेषु धीरः कृच्छ्रेष्वापत्सु सुहृदश्चारयश्च ॥ 234

தங்கத்தின்தரத்தை நெருப்பால் கண்டு கொள்ளலாம். நன்னடத்தையால் நல்லவனையும், பழக்கத்தால் திறமையுள்ளவனையும் நெருக்கடியில் சூரனையும், பொருளாதாரச் சிக்கலில் தீரனையும் கண்டு கொள்ளலாம். ஆபத்துகளில் நண்பனையும் விரோதியையும் கண்டுகொள்ளலாம்.

जरा रूपं हरति हि धैर्यमाशा मृत्युः प्राणान् धर्मचर्यामसूया।
क्रोधः श्रियं शीलमनार्यसेवा ह्रियं कामः सर्वमेवाभिमानः॥ 235

மூப்பு அழகைப் பறிக்கும். எதிர்பார்வை உறுதியையும், யமன் உயிரையும், அசூயை நன்னடத்தையையும் கோபம் சீரையும் சிறப்பையும், கீழோர் பழக்கம் ஒழுக்கத்தையும், காமம் நாணத்தையும், செருக்கு எல்லாவற்றையும் பறித்துவிடும்.

न क्रोधिनोऽर्थाः न नृशंसस्य मित्रं क्रूरस्य न स्त्री सुखिनो न विद्या।
न कामिनो ह्रीरलसस्य न श्रीः सर्वं तु न स्यादनवस्थितस्य॥ 236

கோபமுள்ளவனுக்குப் பொருளில்லை. போக்கிரிக்கு நண்பனும், கொடூரனுக்கு மனைவியும், சுக விருப்ப முள்ளவனுக்குக் கல்வியும், காமமுள்ளவனுக்கு வெட்கமும்,

*சோம்பேறிக்குச் சீரும் சிறப்பும், சஞ்சல சித்தனுக்கு எல்லாமும் இல்லை.*

श्रीर्मङ्गलात्प्रभवति प्रागल्भ्यात्संप्रवर्धते ।
दाक्ष्यात्तु कुरुते मूलं संयमात्प्रतितिष्ठति ॥ 237

*செல்வச் செழிப்பு மங்களச் செயலால் உண்டாகிறது. தன்னால் செயலாற்ற முடியும் என்ற நம்பிக்கையால் அது வளர்கிறது. சுறுசுறுப்புடன் கூடிய செயலாற்றலால் அது வேர் பிடிக்கிறது. தன்னடக்கத்தால் நிலை கொள்கிறது.*

अष्टौ गुणाः पुरुषं दीपयन्ति प्रज्ञा च कौल्यं च दमः श्रुतं च।
पराक्रमश्चाबहुभाषिता च दानं यथाशक्ति कृतज्ञता च ॥ 238

एतान्गुणांस्तात महानुभावान् एको गुणः संश्रयते प्रसह्य ।
राजा यदा सत्कुरुते मनुष्यं सर्वान्गुणानेष गुणोऽतिभाति ॥ 239

*சுய அறிவு, நற்குலத்தோற்றம், புலனடக்கம், நற்கல்வி, எதிர்ப்பு சக்தி, அதிகம் பேசாமை, இயன்றவரை கொடை, நன்றியுணர்வு, என்ற எட்டு சிறப்புகளும் மனிதனை ஒளிரச் செய்கின்றன. இவைகளைப் பெற்றவனை அரசரின் மதிப்பு என்ற சிறப்பு தானே வலிய வந்தடையும். அரசமதிப்பு மற்ற சிறப்புகளைவிடச் சிறந்தது.*

अष्टौ नृपेमानि मनुष्यलोके स्वर्गस्य लोकस्य निदर्शनानि ।
चत्वार्येषामन्ववेतानि सद्भिः चत्वारि चैषामनुयान्ति सन्तः ॥ 240

यज्ञो दानमध्ययनं तपश्च चत्वार्येतान्यन्ववेतानि सद्भिः ।
दमः सत्यमार्जवमानृशंस्यं चत्वार्येतानि अनुयान्ति सन्तः ॥ 241

*இந்த எட்டு மனிதனை ஸ்வர்க்கத்திற்கு இட்டுச் செல்பவை. வேள்வி, கொடை, வேத மோதுதல், தவம் என்ற நான்கும் நல்லோரிடம் கூடியிருப்பவை. புலனடக்கம், ஸத்யம், நேர்மை, அஹிம்ஸை என்ற நான்கும் நல்லோரால் நாடப்படுபவை.*

इज्याध्ययनदानानि तपस्सत्यं क्षमा घृणा ।
अलोभ इति मार्गोऽयं धर्मस्याष्टविधः स्मृतः ॥ 242
तत्र पूर्वचतुर्वर्गो दंभार्थमपि सेव्यते ।
उत्तरश्च चतुर्वर्गो नामहात्मसु तिष्ठति ॥ 243

*வேள்வி புரிதல், வேத மோதுதல், கொடை, தவம், ஸத்யம், பிழைபொறுத்தல், (பொறுமை), கருணை, பேராசையின்மை, இந்த எட்டும் தர்மத்தின் வழிகளாகக் கருதப்படுபவை. இவற்றில் முதல் நான்கு தற்புகழ்ச்சிக்கும் பயன்படும். பின் நான்கும் பெருமனமில்லாதவர்களிடம் இருக்காது.*

न सा सभा यत्र न सन्ति वृद्धाः न ते वृद्धाः ये न वदन्ति धर्मम्।
नासौ धर्मो यत्र न सत्यमस्ति न तत्सत्यं यच्छलेनानुविद्धम्॥ 244

*முதியோரில்லாத இடம் ஸபையல்ல. தர்மத்தைச் சொல்லாதவர் முதியோர் அல்ல. ஸத்யமில்லாதது தர்மமல்ல. வஞ்சகம் புகுந்தது ஸத்திய மல்ல.*

सत्यं रूपं श्रुतं विद्या कौल्यं शीलं बलं धनम्।
शौर्यं च चित्रभाष्यं च दशेमे स्वर्गयोनयः ॥ 245

*உண்மை, அடக்கம், நூலறிவு, பொது அறிவு, நற்குலப்பிறவி, ஒழுக்கம், வலிவு, செல்வம், வீரம், இனிய பேச்சுமுறை இவை ஸ்வர்க்க இன்பம் தருபவை.*

பாபமும் புண்யமும்.

पापं कुर्वन्पापकीर्तिः पापमेवाश्नुते फलम् ।
तस्मात्पापं न कुर्वीत पुरुषः शंसितव्रतः ॥ 246

पापं प्रज्ञां नाशयति क्रियमाणं पुनः पुनः।
नष्टप्रज्ञः पापमेव नित्यमारभते नरः ॥ 247

पुण्यं कुर्वन्पुण्यकीर्तिः पुण्यमत्यन्तमश्नुते ।
पुण्यं प्रज्ञां वर्धयति क्रियमाणं पुनः पुनः ॥ 248

वृद्धप्रज्ञः पुण्यमेव नित्यमारभते नरः ।
तस्मात्पुण्यं निषेवेत पुरुषः सुसमाहितः ॥ 249

*தீவினை செய்வதால் கெட்ட பெயரும் துன்பமும் வரும். அதனால் எவ்வகையிலும் தீவினை புரியக் கூடாது. அறிவு மங்கியவனே தீச்செயலைத் தொடங்குவான். நல்வினை செய்பவன் நற்புகழுடன் இன்பம் பெறுவான். நல்வினை தொடர்ந்து செய்யும்போது நல்லறிவு வளரும். நல்லறிவால் நல்வினைகளைச் செய்யத் தொடங்குவான். நல்வினை செய்பவன் நற்புகழுடன் இன்பம் பெறுவான். அதனால் உறுதியுடன் நல்வினைகளைச் செய்ய வேண்டும்.*

असूयको दन्दशूको निष्ठुरो वैरकृत् शठः ।
स कृच्छ्रं महदाप्नोति न चिरात्पापमाचरन् ॥ 250

अनसूयुः कृतप्रज्ञः शोभनान्याचरन्सदा ।
न कृच्छ्रं महदाप्नोति सर्वत्र च विरोचते ॥ 251

*அசூயை மிக்கவன், விஷப் பல்லுள்ள பாம்பு போல் கெட்ட உள்ளம் படைத்தவன், (பேச்சில் விஷத்தைக் கக்குபவன்) கொடூரமானவன், விரோதத்தை வளர்ப்பவன், போக்கிரி இவர்கள் தொடர்ந்து தீவினை புரிவதால் பெருங்கஷ்டம் பெறுவர். அசூயை இல்லாதவன், நிலைத்த அறிவுள்ளவன், நல்ல செயல் புரிபவன் இவர் எங்கும் பாராட்டப் பெறுவர், துன்புறுவதில்லை.*

நல்ல செயல்முறை

प्रज्ञामेवावगमयति यः प्राज्ञेभ्यः स पण्डितः ।
प्राज्ञो ह्यवाप्य धर्मार्थौ शक्नोति सुखमेधितुम् ॥ 252

*நல்லறிவாளர்களிடமிருந்து நல்லறிவைப் பெறுபவனே அறிஞன். தர்மத்தையும் பொருளையும் பெற்ற நல்லறிவாளி சுகத்துடன் வாழ்வான்.*

दिवसेनैव तत्कुर्यात् येन रात्रौ सुखं वसेत् ।
अष्टमासेन तत्कुर्यात् येन वर्षाः सुखं वसेत् ॥ 253

पूर्वे वयसि तत्कुर्यात् येन वृद्धः सुखं वसेत् ।
यावज्जीवं तु तत्कुर्यात् येन प्रेत्य सुखं वसेत्॥ 254

*இரவை சுகத்துடன் கழிக்க, அதற்குரியதைப் பகலில்செய்து முடிக்க வேண்டும். மழை காலத்தில் சுகமாக இருக்க மற்ற எட்டு மாதங்களில் உழைக்க வேண்டும். முதுமையில் சுகமாக இருக்க இளமையில் உழைக்க வேண்டும். மறுபிறப்பில் சுகமாக இருக்க இந்த வாழ்நாள் முழுவதும் உழைக்க வேண்டும்.*

जीर्णमन्नं प्रशंसन्ति भार्यां च गतयौवनाम् ।
शूरं विजितसंग्रामं गतपारं तपस्विनम् ॥ 255

*உணவை ஜீர்ணமான பின்பே புகழ்வர். யௌவனத்தை நன்கு கழித்த பின் மனைவியையும், போரில் வெற்றி பெற்றபின் சூரனையும், முக்தி பெற்ற பின்பே தவசியையும் பாராட்டுவர். (நன்கு ஜீர்ணமானால் தான் உணவு நல்லது. யௌவனத்தில் நன்னடத்தை யுடனிருந்தவளே நன் மனைவி. போரில் வெற்றி பெற்றால் தான் வீரன். முக்தி பெற்றால் தான் தவத்தின் பயனைப் பெற்றவன்).*

धनेनाधर्मलब्धेन यच्छिद्रमपिधीयते ।
असंवृतं तद्भवति ततोऽन्यदवदीर्यते ॥ 256

*அதர்ம வழியில் பெற்ற செல்வத்தால் அடைக்கப் பட்ட ஓட்டை (மறைக்கப்பட்ட ஒழுக்கக் கேடு) மூடப்படுவதில்லை. மற்றொரு ஓட்டையும் (அதிலிருந்து) எழும்.*

गुरुरात्मवतां शास्ता शास्ता राजा दुरात्मनाम् ।
अन्तः प्रच्छन्नपापानां शास्ता वैवस्वतो यमः ॥ 257

*தன்னடக்கமுள்ளவரைக் குரு அடக்கி ஆள்வார். கெட்டவனை அரசன் அடக்கி ஆள்வான். மறைவில் செயல் புரிபவனை யமன் அடக்குவான்.*

ऋषीणां च नदीनां च कुलानां च महात्मनाम्।
प्रभवो नाधिगन्तव्यः स्त्रीणां दुश्चरितस्य च ॥ 258

ருஷிகள், ஆறுகள், குலங்கள், பெரியோர்கள் பெண்களின் நேரில்லாத வழிகள் இவற்றின் தோற்றுவாயை ஆராயக் கூடாது.

द्विजातिपूजाभिरतो दाता ज्ञातिषु चार्जवी ।
क्षत्रियः शीलभाग्राजन् चिरं पालयते महीम् ॥ 259

*அந்தணரை வழிபடுவதில் ஈடுபட்டவன், கொடையாளி, உறவினர்களிடம் நேர்மையாக நடப்பவன், நல்லொழுக்க முள்ளவன் இத்தகைய க்ஷத்திரியன் பல்லாண்டு காலம் நாட்டை ஆள்வான்.*

सुवर्णपुष्पां पृथिवीं चिन्वन्ति पुरुषास्त्रयः ।
शूरश्च कृतविद्यश्च यश्च जानाति सेवितुम् ॥ 260

*சூரனும் நன்கு கற்றவனும், பிறருக்கு உதவத் தெரிந்தவனும் (இம்மூவரும்) தங்கம் (செழிப்பு) பூக்கின்ற நாட்டைத் தமதாக்கிக் கொள்வர்.*

बुद्धिश्रेष्ठानि कर्माणि बाहुमध्यानि भारत ।
तानि जंघाजघन्यानि भारप्रत्यवराणि च ॥ 261

*அறிவால் ஆற்றுகிற செயல்கள் உயர்ந்தவை. கைகளால் (உழைப்பால்) ஆற்றுகிற செயல்கள் நடுத்தரமானவை. இடுப்பால் (உடலுறவால்) ஆற்றுகிற செயல்கள் தாழ்ந்தவை. தலையால் சுமந்து ஆற்றுபவை மிகத்தாழ்ந்தவை.*

दुर्योधनेऽथ शकुनौ मूढे दुःशासने तथा ।
कर्णे चैश्वर्यमाधाय कथं त्वं भूतिमिच्छसि ॥ 262
सर्वैर्गुणैरुपेतास्तु पाण्डवा भरतर्षभ ।
पितृवत्त्वयि वर्तन्ते तेषु वर्तस्व पुत्रवत् ॥ 263

*அறிவிலிகளான துரியோதனன். சகுனி, துச்சாஸனன், கர்ணன் இவர்களிடம் அரசுப் பொறுப்பை விட்டுவைத்து, நீர் எவ்வாறு நலனை விரும்ப முடியும்? எல்லா குணச் சிறப்புகள் கொண்ட பாண்டவர்கள் உம்மிடம் தந்தையிடம்போல் நடக்கிறுர்கள். நீர் அவர்களை புதல்வர்களைப் போல் நடத்துவீர்.*

7

# विदुरनीतिः

## चतुर्थोऽध्यायः

# விதுர நீதி

## நான்காவது அத்தியாயம்

विदुरः उवाच- *விதுரர் கூறுகிறார்*

अत्रैवोदाहरन्तीमं इतिहासं पुरातनम् ।
आत्रेयस्य च संवादं साध्यानां चेति नः श्रुतम् ॥ 264

*இங்கு ஒரு பழைய வரலாற்றைக் கூறுவர். அத்திரி குலத்தில் உதித்த ஹம்ஸரும் ஸாத்யர்களும் (தேவரினத்தவர்) பேசிக் கொண்டது இது.*

साध्याः ऊचुः-ஸாத்தியர்கள் கூறினா்

साध्या देवा वयमेते महर्षे दृष्ट्वा भवन्तं न शक्नुमोऽनुमातुम् ।
श्रुतेन धीरो बुद्धिमांस्त्वं मतो नः काव्यां वाचं वक्तुमर्हस्युदाराम् ॥ 265

*மஹரிஷியே! நாங்கள் ஸாத்தியர் என்ற தேவரினத்தைச் சார்ந்தவர்கள். தாங்கள் யார் என்று ஊகிக்கவும் முடியவில்லை. நீங்கள் நூல் கல்வியில் தேர்ந்தவர், சிறந்த அறிஞர், என்று நினைக்கிறோம். உயரிய பொருளைப் பற்றி நீங்கள் ஆழ்ந்த பரந்த கருத்துக்களைக் கூறவேண்டும்.*

हंस उवाच - *ஹம்ஸர் கூறினார்*

एतत्कार्यममराः संश्रुतं मे धृतिः शमः सत्यधर्मानुवृत्तिः ।
ग्रन्थिं विनीय हृदयस्य सर्वं प्रियाप्रिये चात्मसमं नयीत ॥ 266

*தேவர்களே! உறுதி, மனவடக்கம், சத்தியத்திலும் தர்மத்திலும் தொடர்ந்த நாட்டம், எண்ணத்திலுள்ள சிடுக்குகளைக் களைந்து தெளிவாயிருத்தல், விரும்பக்*

கூடியதையும் விரும்பக் கூடாததையும் சமமாக நோக்குதல், என்ற இவை நல்லவை என நன்கு அறிவேன்.

பேச்சின் விளைவு.

आक्रुश्यमानो नाक्रोशेत् मन्युरेव तितिक्षतः ।
आक्रोष्टारं निर्दहति सुकृतं चास्य विन्दति ॥ 267

*ஒருவனால் பலரறியத் தூஷிக்கப்படும்போது திரும்பி அவனைத் தூஷிக்கக் கூடாது. அதைப் பொறுத்துக் கொள்பவனின் மனப்புண் தூஷிப்பவனை எரித்துவிடும். தூஷிப்பவனது புண்யத்தையும் பறித்து இவனிடம் சேர்த்துவிடும்.*

नाक्रोशी स्यान्नावमानी परस्य मित्रद्रोही नोत नीचोपसेवी ।
न चाभिमानी न च हीनवृत्तो रूक्षां वाचं रुशतीं वर्जयीत ॥ 268

*பிறரைத் தூஷிப்பவனாக, அவமதிப்பவனாக, நண்பனுக்குத் துரோகம் செய்பவனாக, கீழ்த்தரமானவனை அண்டியவனாக, செருக்குற்றவனாக, ஒழுக்கம் கெட்டவனாக இருக்கக் கூடாது. பிறரைத் தாக்குகிற கொடுஞ் சொல்லைச் சொல்வதைத் தவிர்க்க வேண்டும்.*

मर्माण्यस्थीनि हृदयं तथाऽसून् रूक्षा वाचो निर्दहन्तीह पुंसाम् ।
तस्माद्वाचं उशतीं रूक्षरूपां धर्मारामो नित्यशो वर्जयीत ॥ 269

*மர்மங்களையும் எலும்புகளையும் இதயத்தையும் உயிரையும் மனிதனின் கொடுஞ்சொற்கள் எரிக்கின்றன. அதனால் துன்புறுத்துகிற கொடுஞ் சொல்லைத் தர்மத்தால் அமைதி பெறுகின்றவன் தவிர்க்க வேண்டும்.*

अरुन्तुदं परुषं रूक्षवाचं वाक्कण्टकैर्वितुदन्तं मनुष्यान् ।
विद्यादलक्ष्मीकतमं जनानां मुखे निबद्धां निर्ऋतिं वै वहन्तम् ॥ 270

*சொற்கள் என்ற முட்களால் மனிதர்களைக் குதறி மர்மத்தைக் குத்துகிறவனும் கொடுஞ் சொல்லுடையவனும், மூர்க்கனுமானவன் மக்களை மாய்க்கிற யமனையே தன்வாயில்*

கொண்டவனென்றும், உருப்பெருதவனென்றும் அறிந்து கொள்ள வேண்டும்.

परश्चेत् एनं अभिविध्येत बाणैः भृशं सुतीक्ष्णैरनलार्कदीप्तैः ।
विरिच्यमानोऽप्यतिरिच्यमानो विद्यात्कविः सुकृतं मे दधाति ।। 271

*அறிவாளி, பிறர் தன்னை வெயில் - நெருப்பு போன்று சுடுகின்ற சொல்லாலான கூரம்புகளால் அடிக்கும்போது, தான் களைத்திருப்பதையும் பிறர் தன்னைவிட வலிவால் மேம்பட்டுள்ளதையும் உணர்ந்து, இவன் தனக்கு நல்லதே செய்கிருன் என எண்ணவேண்டும். (சொல்லடியால் பாபம் நீங்குகிறது. பாபமில்லையேல் சொல்லடி பெறவாய்ப்பில்லை).*

நல்லவனுக விரும்புவாய்

यदि सन्तं सेवति, यद्यसन्तं तपस्विनं यदि वा स्तेनमेव ।
वासो यथा रङ्गवशं प्रयाति तथा स तेषां वशमभ्युपैति ।। 272

*நல்லவருக்காகவோ கெட்டவருக்காகவோ தவமியற்றுபவனுக்காகவோ திருடனுக்காகவோ யாருக்காகப் பணிபுரிகிருனே, அவர்கள் வசமாகிருன். துணி எந்த நிறமுள்ள நீரில் நனைகிறதோ அந்த நிறத்தைப் பெறுவதுபோல், (எவரிடம் பணிபுரிகிருேமோ அவரது மனப் பண்பும் நம்மிடம் படிந்துவிடுகிறது. துரியோதனன் முதலானோரின் பண்பு மற்றவரிடம் பரவும்).*

अतिवादं न प्रवदेन्न वादयेत् यो नाहतः प्रतिहन्यान्न घातयेत् ।
हन्तुं च यो नेच्छति पापकं वै तस्मै देवाः स्पृहयन्त्यागताय ।। 273

*பிறரைத் தூஷிக்காதே. பிறரைக் கொண்டு தூஷிக்கச் செய்யாதே. உன்னைத் தாக்காதவரையில் நீ முதலில் தாக்காதே. பிறரைக் கொண்டு தாக்கச் செய்யாதே. தன்னைத் தாக்கியவரிடம் கூட கொடுமையாக நடக்காதவனை தேவர்கள் வரவேற்பர்.*

अव्याहृतं व्याहृतात् श्रेय आहुः
सत्यं वदेद् व्याहृतं तद् द्वितीयम् ।

प्रियं वदेद् व्याहृतं तत्तृतीयं
धर्मं वदेद्व्याहृतं तच्चतुर्थम् ॥ 274

(பிறரைப் பற்றித் தூஷிக்க வேண்டிய நிலை ஏற்படும்போது) பேசுவதைவிட பேசாமலிருத்தல் நலம். பேச வேண்டியிருந்தால் உண்மை பேசு. அதிலும் பிரியமாகப் பேசு. அதிலும் தர்மத்தை ஒட்டிப் பேசு. (ஸத்யமும் துன்புறுத்தலாம். அதனால் பிரியமான ஸத்யத்தைப் பேசு. பிரியமும் தர்மத்திற்கு முரணாகுமானால் பேசாதே. அப்படிப் பேசுவதில் சிரமமிருந்தால் மௌனம் மிக உத்தமம்).

यादृशैः सन्निविशते यादृशांश्चोपसेवते ।
यादृगिच्छेच्च भवितुं तादृग्भवति पूरुषः ॥ 275

யாருடன் பழகுகிறானோ, யாரிடம் பணிபுரிகிறானோ எவரைப் போன்று ஆக விரும்புகிறானோ அவ்வாறே மனிதன் ஆகிறான். (நல்லோருடன் பழக, நல்லோரைப் போல் ஆகவிரும்ப, நல்லவனாகிறான்.)

यतो यतो निवर्तते ततस्ततो विमुच्यते ।
निवर्तनाद्धि सर्वतो न वेत्ति दुःखमण्वपि ॥ 276

மனத்தைப் பற்றிலிருந்தும் திருப்ப, விடுதலை பெறுகிறான். எல்லாவற்றிலிருந்தும் திருப்ப, சிறிதும் துன்புறமாட்டான். (விருப்பால் நாடுவதும் வெறுப்பால் தவிர்ப்பதும் மனத்தைச் சலனப்படுத்துகின்றன. மனத்தில் சலனம் ஓய்ந்தால் துன்பமில்லை).

न जीयतेऽनुजिगीषतेऽन्यान् न वैरकृच्चाप्रतिघातकश्च ।
निन्दाप्रशंसासु समस्वभावो न शोचते हृष्यति नैव चायम्॥ 277

பற்றற்றவன் பிறரால் வெல்லப் படுவதில்லை. பிறரை வெல்ல இவன் விரும்புவதுமில்லை. பிறரிடம் விரோதம் பாராட்டுவதோ அவரை எதிர்ப்பதோ இல்லை. தூற்றினாலும் வாழ்த்தினாலும் சமநிலையிலிருப்பான். துக்கப்படுவதோ மகிழ்வதோ இல்லை.

भावमिच्छति सर्वस्य नाभावे कुरुते मनः ।
सत्यवादी मृदुर्दान्तो यः स उत्तमपूरुषः ॥ 278

எல்லோரும் இன்புற்றிருக்க விரும்புவான். எவரது அழிவையும் விரும்பமாட்டான். உண்மை பேசுவான், மென்மை, புலனடக்கம் கொள்வான். அவனே உயர்ந்தவன்.

नानर्थकं सान्त्वयति प्रतिज्ञाय ददाति च ।
रन्ध्रं परस्य जानाति यः स मध्यमपूरुषः ॥ 279

பேச்சளவில் வீணுக ஆறுதல் கூறமாட்டான். உறுதி அளித்தபடி பொருளுதவி செய்வான். ஆனுல் பிறர் குறை கண்டறிவான். இவன் நடுத்தரமனிதன்.

दुःशासनस्तूपहतोऽभिशस्तो नावर्तते मन्युवशात्कृतघ्नः ।
न कस्यचिन्मित्रं अथो दुरात्मा कलाश्चैता अधमस्येह पुंसः ॥ 280

கட்டுக் கடங்காதவன், வஞ்சமுள்ளவன், பொல்லாதவன், அடிமனத்தில் குரோதம் வளர்ப்பவன், நன்றி மறந்தவன், எவருக்கும் நண்பனல்லாதவன், கெட்டமனம் உள்ளவன், இத்தகையவன் கீழ்த்தரத்தைச் சார்ந்தவன். (உன் புதல்வர்கள் இத்தரத்தினர்.)

न श्रद्दधाति कल्याणं परेभ्योऽप्यात्मशङ्कितः ।
निराकरोति मित्राणि यो वै सोऽधमपूरुषः ॥ 281

தன்நம்பிக்கையின்றி நண்பர்களைத் தவிர்த்துப் பிறரது நலத்தில் மனம் செலுத்தாதவன் கீழ்த்தரத்தவன்.

उत्तमानेव सेवेत प्राप्तकालेतु मध्यमान् ।
अधमांस्तु न सेवेत य इच्छेद् भूतिमात्मनः ॥ 282

தனது நலனை விரும்புபவன், உயர்ந்தவர்களுடனேயே பழக வேண்டும். நெருக்கடியில் நடுத்தரத்தினருடன் பழகலாம். கீழ்த்தரத்தினரிடம் எந்நிலையிலும் பழகக் கூடாது.

குலப் பெருமை

प्राप्नोति वै वित्तमसद्बलेन नित्योत्थानात्प्रज्ञया पौरुषेण ।
न त्वेव सम्यग्लभते प्रशंसां न वृत्तमाप्नोति महाकुलानाम्॥ 283

*தவறான வழியில் வலிவைக் காட்டியோ, நல்ல உழைப்பாலோ, சுய அறிவாலோ, நன் முயற்சியாலோ ஒருவன் தான் நாடியதைப் பெறலாம். ஆனால். மக்களின் பாராட்டையோ, நற் குலத்தவரின் பண்பையோ அப்படிப் பெற இயலாது.*

धृतराष्ट्रः उवाच - *திருதராஷ்டிரர் கேட்டார்.*

महाकुलेभ्यः स्पृहयन्ति देवाः धर्मार्थनित्याश्च बहुश्रुताश्च ।
पृच्छामि त्वां विदुर प्रश्नमेतं भवन्ति वै कानि महाकुलानि॥

*தேவர்களும், தர்மம் பொருள் இவற்றைப் பெற ஓயாது முயல்பவர்களும், நல்ல நூலறிவுள்ளவரும் பெருங்குலப் பிறப்பை விரும்புகின்றனர். விதுரரே! அந்த பெருங்குலம் (நற்குலம்) என்பது என்ன?*

विदुरः उवाच - *விதுரர் கூறினார்*

तपो दमो ब्रह्मवित्त्वं तितिक्षा इज्या विवाहाः सान्त्वनं चान्नदानम्।
अष्टावेते नित्यमेवं भवन्ति सतां गुणास्तानि महाकुलानि ॥ 285

*தவம், புலனடக்கம், ஆத்மஞானம், பொறுமை, வேள்வி, நன்முறைப்படி திருமணமாயிருத்தல், ஸமாதானம், உணவளித்தல், இவை எட்டு நற்குணங்களும் எங்கு தொடர்ந்துள்ளனவோ, அது பெருங்குலம். (மஹாகுலம் நற்குலம்).*

येषां न वृत्तं व्यथते न योनिः, चित्तप्रसादेन चरन्ति धर्मम्।
ये कीर्तिमिच्छन्ति कुले विशिष्टां त्यक्तानृतास्तानि महाकुलानि॥ 286

*நற் பண்பு சிதையாமல், மூலமான முன்னோர் மனம் குளிர ஒழுக்கம்கெடாமல் தொடர்ந்து, மனத் தெளிவுடன் நற் செயல் புரிந்து, குலத்தின் பெருமை மேலும் சிறக்கப் பொய்யானதைத் தவிர்ப்பவர் பெருங் குலத்தார்.*

अनिज्यया कुविवाहैः वेदस्योत्सादनेन च ।
कुलान्यकुलतां यान्ति धर्मस्यातिक्रमेण च ॥ 287

*வேள்விகளைச் செய்யாமை, முறை கெட்ட திருமணம், வேதத்தை ஒதுக்குதல், தர்ம வழிமீறுதல், இவை குலத்தின். நன்னிலை இழக்கச் செய்பவை.*

देवद्रव्यविनाशेन ब्रह्मस्वहरणेन च ।
कुलान्यकुलतां यान्ति ब्राह्मणातिक्रमेण च ॥ 288

*இறைவனுக்காக உள்ள பொருளை அழிப்பது, அந்தணர்களின் பொருளைப் பறிப்பது, அந்தணர்களை அவமதிப்பது இவற்றால் குலங்கள் தன் நிலை கெடுகின்றன.*

ब्राह्मणानां परिभवात् परिवादाच्च भारत ।
कुलान्यकुलतां यान्ति न्यासापहरणेन च ॥ 289

*அந்தணர்களை அவமதிப்பதாலும், அவதூறுபேசுவதாலும், தன்னிடம் காப்பிற்காகக் கொடுத்தவைத்த வைப்புத் தொகையைப் பறிப்பதாலும் குலங்கள் தன் பெயரை இழக்கின்றன.*

कुलानि समुपेतानि गोभिः पुरुषतोऽर्थतः ।
कुलसंख्यां न गच्छन्ति यानि हीनानि वृत्ततः ॥ 290

वृत्ततस्त्वविहीनानि कुलान्यल्पधनान्यपि ।
कुलसंख्यां च गच्छन्ति कर्षन्ति च महद्यशः ॥ 291

*கால் நடைகளோ, மனிதர்களோ, செல்வமோ நிறையக் கூடியிருப்பதால் மட்டும், ஒழுக்கமற்ற குலங்கள் குலம் எனப்படுவதில்லை. ஒழுக்கம் குன்றாததாயின் செல்வம் குறைந்தாலும் குலம் என மதிக்கப் பெறுவதுடன் பெரும் புகழையும் பெறும்.*

वृत्तं यत्नेन संरक्षेद् वित्तमेति च याति च ।
अक्षीणो वित्ततो हीनो वृत्ततस्तु हतो हतः ॥ 292

ஒழுக்கத்தை நன்கு முயன்று காப்பாற்ற வேண்டும். செல்வம் போகும், வரும். செல்வமிழந்ததால் குறையடைவதில்லை. ஒழுக்கம் குலைந்தவன் அழிந்தவனே.

गोभिः पशुभिरश्वैश्च कृष्या च सुसमृद्धया ।
कुलानि न प्ररोहन्ति यानि हीनानि वृत्ततः ॥ 293

*பசுக்கள், மற்ற கால் நடைகள், குதிரைகள், விவசாய நிறைவு, இவற்றால் குலங்கள் நிறைவுறுவதில்லை. ஒழுக்கமில்லையேல் அவை குறைபட்டவையே.*

मा नः कुले वैरकृत्कश्चिदस्तु राजा बद्धो मा परस्वापहारी।
मित्रद्रोही नैकृतिकोऽनृती वा पूर्वाशी वा पितृदेवातिथिभ्यः॥ 294

*விரோதம் பாராட்டுபவனோ சிறையிடப்பட்ட அரசனோ, பிறர் பொருளைப் பறிப்பவனோ, நண்பனுக்குத் துரோகம் செய்பவனோ, வஞ்சகனோ, நேர்மையற்றவனோ, பித்ருக்களுக்கும் தேவர்களுக்கும் அதிதிகளுக்கும் உணவு வழங்குமுன்னரே சாப்பிடுபவனோ, நம் குலத்தில் ஒருவன் கூடத் தோன்ற வேண்டாம்.*

यश्च नो ब्राह्मणान्हन्यात् यश्च नो ब्राह्मणान् द्विषेत्।
न नः स समितिं गच्छेत् यश्च नो निर्वपेत्कृषिम्॥ 295

*அந்தணனைக் கொல்பவனோ, அந்தணனிடம் துவேஷம் கொண்டவனோ, விவசாயத்தைக் குலைப்பவனோ நம்மோடு கூட்டுறவு கொள்ள வேண்டாம்.*

तृणानि भूमिरुदकं वाक्चतुर्थी च सूनृता ।
सतामेतानि गेहेषु नोच्छिद्यन्ते कदाचन ॥ 296

*உட்காரப் புல்லாலான இருக்கை, தங்க இடம், பருக நீர், இனிய மென்மையுள்ள பேச்சு இவை நல்லோர் வீடுகளில் என்றும் குறைவதில்லை.*

श्रद्धया परया राजन् उपनीतानि सत्कृतिम्।
प्रवृत्तानि महाप्राज्ञ धर्मिणां पुण्यकर्मिणाम्॥ 297

*இவற்றை மிகவும் சிரத்தையுடன் தன் வீடுநாடி வந்தவர்களுக்குப் புண்யச் செயல் புரிகின்ற தர்மவான்கள் அளிப்பார்கள்.*

सूक्ष्मोऽपि भारं नृपते स्यन्दनो वै शक्तो वोढुं न तथाऽन्ये महीजाः।
एवं युक्ता भारसहा भवन्ति महाकुलीना तथान्ये मनुष्याः॥298

*தேர் செய்யப் பயன்படுகிற தொடுகாரை (தினிச்சி) மரம் மிக லேசானதாயிலும் கடும் சுமையைத் தாங்கும். மற்ற பெருமரங்கள் தாங்கா. அதுபோல மஹாகுலத்தில் பிறந்தவர், நற்பண்பாளராகி சமுதாயச் சுமையை எளிதில் சுமப்பர். மற்றவர் அவ்வாறல்ல.*

இவன் நண்பன்

न तन्मित्रं यस्य कोपाद्बिभेति, यद्वा मित्रं शङ्कितेनोपचर्यम् ।
यस्मिन्मित्रे पितरीवाश्वसीत तद्वै मित्रं सङ्गतानीतराणि ॥299

*எவனது கோபம் பயமுறுத்துமோ, எவனிடம் பயந்து பயந்து பழக நேருமோ, அவன் நண்பனல்ல. எந்த நண்பனை தந்தை போல் நம்பலாமோ அவனே நண்பன். மற்றவர் அறிமுகமானவர்களே.*

यः कश्चिदप्यसंबद्धो मित्रभावेन वर्तते ।
स एव बन्धुस्तन्मित्रं सा गतिस्तत्परायणम् ॥300

*தொடர்பற்றவனாயினும், எவன் நட்புடன் பழகுகிறானோ, அவனே உறவினன், நண்பன், காலத்தில் உதவுபவன், புகலிடமுமாவான்.*

चलचित्तस्य वै पुंसो वृद्धाननुपसेवतः ।
पारिप्लवमतेर्नित्यं अध्रुवो मित्रसंग्रहः ॥301

*மனச் சஞ்சலமுள்ளவன், பெரியோர்களுடன் இணக்கம் இல்லாதவன், மேலெழுந்தவாறு சிந்திப்பவன், இவனுக்கு நண்பன் கிடைப்பதரிது.*

चलचित्तमनात्मानं इन्द्रियाणां वशानुगम् ।
अर्थाः समभिवर्तन्ते हंसाः शुष्कं सरो यथा ॥ 302

*அன்னப் பறவைகள் நீர் வரண்ட ஓடையை விட்டகலும். அதுபோல் மனச் சஞ்சலமுள்ளவன், சுயக் கட்டுப்பாடில் லாதவன், பொறிகள் சென்ற வழி செல்பவன், இவர்களை விட்டு நல்லவை அகன்றுவிடும்.*

अकस्मादेव कुप्यन्ति प्रसीदन्त्यनिमित्ततः ।
शीलमेतदसाधूनां अभ्रं पारिप्लवं यथा ॥ 303

*விரைவாக மிதந்தோடுகின்ற மேகம் திடீரெனப் பெய்யும். அதுபோல் கெட்டவர் திடீரெனக் கோபிப்பர். திடீரெனச் சமாதான மடைவர். இது அவரது இயல்பு.*

सत्कृताश्च कृतार्थाश्च मित्राणां न भवन्ति वै ।
तान्मृतानपि क्रव्यादाः कृतघ्नान्नोपभुञ्जते ॥ 304

*நண்பர்களால் உதவப்பட்டு விரும்பியதைப் பெற்றவர்கள் செய்நன்றி மறந்தால், பிணந்தின்னிகளான கழுகும் நரியும் கூட இவர்கள் பிணத்தைத் தின்னாது.*

अर्थयेदेव मित्राणि सति वाऽसति वा धने ।
नानर्थयन्प्रजानाति मित्राणां सारफल्गुताम् ॥ 305

*நல்ல நண்பன், போலி நண்பன் என்பதைக் கண்டறிவ தற்கு எளியவழி — பொருள் வசதி இருந்தாலும் இல்லா விட்டாலும் நண்பனிடம் உதவி கோருவாய். (நிலைபுரியும்). கோரிக்கையின்றி உண்மை நிலை அறிய முடியாது.*

பிரிவால் துயரம்

सन्तापाद्भ्रश्यते रूपं सन्तापाद्भ्रश्यते बलम् ।
सन्तापाद्भ्रश्यते ज्ञानं सन्तापाद्व्याधिमृच्छति ॥ 306

*பிரிவுத் துயரால் அழகு அழிகிறது, வலிவு குன்றுகிறது, அறிவு நழுவுகிறது, நோய் வாய்ப்படுகிறான். (ஒன்றைப் பெற்று மகிழ்ந்திருக்கிற நிலையில் அதனை இழப்பதே பிரிவுத் துயர் — ஸந்தாபம்).*

अनवाप्यं च शोकेन शरीरं चोपतप्यते ।
अमित्राश्च प्रहृष्यन्ति मा स्म शोके मनः कृथाः ॥ 307

*துயரடைவதால் இழந்ததைத் திரும்பப் பெற இயலாது. துயருற்றவனைக் கண்டு எதிரி மகிழ்வான். அதனால் மனதைத் துயரில் ஆழ்த்தாதே.*

पुनर्नरो म्रियते जायते च पुनर्नरो हीयते वर्धते च ।
पुनर्नरो याचते याच्यते च पुनर्नरः शोचति शोच्यते च॥ 308

*மனிதன் இறப்பதும் பிறப்பதும் உண்டு. தேய்வதும் வளர்வதும் உண்டு. வேண்டுவதும் வேண்டப் பெறுவதும் உண்டு. துயரடைவதும், தன்னைக் குறித்துப் பிறர் துயர்படச் செய்வதும் உண்டு. (அதனால் துயரம் நிலைத்ததல்ல. தானே மாறி மறையக் கூடியது.)*

सुखं च दुःखं च भवाभवौ च लाभालाभौ मरणं जीवितं च।
पर्यायशः सर्वमेते स्पृशन्ति तस्माद्धीरो न च हृष्येन्न शोचेत्॥ 309

*இன்பமும் துன்பமும், செழிப்பும், ஏழ்மையும், லாபமும் நஷ்டமும், இறப்பும் வாழ்வும் மாறி மாறி அனைவரையும் தொடும். தீரன் மகிழ்ச்சியுறுவதோ துயருறுவதோ கூடாது.*

चलानि हीमानि षडिन्द्रियाणि तेषां यद्यद्वर्धते यत्र यत्र ।
ततस्ततस्संस्रवते बुद्धिरस्य छिद्रोदकुंभादिव नित्यमंभः ॥ 310

*கண் காது மூக்கு நாக்கு தோல் மனம் என்ற ஆறு பொறிகளும் நிலையற்றவை. இவற்றில் எது எது அதிகமாக வெளியில் பரவுகிறதோ அதற்கேற்ப ஓட்டைக் குடத்திலிருந்து நீர் வெளியேறுவது போல் அவனது அறிவு கசிந்து வெளியேறும்.*

அமைதி பெற

धृतराष्ट्रः उवाच - *திருதராஷ்டிரர் கேட்டார்*

तनुरुद्धः शिखी राजा मिथ्योपचरितो मया ।
मन्दानां मम पुत्राणां युद्धेनान्तं करिष्यति ॥ 311

नित्योद्विग्नमिदं सर्वं नित्योद्विग्नमिदं मनः ।
यत्तत्पदमनुद्विग्नं तन्मे वद महामते ॥ 312

*என்றால் தவறான வழியில் வளர்க்கப்பட்ட அரசன் (துரியோதனன்) சிறிதளவே கட்டுப்படுத்தப்பட்டுள்ள நெருப்பு போல் உள்ளான். இந்நெருப்பு மூடர்களான என் புதல்வர்களைப் போர் மூலம் எரித்து அழிக்க விருக்கிறது. அதனால் இவை அனைத்தும் திகிலூட்டுவதே. என் மனம் திகிலால் கலங்கியுள்ளது. பயமில்லாத வழி ஏதேனும் இருந்தால் பேரறிவாளனான நீ தெரிவிப்பாய்.*

विदुरः उवाच - *விதுரர் கூறினார்*

नान्यत्र विद्यातपसोः नान्यत्रेन्द्रियनिग्रहात् ।
नान्यत्र लोभसन्त्यागात् शान्तिं पश्यामि तेऽनघ ॥ 313

*அறிவும் தவமுமன்றி, புலனடக்கமன்றி, பேராசை விட்டகல்வதன்றி உமக்கு அமைதி தருவது வேறு இருப்பதாகத் தெரியவில்லை.*

बुद्ध्या भयं प्रणुदति तपसा विन्दते महत् ।
गुरुशुश्रूषया ज्ञानं शान्तिं योगेन विन्दति ॥ 314

*அறிவால் பயத்தைப் போக்கிக் கொள்ளலாம். தவத்தால் உயர்வைப் பெறலாம். குருவின் பணிவிடையால் அறிவைப் பெறலாம். இவற்றை முறையுடன் பயன் படுத்தித் தன்னை அடக்கிக் கொண்டால் அமைதி பெறலாம்.*

अनाश्रिताः दानपुण्यं वेदपुण्यमनाश्रिताः ।
रागद्वेषविनिर्मुक्ताः विचरन्तीह साक्षिणः ॥ 315

*விருப்பு வெறுப்பின்றி தானம் செய்வதாலும் வேதம் ஓதுவதாலும் பெறுகிற மறுமை இன்பத்தைச் சார்ந்திராமல், சாட்சி போல், வினை தன்னைக் கட்டுப்படுத்தாமல் செய்து கொண்டு ஜீவன்முக்தர்கள் ஸஞ்சரிப்பர்.*

स्वधीतस्य सुयुद्धस्य सुकृतस्य च कर्मणः ।
तपसश्च सुतप्तस्य तस्यान्ते सुखमेधते ॥ 316

*நன்கு வேத மோதியதற்கோ, நன்கு போர் புரிந்ததற்கோ நற் செயலை நன்கு புரிந்ததற்கோ தவம் நன்கு புரிந்ததற்கோ பலனாகிய சுகத்தை இறுதியில்தான் பெறுவர்.*

स्वास्तीर्णानि शयनानि प्रपन्नाः न वै भिन्ना जातु निद्रां लभन्ते।
न स्त्रीषु राजन् रतिमाप्नुवन्ति न मागधैः स्तूयमाना न सूतैः॥ 317

*உற்றருடன் ஒட்டுதலின்றி மனம் உடைந்தவர்கள் நல்ல விரிப்பு விரித்த படுக்கையில் படுத்த பின்னரும் சிறிதும் தூங்கமாட்டார்கள். பெண்களிடம் ஈடுபாடு இருக்காது. புகழ்பவர்களும் பாடுபவர்களும் புகழ்ந்தும் நிம்மதி பெறமாட்டார்.*

न वै भिन्नाः जातु चरन्ति धर्मं न वै सुखं प्राप्नुवन्तीह भिन्नाः।
न वै भिन्नाः गौरवं प्राप्नुवन्ति न वै भिन्नाः प्रशमं रोचयन्ति॥ 318

*உற்றருடன் மனவேற்றுமையால் ஒட்டாதவர்கள் எப்போதும் தர்மத்தை அனுசரிப்பதில்லை. இன்பமும் பெறுவதில்லை. பிறரால் மதிக்கப் படுவதில்லை. அமைதியை விரும்புவதுமில்லை.*

न वै तेषां स्वदते पथ्यमुक्तं योगक्षेमं कल्पते वै न तेषाम्।
भिन्नानां वै मनुजेन्द्र परायणं न विद्यते किञ्चिदन्यद् विनाशात्॥ 319

*தன் உற்றருடன் விரோதம் பாராட்டுபவர்களுக்கு, மிகவும் ஹிதமான உபதேசமும் ருசிக்காது. வாழ்க்கையும் நலம் பெறாது. அழிவைத் தவிர வேறு அவர்களுக்கு முடிவு இல்லை.*

உற்றார் - உறவினருடன் நல்லிணக்கம்

संपन्नं गोषु संभाव्यं संभाव्यं ब्राह्मणे तपः ।
संभाव्यं चापलं स्त्रीषु संभाव्यं ज्ञातितो भयम् ॥ 320

பசுக்களிடம் பால் நிறைவு (செழிப்பு) நேரக் கூடியதே. அந்தணர்களிடம் தவமும் பெண்களிடம் சபலமும் ஞாதிகளிடம் பயமும் நேரக் கூடியதே.

तन्तवोऽप्यायता नित्यं तनवो बहुलाः समाः ।
बहून् बहुत्वादायासान् सहन्तीत्युपमा सताम् ॥ 321

நூல்கள் மெல்லியதாயினும், ஒரே நீளமும் சீரும் அதிக எண்ணிக்கையும் செய் நேர்த்தியும் சேர்ந்து முறுக்கி - இறுகிக் கொண்டால், அதிகச் சுமையைத் தாங்கும் என்ற உபமானம் நல்லோர்களுக்கும் பொருந்தும். (பாண்டவர்கள் செல்வமிழந்த நிலையிலும் ஒரே சீராக ஒற்றுமையுடன் முனைவுடன் இருப்பதால் அவர்கள் வலிவுடன் எந்தப் போரையும் தாங்கவல்லவர்களே).

धूमायन्ते व्यपेतानि ज्वलन्ति सहितानि च ।
धृतराष्ट्रोल्मुकानीव ज्ञातयो भरतर्षभ ॥ 322

தீப்பந்தத்திலுள்ள சருகு தனித்திருந்தால் புகையும். சேர்ந்துவிட்டால் கொழுந்துவிட்டெரியும். உறவினர்களும் அத்தகையவர்களே.

ब्राह्मणेषु च ये शूराः स्त्रीषु ज्ञातिषु गोषु च ।
वृन्तादिव फलं पक्वं धृतराष्ट्र पतन्ति ते ॥ 323

அந்தணர்களிடத்திலும் பெண்களிடத்திலும் உறவினர்களிடத்திலும், பசுக்களிடத்திலும் கொடூரமாக நடப்பவர்கள், காம்பிலிருந்து நழுவிய பழம்போல் கீழே விழுவார்கள். (உறவினர்களே காம்புபோல் அவர்களைத் தாங்குபவர்கள்.)

महानप्येकजो वृक्षो बलवान्सुप्रतिष्ठितः ।
प्रसह्य एव वातेन सस्कन्धो मर्दितुं क्षणात् ॥ 324

பெருமரம், வலிவுள்ளது, நன்கு வேர் ஊன்றியது, என்றாலும் தனித்து முளைத்திருந்தால் காற்றால் அடிமரத்துடன் வலிவுடன் சாய்க்கப்படக் கூடியதே.

अथ ये सहिता वृक्षाः सङ्घशः सुप्रतिष्ठिताः ।
ते हि शीघ्रतमान्वातान् सहन्तेऽन्योन्यसंश्रयात् ॥ 325

*அந்த மரங்களே நெருக்கமாக முளைத்து வேரும் நன்கு ஊன்றியவையானால் கூட்டமாயிருப்பதாலும் ஒன்றுக்கொன்று பிடிப்புடனிருப்பதாலும் மிகவும் வேகமாக அடிக்கும் பேய்க்காற்றையும் தாங்குகின்றன.*

एवं मनुष्यमप्येकं गुणैरपि समन्वितम् ।
शक्यं द्विषन्तो मन्यन्ते वायुर्द्रुममिवैकजम् ॥ 326

*அதுபோன்று மனிதன் சிறந்த குணங்களுடன் கூடியவனாயினும் தனித்திருந்தால் காற்று தனித்த மரத்தை அழிப்பதுபோல் அழித்துவிடலாம் என எதிரிகள் கருதுவர்.*

अन्योन्यसमुपष्टंभात् अन्योन्योपाश्रयेण च ।
ज्ञातयः संप्रवर्धन्ते सरसीवोत्पलान्युत ॥ 327

*ஒருவருக்கொருவர் பிடிப்பு தருவதாலும் ஒருவரை ஒருவர் அண்டி நிற்பதாலும் ஓடையில் அல்லிகள்போல் உறவினர் ஒட்டி வளர்கின்றனர்.*

अवध्याः ब्राह्मणा गावो ज्ञातयः शिशवः स्त्रियः ।
येषां चान्नानि भुञ्जीत ये च स्युः शरणागताः ॥
सुमहत्यपराधेऽपि तेषां दण्डो विसर्जनम् ॥ 328

*அந்தணர், பசுக்கள், உறவினர், சிசுக்கள், பெண்கள், உணவு தந்து உதவுபவர்கள், சரணடைந்தவர்கள், இவர்கள் பெருந்தவறு இழைத்திருந்தாலும் வீட்டை விட்டு ஒதுக்குவதே அவர்களுக்கு தண்டனை.*

न मनुष्ये गुणः कश्चित् राजन् सधनतामृते ।
अनातुरत्वात्, भद्रं ते, मृतकल्पा हि रोगिणः ॥ 329

*மனிதனில் செல்வந்தனாயிருப்பதே சிறப்பு, ஏழை எனும் நோயாளி செத்தவனுக்குச் சமமாவான்.*

வஞ்சம் கொடிது

अव्याधिजं कटुकं शीर्षरोगि पापानुबन्धं परुषं तीक्ष्णमुष्णम् ।
सतां पेयं यन्न पिबन्त्यसन्तः मन्युं महाराज पिब प्रशाम्य ॥ 330

*வஞ்சம் தீர்க்கிற எண்ணமானது. (உள்ளடங்கிய கோபம்) நோயில்லாமல் வருகிற தலைவலி. இதன் பின்விளைவு பாபம். கொடூரமும் வேகமும் சூடும் மிக்கது. நல்லோர் இதனை விழுங்கிவிடுவர். கெட்டவர் விழுங்குவதில்லை பேரரசரே! இதனை விழுங்கிவிடுவீர். பின் அமைதியுறுவீர். (கோபத்தை அடக்க மூளை சிதறும், அதனை விழுங்கித் திரும்பி எழாதபடி ஜீர்ணித்து விடவேண்டும். பின்னரே அமைதிவரும்.)*

रोगार्दिताः न फलान्याद्रियन्ते न वै लभन्ते विषयेषु तत्त्वम्।
दुःखोपेताः रोगिणो नित्यमेव न बुध्यन्ते धनभोगान्नसौख्यम् ॥ 331

*நோயாளிகள் (தன் நோயைத் தவிர) வேறு மக்களிடமோ செல்வத்திடமோ அக்கறை காட்டமாட்டார்கள். எதைப் பற்றியும் உண்மை அறிய முற்படமாட்டார். எப்போதும் நோயையும் துன்பத்தையுமே காண்பர். செல்வத்தை அனுப விப்பதையோ நல்லுணவு பெறுவதையோ உணரமாட்டார். (நோயையே சிந்தித்து நோய் நீங்கும் முறைபற்றிச் சிந்திக்க மாட்டார்.)*

பாண்டவருடன் நல்லிணக்கம்

पुरा ह्युक्तं नाकरोस्त्वं वचो मे द्यूते जितां द्रौपदीं प्रेक्ष्य राजन्।
दुर्योधनं वारयेत्यक्षवत्यां कितवत्वं पण्डिता वर्जयन्ति ॥ 332

*அன்று சூதாட்டத்தில் த்ரௌபதி வெல்லப்பட்ட முறையை உணர்ந்து துர்யோதனனைச் சூதாட்டத்திலிருந்து தடுத்து நிறுத்துமாறு நான் சொன்னதை நீர் செயல் படுத்த வில்லை. அறிவாளிகள் வஞ்சகத்தைத் தவிர்ப்பர்.*

न तद्बलं यन्मृदुना विरुध्यते सूक्ष्मो धर्मस्तरसा सेवितव्यः ।
प्रध्वंसिनी क्रूरसमाहिता श्रीः मृदुप्रौढा गच्छति पुत्रपौत्रान् ॥ 333

*மென்மையுள்ளவர்களுடன் விரோதம் காட்டுவது வலிவல்ல. (அது வஞ்சகம்). நீதி திடத்துடன் காப்பாற்றப்பட*

வேண்டும். கொடுமையால் பெற்ற செல்வம் அழிக்கிற இயல்புள்ளது. மென்மையுடனும் பெருந்தன்மையுடனும் சேமித்த செல்வம் மகன் பேரன் என்று வம்ச வழியே தொடர்ந்து சிறக்கும். (வலிவு மென்மையுடன் நீதியை யொட்டிக் காட்டப்பட வேண்டும். அப்படிப் பெற்ற செல்வம் நிலைத்திருக்கும். மாறுபட்டது சேமித்தவனையும் அவனது குலத்தையுமே அழிக்கும்).

धार्तराष्ट्राः पाण्डवान्पालयन्तु पाण्डोः सुतास्तव पुत्रांश्च पान्तु ॥
एकारिमित्राः कुरवो ह्येककार्याः जीवन्तु राजन् सुखिनः समृद्धाः ॥ 334

உமது புதல்வர்கள் பாண்டுவின் புதல்வர்களைக் காக்கட்டும். பாண்டுவின் குமாரர்கள் உமது புதல்வர்களைக் காக்கட்டும். இருவருமே குருவம்சத்தினர். இவர்களுக்கு நண்பனோ எதிரியோ தனித்தில்லை. இவர்களது நோக்கமும் ஒன்றாகட்டும். அப்படி இவர்கள் சுகம் நிரம்பிச் செழிப்புடன் வாழட்டும். (பாண்டு மக்களின் நண்பன் திருதராஷ்டிரரின் மக்களுக்கும் நண்பன். இவர்களின் எதிரி அவர்களது எதிரி).

मेढीभूतः कौरवाणां त्वमद्य त्वय्यधीनं कुरुकुलमाजमीढ ।
पार्थान्बालान् वनवासप्रतप्तान् गोपायस्व स्वं यशस्तात रक्षन् ॥ 335

நீர் கௌரவர் அனைவருக்கும் ஆதாரமான தூண். குருகுலமே உம் வசத்திலுள்ளது. காட்டில் வசித்ததால் வாடி நிற்கிற சிறுவர்களான பாண்டவர்களைக் கட்டிக்காப்பீர். அதனால் உமது புகழும் காக்கப் பெறும்.

सन्धत्स्व त्वं कौरव पाण्डुपुत्रैः मा तेऽन्तरं रिपवः प्रार्थयन्तु ।
सत्ये स्थितास्ते नरदेव सर्वे दुर्योधनं स्थापय त्वं नरेन्द्र ॥ 336

குருவம்சத்தலைவரே! பாண்டுவின் புதல்வர்களுடன் சமாதானம் கொள்வீர். உங்கள் இரு சாராரிடையே பிளவு ஏற்படும்படி எதிரிகள் விரும்ப அனுமதிக்காதீர். பாண்டவர்கள் ஸத்யத்தில் நிலைநிற்பவர்கள். துர்யோதனனை ஸத்யத்தில் நிலைநிற்கச் செய்வீர்.

# विदुरनीतिः

## पञ्चमोऽध्यायः

# விதுர நீதி

## ஐந்தாம் அத்தியாயம்

வீணை முயற்சி

विदुरः उवाच - *விதுரர் கூறினார்*

सप्तदशेमान् राजेन्द्र मनुः स्वायंभुवोऽब्रवीत् ।
वैचित्रवीर्य पुरुषानाकाशं मुष्टिभिर्घ्नतः ॥ 337

तानेवेन्द्रस्य च धनुरनाम्यं नमतोऽब्रवीत् ।
अथो मरीचिनः पादानग्राह्यान् गृह्णतोऽब्रवीत् ॥ 338

*விசித்ர வீர்யரின் புதல்வரான அரசே! பதினேழு பேர்கள் ஆகாயத்தைத் தம் முஷ்டிகளால் குத்துபவர்களாக, வானவில்லை வளைப்பவர்களாக, சூரியனின் கிரணங்களைக் கையால் பிடிப்பவர்களாக. ஸ்வாயம்புவ மனு கூறினார்.*

यश्चाशिष्यं शास्ति वै, यश्च तुष्येत्, यश्चातिवेलं भजते द्विषन्तम्।
स्त्रियश्च यो रक्षति भद्रमश्नुते यश्चायाच्यं याचते कत्थते वा ॥ 339

यश्चाभिजातः प्रकरोत्यकार्यं यश्चाबलो बलिना नित्यवैरी ।
अश्रद्दधानाय च यो ब्रवीति यश्चाकाम्यं कामयते नरेन्द्र ॥ 340

वध्वावहासं श्वशुरो मन्यते यो वध्वावसन्नभयो मानकामः ।
परक्षेत्रे निर्वपति यश्च बीजं स्त्रियं च यः परिवदतेऽतिवेलम् ॥ 341

यश्चापि लब्ध्वा न स्मरामीति वादी दत्वापि च यः कत्थति याच्यमानः।
यश्चासतः सान्त्वमुपानयीत एतान्नयन्ति निरयं पाशहस्ताः ॥ 342

1. தனக்கு அடங்காத சீடனுக்குப் போதிப்பவன், (2) அப்படிப் போதித்ததிலேயே திருப்தியடைபவன். (3) வரையின்றி பணிவிடை செய்து எதிரியிடமிருந்து நன்மை பெற நினைப்பவன். (4) பெண்களைக் காப்பாற்றியதன் மூலம் நன்மை பெற நினைப்பவன், (5) யாசிக்கத் தகாதவரிடம் யாசிப்பவன், (6) தன்னைப் புகழ்ந்து கொள்வதாலேயே பெருமை பெற நினைப்பவன், (7) உயர் குலத்தில் பிறந்து ஈனச் செயல் புரிபவன், (8) வலிவு மிக்கவனுடன் தினந்தோறும் விரோதம் பாராட்டுகிற வலிவில்லாதவன், (9) நம்பிக்கையுடன் தன் பேச்சைக் கேட்காதவனிடம் பேசுபவன், (10) விரும்பத்தகாததை விரும்புபவன், (11) மருமகளைப் பரிகசிக்கிற மாமனார், (12) தன் பயத்தைப் போக்குகிற மருமகளிடம் கண்டிப்பும் மரியாதையும் எதிர்பார்ப்பவன் (13) பிறர் வயலில் விதை விதைப்பவன், (14) பெண்களை வரையின்றி தூஷிப்பவன் (15) நன்மை பெற்றிருந்தும் நினைவிலில்லை என்று கூறுபவன் (16) தானமாகத் தந்து அதனைத் தானே புகழ்பவன் (17) மூர்க்கரிடம் ஸமாதானமாகப் பேசுபவன் (இவர்கள் இயலாததைச் செய்ததாகச் சொல்லும் வீணர்கள்). இவர்களை நரகத்திற்குப் பாசமேந்திய யமபடர்கள் அழைத்துச் செல்வர்.

यस्मिन्यथा वर्तते यो मनुष्यः तस्मिंस्तथा वर्तितव्यं स धर्मः।
मायाचारो मायया वर्तितव्यः साध्वाचारः साधुना प्रत्युपेयः ॥ 343

ஒருவன் தன்னிடம் எப்படி நடந்து கொள்கிறானோ அவனிடம் அவ்வாறு நடந்து கொள்ள வேண்டும். கபடத்துடன் நடப்பவனிடம் கபடத்துடனும், ஒழுங்கான முறையில் நடப்பவனிடம் ஒழுங்காகவும் நடக்க வேண்டும்.

ஆயுள் குறையக் காரணம்

धृतराष्ट्रः उवाच— திருதராஷ்டிரர் கேட்கிறுர்

शतायुरुक्तः पुरुषः सर्ववेदेषु वै यदा ।
नाप्नोत्यथ च यत्सर्वं आयुः केनेह हेतुना ॥ 344

*மனிதனுக்கு வேதங்களில் நூறு வயதெனக் கூறியுள்ளபோது, அந்த பூர்ண ஆயுளை ஏன் பெறுவதில்லை?*

विदुरः उवाच— விதுரர் கூறினுர்.

अतिमानोऽतिवादश्च तथाऽत्यागो नराधिप ।
क्रोधश्चात्मविधित्सा च मित्रद्रोहश्च तानि षट् ॥ 345

एत एवासयस्तीक्ष्णाः कृन्तन्त्यायूंषि देहिनाम् ।
एतानि मानवान्घ्नन्ति न मृत्युर्भद्रमस्तु ते ॥ 346

*அதிகத் தன் மதிப்பு, வரை மீறிப் பேசுதல், தியாகமின்மை, கோபம், வரம்பு மீறிய தன் நலம் நண்பனுக்கு துரோகம், இந்த ஆறும் கூரியகத்திபோல் ஆயுளைச் சிதைக்கின்றன. யமன் மனிதர்களைக் கொல்வதில்லை. உமக்கு நலம் வருக.*

विश्वस्तस्यैति यो दारान् यश्चापि गुरुतल्पगः ।
वृषलीपतिर्द्विजो यश्च पानपश्चैव भारत ॥ 347

आदेशकृत् वृत्तिहन्ता द्विजानां प्रेषकश्च यः ।
शरणागतहा चैव सर्वे ब्रह्महणः समाः ।
एतैः समेत्य कर्तव्यं प्रायश्चित्तमिति श्रुतिः ॥ 348

*தன்னை நம்பியவனது மனைவியைக் கெடுத்தவன், குருவின் மனைவியைக் கெடுத்தவன், நீசப் பெண்ணை மணந்து மதுபானம் செய்கிற அந்தணன், நேர்மையற்ற செயலைச் செய்யும்படி உத்திரவிடுபவன், பிறர் பிழைப்பைக் கெடுப்பவன், அந்தணரை வேலையாளாக அமர்த்துபவன், தன்னை அடைக்கலம் புகுந்தவனை அழிப்பவன், இவர்கள்*

பாபிகள், இந்தப் பாபிகளுடன் தொடர்பு கொள்பவனும் பாபி. இவர்கள் ப்ராயச்சித்தம் செய்து கொள்ள வேண்டுமென்று வேதம் கூறுகிறது.

நல்லுபதேசம் பெறுவது நல்லது

गृहीतवाक्यो नयविद् वदान्यः शेषान्नभोक्ता ह्यविहिंसकश्च ।
नानर्थकृत्याकुलितः कृतज्ञः सत्यो मृदुः स्वर्गमुपैति राजन् ॥ 349

நல்லோரது உபதேசத்தைப் பெற்றவன், நீதி அறிந்தவன், கொடையாளி, பிறருக்கு அன்ன மிட்டுப் பின் உண்பவன், துன்புறுத்தாதவன், தவருன செயல் புரிந்ததாகப் பின்னர் வருத்தப்பட நேராதவன், நன்றியுணர்ந்தவன், உண்மை பேசுபவன், மென்மையுள்ளவன், இந்த அறிவாளி ஸ்வர்க்கம் செல்வான்.

सुलभाः पुरुषा राजन् सततं प्रियवादिनः ।
अप्रियस्य च पथ्यस्य वक्ता श्रोता च दुर्लभः ॥ 350

எப்போதும் "பிரியத்தை (பிரியமாக)ப் பேசுபவர் எளிதில் கிடைப்பர். நன்மை பயப்பதைப் பிரிய மற்றதாயினும் சொல்பவர் அரிது. அதனைக் கேட்டு நடப்பவன் மிகவும் அரிது. (வால்மீகி ராமாயணத்தில் விபீஷணன் ராவணனிடம் இதே சுலோகத்தை கூறுகிருன் (யுத்த. 16-21)

यो हि धर्मं समाश्रित्य हित्वा भर्तुः प्रियाप्रिये ।
अप्रियाण्याह पथ्यानि तेन राजा सहायवान् ॥ 351

தர்மத்தைப் பின்பற்றி, அரசனுக்குப் பிரியமானது பிரியமானதல்ல என்று கருதாமல், பிரியமற்ற தெனினும் நன்மை பயப்பதைச் சொல்பவனே அந்த அரசனுக்குத் துணைவன்.

त्यजेत्कुलार्थे पुरुषं ग्रामस्यार्थे कुलं त्यजेत् ।
ग्रामं जनपदस्यार्थे आत्मार्थे पृथिवीं त्यजेत् ॥ 352

குலம் நிலைக்கும் பொருட்டு ஒரு மனிதனைத் தியாகம் செய்யலாம். ஒரு கிராமம் வாழ ஒரு குடும்பத்தைக்

கைவிடலாம். ஒரு நாடு வாழ ஒரு கிராமத்தைக் கைவிடலாம். தன் பொருட்டு உலகையே கைவிடலாம். (துரியோதனன் பிறந்த போது அவனைத் தியாகம் செய்யும்படி இதையே விதுரர் திருதராஷ்டிரரிடம் கூறினார். ஆதி. 114-38)

आपदर्थे धनं रक्षेत्, दारान् रक्षेद्धनैरपि।
आत्मानं सततं रक्षेत् दारैरपि धनैरपि ॥ 353

நெருக்கடி நேரலாம் என்ற எதிர்பார்வையில் செல்வத்தைக் காக்க வேண்டும். செல்வத்தை இழந்து மனைவியைக் காப்பாற்றலாம். மனைவியையும் செல்வத்தையும் இழந்தாவது தன்னைக் காப்பாற்றிக் கொள்ளலாம். (செல்வம் விரும்பத் தக்கது. செல்வத்தைவிட மனைவி உயர்ந்தவள். மனைவியையும் செல்வத்தையும் விடத் தானே காப்பாற்றத் தக்கவன்.

द्यूतमेतत्पुरा कल्पे दृष्टं वैरकरं नृणाम् ।
तस्माद् द्यूतं न सेवेत हास्यार्थमपि बुद्धिमान् ॥ 354

சூதாட்டமென்பது மனிதர்களுக்கிடையே விரோதத்தைப் பரப்பும் என முன் கல்பத்திலேயே கண்டுள்ளனர். அதனால் சூதாட்டத்தை விளையாட்டிற்காகக் கூட அறிவாளி ஆடக் கூடாது.

उक्तं मया द्यूतकालेऽपि राजन् नेदं युक्तं वचनं प्रातिपेय ।
तदौषधं पथ्यमिवातुरस्य न रोचते तव वैचित्रवीर्य ॥ 355

சூதாட்டம் நடந்தபோதே இது தகாது என்று நான் கூறினேன். ப்ரதீபவம்சத்திலுதித்தவனே! நோயாளிக்குப் பத்தியமான (இதம் தருகிற) உணவு பிடிக்காது என்பது போல் உமக்கு என் வார்த்தை பிடிக்கவில்லை.

काकैरिमान् चित्रबर्हान्मयूरान् पराजयेथाः पाण्डवान् धार्तराष्ट्रैः ।
हित्वा सिंहान् क्रोष्टुकान् गूहमानः प्राप्ते काले शोचिता त्वं नरेन्द्र॥ 356

பாண்டவர்கள் அழகிய தோகையுள்ள மயில் போன்றவர். உன் புதல்வர்கள் காக்கைகள். காக்கைகளைக் கொண்டு மயில்களை வெல்ல நினைக்கிறீர். சிங்கங்களைப் பராமரிக்காமல்

விட்டு நரிகளைக் காப்பாற்றுகிறீர். அனுபவவேளை வந்ததும் வருத்தப்படுவீர்.

தனக்கு உதவுகிற பணியாளர்

यस्तात न क्रुध्यति सर्वकालं भृत्यस्य भक्तस्य हिते रतस्य ।
तस्मिन्भृत्या भर्तरि विश्वसन्ति न चैनमापत्सु परित्यजन्ति ॥ 357

*தன்னிடம் பக்தியும் தன் நலனில் தீவிரப்பற்றுமுள்ள பணியாளிடம் கோபம் கொள்ளாத யஜமானரைப் பணியாளர் எப்போதும் நம்புவர். அவரை நெருக்கடியில் கைவிடவும் மாட்டார்.*

न भृत्यानां वृत्तिसंरोधनेन राज्यं धनं सञ्जिघृक्षेदपूर्वम् ।
त्यजन्ति ह्येनं वञ्चिता वै विरुद्धाः स्निग्धा ह्यमात्याः परिहीनभोगाः ॥ 358

*தன்னிடம் பணிபுரிபவர்களது வசதிகளைப் பறித்துப் புதிய நாட்டையோ செல்வத்தையோ பெற முடியாது. இவனால் வசதியும் வாய்ப்பும் பறிக்கப்பட்டவர்களும் வஞ்சிக்கப் பட்டவர்களும், நட்பு மிக்க மந்திரியும் கூட, இவனுக்கு விரோதிகளாகி சமயத்தில் இவனைக் கைவிட்டுவிடுவர்.*

कृत्यानि पूर्वं परिसंख्याय सर्वाणि आयव्यये चानुरूपां च वृत्तिम् ।
सङ्गृह्णीयादनुरूपान्सहायान् सहायसाध्यानि च दुष्कराणि ॥ 359

*செய்ய வேண்டிய பணிகளைப் பரிசீலித்து, அதற்கான எல்லா வரவு செலவுகளையும் அவற்றைச் செய்பவர்களின் ஊதியத்தையும் கணித்து, தக்க உதவியாளரை அரசன் நியமிக்க வேண்டும். மிகவும் கடும் செயலைக்கூட தக்க உதவியாளரைக் கொண்டு எளிதில் ஸாதித்து விடலாம்.*

अभिप्रायं यो विदित्वा तु भर्तुः सर्वाणि कार्याणि करोत्यतन्द्री ।
वक्ता हितानां अनुरक्त आर्यः शक्तिज्ञ आत्मेव हि सोऽनुकम्प्यः ॥ 360

*நம்பிக்கைக்குரிய பணியாளன், தன் யஜமானனின் கருத்தை நன்கு உணர்ந்து பின் அப்பணிகளைச் செய்வான். ஹிதத்தைச் சொல்வான். யஜமானனிடம் தொடர்ந்து*

*அன்புடன் பழகுவான். பெருந்தன்மையுள்ளவன். தன் திறமையுணர்ந்தவன். தன்னைப் போல் மதித்துப் பரிவு காட்டத்தக்கவன் இவன். (பாண்டவர்கள் உம்மிடம் பணிந்து பணிபுரிபவர்கள். உமது பரிவுக் குரியவர்கள்).*

वाक्यं तु यो नाद्रियतेऽनुशिष्टः प्रत्याह यश्चापि नियुज्यमानः ।
प्रज्ञाभिमानी प्रतिकूलवादी त्याज्यस्स तादृक् त्वरयैव भृत्यः ॥ 361

*கட்டளையிடப்பட்டிருந்தும் எஜமானனின் சொல்லை மதிக்காதவன், ஒரு பணியைப் புரியும்படி பணிக்கப்பட்டதும் எதிர்த்துப் பேசுபவன், தானே அறிவாளி என்ற செருக்குள்ளவன், எஜமானனுக்கு அநுகூலமல்லாததைப் பேசுபவன், அத்தகைய பணியாள் விரைவில் நீக்கத்தக்கவவன்.*

अस्तब्धं अक्लीबं अदीर्घसूत्रं सानुक्रोशं श्लक्ष्णं अहार्यमन्यैः ।
अरोगजातीयं उदारवाक्यं दूतं वदन्त्यष्टगुणोपपन्नम् ॥ 362

*தூதுவன் எட்டு சிறப்பம்சங்களுடன் இருத்தல் நல மென்பர். திடுக்கிட்டு உறைந்து நில்லாதவன், ஆண்மை இழக்காதவன், சுறுசுறுப்புடன் தயக்கமின்றி செயல்படுபவன், பரிவுள்ளவன், மென்மையுள்ளவன், பிறரால் விலை கொடுத்து வாங்கமுடியாதவன். பிறப்பிலிருந்தே நோயற்றவன், பெருந்தன்மையுடன் பேசுபவன் என.*

நல்லொழுக்கமுறைகள்

न विश्वासाज्जातु परस्य गेहे गच्छेन्नरश्चेतयानो विकाले ।
न चत्वरे निशि तिष्ठेन्निगूढः न राजकाम्यां योषितं प्रार्थयीत ॥ 363

*தவறான நேரத்தில், பிறர் மனையில் அசட்டு நம்பிக்கையுடன் நுழைதல், அகாலத்தில் விழித்திருந்து சுற்றுதல், இருட்டில் தன்னை மறைத்துக் கொண்டு நாற்சந்தியிலிருத்தல், அரசன் விரும்பக் கூடிய பெண்ணைக் கோருதல் இவை செய்யத் தகாதவை.*

न निह्नवं मन्त्रगतस्य गच्छेत् संसृष्टमन्त्रस्य कुसङ्गतस्य ।
न च ब्रूयान्नाश्वसिमि त्वयीति सकारणं व्यपदेशं तु कुर्यात्॥ 364

*மந்திராலோசனைக்காக அழைக்கப் பெற்றவனாயினும், ஏற்கனவே கெட்டவர்களுடன் தொடர்புடன், தாறுமாறாகப் பலவாறாக ஆலோசனை தருகிறவனிடத்தில் ரகசியத்தைச் சொல்லக்கூடாது. உன்னை நான் நம்பவில்லை என்றும் சொல்லக்கூடாது. காரணத்துடன் ஏதோ ஒரு போலியான சாக்கு காட்டி விலக வேண்டும்.*

घृणी राजा पुंश्चली राजभृत्यः पुत्रो भ्राता विधवा बालपुत्रा॥
सेनाजीवी चोद्धृतभूतिरेव व्यवहारेषु वर्जनीयाः स्युरेते ॥ 365

*பரிவால் விட்டுக் கொடுப்பவன், அரசன், வேசி, அரசாங்க சேவகன், புதல்வன், சகோதரன், இளம் மகனுள்ள விதவை, படையிலுள்ளவன், தன் உரிமைகளையும் உடைமைகளையும் இழந்தவன் இவர்களுடன் கொடுக்கல்-வாங்கல் வைத்துக் கொள்ளக் கூடாது.*

गुणा दश स्नानशीलं भजन्ते बलं रूपं स्वरवर्णप्रशुद्धिः ।
स्पर्शश्च गन्धश्च विशुद्धता च श्रीः सौकुमार्यं प्रवराश्च नार्यः॥ 366

*தினந்தோறும் நீராடித் தூய்மை பெற்றவனிடம் வலிவு, அழகு, குரல்வளம், மேனிநிறத் தெளிவு, தோலின் மென்மை, நறுமணம், தூய்மை, சீர், இளமை, அழகிகளின் அன்பு இவை கூடும்.*

गुणाश्च षण्मितभुक्तं भजन्ते आरोग्यमायुश्च बलं सुखं च ।
अनाविलं चास्य भवत्यपत्यं न चैनमाद्यून इति क्षिपन्ति॥ 367

*நோயின்மை, நீண்ட ஆயுள், வலிவு, இன்பம், ஆரோக்கியமுள்ள ஸந்ததி, வெட்கமற்ற பெருந்தீனிக்காரன் என்ற அவப்பெயரின்மை, இந்த ஆறும் அளவோடு உண்பவனைத் தானே சென்றடையும்.*

अकर्मशीलं च महाशनं च लोकद्विष्टं बहुमायं नृशंसम् ।
अदेशकालज्ञमनिष्टवेषं एतान्गृहे न प्रतिवासयेत ॥ 368

*செயலற்றுச் சோம்பி நிற்கப் பழகியவன் பெருந்தீனிக்காரன், சமுதாய விரோதி, பெருவஞ்சகன், பொல்லாதவன், தேசகாலம் அறியாதவன், பாங்காக ஆடை உடுத்தாதவன், இவர்களைத் தன் வீட்டில் தங்கவிடக் கூடாது.*

कदर्यमाक्रोशकमश्रुतं च वनौकसं धूर्तममान्यमानिनम् ।
निष्ठूरिणं कृतवैरं कृतघ्नं एतान् भृशार्तोऽपि न जातु याचेत् ॥ 369

*கஞ்சன், உரக்க நிந்திப்பவன், காட்டுவாசி (கடலாடி) போக்கிரி, மதிக்கத்தக்கவரை மதிக்காதவன், கொடுஞ் செயல் புரிபவன், ஏற்கனவே விரோதம் கொண்டவன், செய் நன்றி மறந்தவன் இவர்களிடம் மிகவும் துன்பமுற்ற நிலையிலும் பொருளுதவி வேண்டக் கூடாது.*

संक्लिष्टकर्माणं अतिप्रमादं नित्यानृतं चादृढभक्तिकञ्च ।
विसृष्टरागं पटुमानिनं चाप्येतान्न सेवेत नराधमान् षट् ॥ 370

*கொடுஞ் செயல் புரிபவர், பெரும் தவறு செய்பவர், தினமும் புளுகுபவர், இறைவனிடம் பக்தி இல்லாதவர், உற்றார் உறவினரிடம் அன்பில்லாதவர், மிகச் சிறந்த திறமையுள்ளவனாக நினைத்துக் கொண்டிருப்பவர் இந்த அறுவரிடமும் பணிபுரியாதே.*

सहायबन्धना ह्यर्थाः सहायाश्चार्थबन्धनाः ।
अन्योन्यबन्धनावेतौ विनान्योन्यं न सिद्ध्यतः ॥ 371

*துணைவர் (உபகரணம்) இன்றி எந்தச் செயலும் நிறைவுறாது. செயலின்றித் துணைவர் (உபகரணம்) பயனற்றவர். இவை ஒன்றையொன்று அண்டியிருப்பவை. ஒன்றில்லாமல் மற்றது நிறைவுறாது.*

उत्पाद्य पुत्राननृणांश्च कृत्वा वृत्तिं च तेभ्योऽनुविधाय काञ्चित् ।
स्थाने कुमारीः प्रतिपाद्य सर्वं अरण्यसंस्थोऽथ मुनिर्बुभूषेत् ॥ 372

*புதல்வர்களைப் பெற்றுக் கடனின்றி வாழச் செய்து அவர்களுக்கு உரியதான வாழ்க்கை தொழில் முதலியவற்றை அமைத்துக் கொடுத்து பெண்களையும் நல்ல இடத்தில்*

மணக்கச் செய்துபின் காட்டில் சென்று முனிவனாக ஆக வேண்டும்.

हितं यत्सर्वभूतानां आत्मनश्च सुखावहम् ।
तत्कुर्यादीश्वरे ह्येतन्मूलं सर्वार्थसिद्धये ॥ 373

*எல்லா உயிரினத்திற்கும் இதமானதை, தனக்கும் இன்பமளிப்பதைச் செய்து அதை ஈசுவரனிடம் அர்ப்பணம் செய்ய வேண்டும். இதுவே எல்லா நலன்களும் பெற வழி.*

बुद्धिः प्रभावस्तेजश्च सत्वमुत्थानमेव च ।
व्यवसायश्च यस्य स्यात् तस्यावृत्तिभयं कुतः ॥ 374

*அறிவும் திறமையும் சுறுசுறுப்பும் வலிவும் முயற்சியும் (தீர்மானமும்) உழைப்புமுள்ளவனுக்கு வாழ்க்கை வசதியின்மை பற்றிய பயம் ஏன்?*

பாண்டவரின் பகை நல்ல தல்ல

पश्य दोषान् पाण्डवैर्विग्रहे ते यत्र व्यथेयुरपि देवाः सशक्राः ।
पुत्रैर्वैरं नित्यमुद्विग्नवासो यशःप्रणाशो द्विषतश्च हर्षः ॥ 375

*பாண்டவர்களுடன் போர்புரிவதால் ஏற்படுகிற கெடுதலைச் சிந்திப்பீர் - தேவர்களும், இந்திரன் உள்பட, வேதனையடைவார்கள், புதல்வர்களுடன் விரோதம், தினமும் திகிலுடன் வாழ்வது, நற்பெயர் கெடுவது, எதிரிகளின் மகிழ்ச்சி என இவையே இந்தக் கெடுதிகள்.*

भीष्मस्य कोपस्तव चैवेन्द्रकल्प द्रोणस्य राज्ञश्च युधिष्ठिरस्य ।
उत्सादयेल्लोकमिमं प्रवृद्धः श्वेतो ग्रहस्तिर्यगिवापतन्खे ॥ 376

*பீஷ்மர், நீர், துரோணர், அரசர் யுதிஷ்டிரர் இவர்களது கோபம் மூண்டால் அது வானில் வால்நட்சத்திரம் போல் உலகையே அழித்துவிடும்.*

तव पुत्रशतं चैव कर्णः पञ्च च पाण्डवाः ।
पृथिवीमनुशासेयुः अखिलां सागराम्बराम् ॥ 377

*உமது நூறு புதல்வர்களும் கர்ணனும் ஐந்து பாண்டவர்களும் கடலை ஆடையாகக் கொண்ட இந்த பூமி முழுவதையும் ஆளத்தக்கவர்கள்.*

धार्तराष्ट्रा वनं राजन् व्याघ्राः पाण्डुसुता मताः ।
मा वनं छिन्धि सव्याघ्रान् मा व्याघ्रा नीनशन्वनात् ॥ 378

*திருதராஷ்டிரரின் பிள்ளைகள் காட்டிற்குச் சமம், பாண்டுவின் புதல்வர்கள் புலிகளுக்குச் சமம். புலிகளுடன் காட்டை யழிப்பதோ, காட்டிலிருந்து புலிகளை விரட்டுவதோ கூடாது.*

न स्याद्वनमृते व्याघ्रान् व्याघ्रा न स्युः ऋते वनम्।
वनं हि रक्ष्यते व्याघ्रैः व्याघ्रान् रक्षति काननम् ॥ 379

*புலியின்றி காடு வாழாது. காடின்றி புலிகள் வாழா. புலிகளால் காடும் காட்டால் புலிகளும் காப்பாற்றப்படுகின்றன.*

न तथेच्छन्ति कल्याणान् परेषां वेदितुं गुणान् ।
यथैषां ज्ञातुमिच्छन्ति नैर्गुण्यं पापचेतसः ॥ 380

*கெட்டநோக்குள்ளவர் பிறரது குறைகளை அறிய விரும்பு மளவில் பிறரது நற்குணங்களை அறிய விரும்பமாட்டார்.*

अर्थसिद्धिं परामिच्छन् धर्ममेवादितश्चरेत् ।
न हि धर्मादपैत्यर्थः स्वर्गलोकादिवामृतम् ॥ 381

*பெரும் பொருள் நிறைவை நாடுபவர், தொடக்கத்திலிருந்தே தர்மத்தைக் கடைபிடிக்க வேண்டும். சுவர்க்கத்தை விட்டு அமிருதம் அகலாததுபோல் தர்மத்தைவிட்டுப் பொருள் அகலாது. (ஸ்வர்க்கம் - சாகாத்தன்மை பெற்றவர் வாழுமிடம். அமிருதம் சாகாத்தன்மை தரும் உணவு. ஸ்வர்க்கத்தில் தான் அமிருதம் கிட்டும். தர்மத்தில்தான் பொருள் தங்கியுள்ளது.)*

यस्यात्मा विरतः पापात् कल्याणे च निवेशितः ।
तेन सर्वमिदं बुद्धं प्रकृतिर्विकृतिश्च या ॥ 382

*தீச்செயலிலிருந்து விலகியவனின் உள்ளம் நற்செயலில் பதிந்திருக்கையில் எது இயற்கை எது செயற்கை என்பது (உண்மை எது பொய் எது என்பது) தெளிவாய்த் தெரியும்.*

यो धर्ममर्थं कामं च यथाकालं निषेवते ।
धर्मार्थकामसंयोगं सोऽमुत्रेह च विन्दति ॥ 383

*அறம் பொருள் இன்பம் என இவற்றைத் தக்க நேரத்தில் பழகுபவனுக்கு இம்மூன்றும் இம்மையிலும் மறுமையிலும் கூடும்.*

सन्नियच्छति यो वेगमुत्थितं कोपहर्षयोः ।
स श्रियो भाजनं राजन् यश्चापत्सु न मुह्यति ॥ 384

*கோபமும் மகிழ்ச்சியும் எழுச்சி அடைகையில் அவற்றின் வேகத்தை அடக்கிக் கொள்பவன் நெருக்கடியின்போது கலங்காதவனுகி சீரின் இருப்பிடமாகிறான்.*

சுய அறிவின் வலிவு

बलं पञ्चविधं नित्यं पुरुषाणां निबोध मे ।
यत्तु बाहुबलं नाम प्रथमं बलमुच्यते ॥ 385

अमात्यलाभो भद्रं ते द्वितीयं बलमुच्यते ।
तृतीयं धनलाभं तु बलमाहुर्मनीषिणः ॥ 386

यत्त्वस्य सहजं राजन्, पितृपैतामहं बलम् ।
अभिजातबलं नाम तच्चतुर्थं बलं स्मृतम् ॥ 387

येन त्वेतानि सर्वाणि संगृहीतानि भारत ।
यद्बलानां बलं श्रेष्ठं तत् प्रज्ञाबलमुच्यते ॥ 388

*மனிதன் பெறுகிற வலிவு ஐந்துவகை. கை வலிவு (தசை வலிவு) முதலாவதாகும். நல்ல அமைச்சர் கிடைப்பது இரண்டாவது. பொருள் கிட்டுவது மூன்றாவது. நற்குலப் பிறப்பு (தன் தந்தை, தந்தையின் தந்தை இவர்கள் வழியே வந்த வம்ச வலிவு) நான்காவது. இவற்றைச் சேமித்து முறைப்படி பயன்படுத்துகிற சுய அறிவு ஐந்தாவது வலிவாகும். இதுவே மிக்கச் சிறந்த வலிவு.*

महते योऽपकाराय नरस्य प्रभवेन्नरः ।
तेन वैरं समासज्य दूरस्थोऽस्मीति नाश्वसेत् ॥ 389

*பிறரைப் பெருந்துன்பத்திற்கு ஆட்படுத்துகிற திறமை யுள்ளவனிடம் விரோதம் பூண்டபின் ''நான் தூரத்தில் தான் இருக்கிறேன்'' என்று நிம்மதி பெறுவது நல்லதல்ல.*

स्त्रीषु राजसु सर्पेषु स्वाध्यायप्रभुशत्रुषु ।
भोगेष्वायुषि विश्वासं कः प्राज्ञः कर्तुमर्हसि ॥ 390

*பெண்களிடத்தில், அரசனிடத்தில், பாம்பிடத்தில், பிரபு விடத்தில், எதிரியிடத்தில், இன்பத்தில், ஆயுளில், நம்பிக்கை கொள்ள இயலுமா? தான் ஓதிய வேதம் நினைவிலிருந்து அகலாது என்று நம்பிக்கை கொள்ள இயலுமா? (நொடியில் மனம் மாறுபவர்கள், நிலையற்றவர்கள் நம்பிக்கைக்கு உரியவரல்ல).*

प्रज्ञाशरेणाभिहतस्य जन्तोः चिकित्सकाः सन्ति न चौषधानि ।
न होममन्त्रा न च मङ्गलानि नाथर्वणा नाप्यगदाः सुसिद्धाः ॥ 391

*(வேறு அம்புகளால் அடிப்பட்டவர்களின் வேதனை நீங்கப் பெரிதும் உதவுகிற) மருத்துவர்களோ மருந்துகளோ, ஹோம மந்திரங்களோ, மங்களச் செயல்களோ, அதர்வ வேதத்தில் கூறப்பட்டுள்ள நோய் நீக்கத்திற்கான முறைகளோ அறிவெனும் அம்பால் அடிப்பட்டவனுக்கு உதவுவதில்லை. (இங்கு புண்ணோ நோயோ இல்லை.)*

सर्पश्चाग्निश्च सिंहश्च कुलपुत्रश्च भारत ।
नावज्ञेया मनुष्येण सर्वे ह्येतेऽतितेजसः ॥ 392

*பாம்பும் நெருப்பும் சிங்கமும் நற் குலத்தில் பிறந்தவனும் மிக்க வலிவுள்ளவராதலால் புறக்கணிக்க இயலாதவர்கள்.*

अग्निस्तेजो महल्लोके गूढस्तिष्ठति दारुषु ।
न चोपयुंक्ते तद्दारु यावन्नोद्दीप्यते परैः ॥ 393

*உலகில் நெருப்பு பெரும் சக்தி. அது மரத்தில் மறைந்துள்ளது. அந்த மரத்திடம் அது தன் சக்தியை பிறரால் கிளப்பிவிடப் படும்வரை காட்டுவதில்லை.*

स एव खलु दारुभ्यः यथा निर्मथ्य दीप्यते ।
तद्दारु च वनं चान्यत् निर्दहत्याशु तेजसा ॥ 394

*அதே நெருப்பு அந்தக் கட்டையைக் கடைவதன்மூலம் கிளப்பிவிடப்படுகிறது. அப்போது அந்த மரத்தையும் காட்டையுமே துரிதமாக எரித்து அழித்து விடுகிறது.*

एवमेव कुले जाताः पावकोपमतेजसः ।
क्षमावन्तो निराकाराः काष्ठेऽग्निरिव शेरते ॥ 395

*அதுபோல் நற்குலத்தில் தோன்றியவர், பொறுமைமிக்க வர்களாக, தன்னுள் குமுறுகின்ற கோபத்தை வெளிக் காட்டாதவராக, நெருப்பை போன்ற சக்திமிக்கவராயினும், கட்டையினுள் அமைதியாயுள்ள நெருப்பைப் போல் அடங்கிக் காண்கின்றனர்.*

लताधर्मा त्वं सपुत्रः सालाः पाण्डुसुता मताः ।
न लता वर्धते जातु महाद्रुममनाश्रिता ॥ 396

*நீரும் உமது பிள்ளைகளும் கொடி போன்றவர்கள். பாண்டுவின் பிள்ளைகளோ தேக்குமரம் (நெடிதுயர்ந்த பெருமரம்) போன்றவர்கள். கொடி பெருமரத்தைச் சுற்றிக் கொள்ளாமல் என்றும் வளராது. வலிவுமிக்க பாண்டவர்களை அண்டி வாழாத உன் புதல்வர்கள் பிறரது கால் மிதிபட்டு அழிந்துவிடுவர்.)*

वनं राजंस्तव पुत्रोऽम्बिकेय सिंहान्वने पाण्डवांस्तात विद्धि।
सिंहैर्विहीनं हि वनं विनश्येत् सिंहा विनश्येयुः ऋते वनेन॥397

*அம்பிகை புதல்வனுன அரசே! உன் புதல்வர்கள் காடு போல். பாண்டுவின் புதல்வர்கள் சிங்கங்கள்போல். சிங்கங்களின்றிக் காடு அழியும். காடின்றிச் சிங்கங்களும் அழியும். (இருவரும் கூடிவாழ வகை செய்வீர்.) (சுலோ 377-379)*

★ ★ ★

# विदुरनीतिः

## षष्ठोऽध्यायः

# விதுர நீதி

## ஆறும் அத்தியாயம்

விருந்தோம்பல்

विदुरः उवाच - *விதுரர் கூறுகிறார்*

ऊर्ध्वं प्राणा उत्क्रामन्ति यूनः स्थविर आगते ।
प्रत्युत्थानाभिवादाभ्यां पुनस्तान्प्रतिपद्यते ॥ 398

*முதியவர் ஒரு வாலிபனின் இருப்பிடத்திற்கு வந்ததும் வாலிபனின் உயிர் வெளிப்பட்டு முதியவரை நோக்கிச் செல்கிறது. வாலிபன் முதியவரை வரவேற்று வணங்குவதால் அவன் தன் உயிரைத் திரும்பத் தன்னிடம் இருத்திக் கொள்கிறான்.*

पीठं दत्वा साधवेऽभ्यागताय आनीयापः परिनिर्णिज्य पादौ।
सुखं पृष्ट्वा प्रतिवेद्यात्मसंस्थां ततो दद्यादन्नमवेक्ष्य धीरः ॥399

*தன்னை நோக்கி வந்துள்ள நல்லவருக்கு அமர ஆசனம் அளித்து, நீர் கொண்டு கால்களலம்பி அவரது சுகம் விசாரித்துத் தன்நிலை தெரிவித்து அப்போதுள்ள நிலைக்கேற்ப உணவளிக்க வேண்டும்.*

यस्योदकं मधुपर्कं च गां च न मन्त्रवित्प्रतिगृह्णाति गेहे।
लोभाद्भयादथ कार्पण्यतो वा तस्यानर्थं जीवितमाहुरार्याः ॥400

*பேராசையாலோ, பயத்தாலோ, கஞ்சத் தனத்தாலோ முறை தவறித் தரப்படுவதன் காரணமாக நீரையோ, தேன் கலந்த தயிரையோ, பசுவையோ (இனிய பேச்சையோ)*

வேதமோதியவன் எவன் வீட்டில் ஏற்கவில்லையோ அவனது வாழ்க்கை வீணானது என்பர்.

चिकित्सकः शल्यकर्ताऽवकीर्णी स्तेनः क्रूरो मद्यपो भ्रूणहा च।
सेनाजीवी श्रुतिविक्रायकश्च भृशं प्रियोऽप्यतिथिर्नोदकार्हः ॥401

மருத்துவன், அம்பு ஆயுதம் தயாரிப்பவன், தவறான வழியில் மகிழ்ந்தவன், திருடன், கொடுஞ் செயல் புரிபவன், மது அருந்துபவன், கருவை அழித்தவன், படையில் சேர்ந்து பிழைப்பவன், வேதத்தை விற்பவன், இவர்கள் எவ்வளவு அன்புக்குரியவரானாலும் விருந்தினராக ஏற்கத் தக்கவரல்ல.

अविक्रेयं लवणं पक्वमन्नं दधि क्षीरं मधु तैलं घृतं च।
तिलाश्च मांसं फलमूलानि शाकं रक्तं वासः सर्वगन्धा गुडाश्च॥402

உப்பு, சமைத்த உணவு, தயிர், பால், தேன், எண்ணெய், நெய், எள், மாமிசம், பழம், கிழங்கு, கறிகாய், சிகப்பு துணி, வாசனைப் பொருள், வெல்லம் இவை விலைக்கு விற்கத்தக்கவையல்ல. (இலவசமாகவோ பண்டமாற்றாகவோ பெறுவதும் தானே உற்பத்தி செய்வதும் நல்லது. இவை எளிதில் மக்களுக்குக் கிடைக்கும்படி செய்வது அரசன் கடமை. தனிப்பட்டவர் விற்பது நல்லதல்ல. வியாபாரிக்கு இந்த நியமமில்லை).

अरोषणो यः समलोष्टकाञ्चनः प्रहीणशोको गतसन्धिविग्रहः।
निन्दाप्रशंसोपरतः प्रियाप्रिये त्यजन्नुदासीनवदेष भिक्षुकः॥ 403

பிச்சை எடுத்து வாழ்கின்ற துறவியானவன் கோபப் படாமல், மண் கட்டியையும் தங்கத்தையும் சமமாகப் பார்ப்பவனாக, இழந்ததைப் பற்றி வருந்தாதவனாக, நட்பால் கூடுவதோ விரோதத்தால் சண்டையிடுவதோ இல்லாதவனாக, தூற்றுவதையும் வாழ்த்துவதையும் செய்யாமல், விருப்பும் வெறுப்புமற்றவனாக, எதனையும் பொருட்டுபடுத்தாதவனாக இருப்பான்.

नीवारमूलेङ्गुदशाकवृत्तिः सुसंयतात्माऽग्निकार्येषु चोद्यः ।
वने वसन्नतिथिष्वप्रमत्तः धुरन्धरः पुण्यकृदेष तापसः ॥ 404

தவம் செய்பவர்களின் முன் நிற்பவன் புண்ணிய கருமங்களைச் செய்பவனாக முன் நிற்பவன், காட்டில் தானே பயிரிடாமல் விளைகின்ற நெல், கிழங்கு, இங்குண மரத்தின் காய், காய் கறி இவற்றால் வயிற்றை வளர்ப்பவனாக, நன்கு மனத்தை அடக்கியவனாக, அக்கினி வழிபாட்டில் ஈடுபட்டவனாக, வருகிற அதிதிகளது பணிவிடையில் மெத்தன மில்லாதவனாகக் காட்டில் வசிப்பான்.

நம்பிக்கை

अपकृत्य बुद्धिमतो दूरस्थोऽस्मीति नाश्वसेत् ।
दीर्घौ बुद्धिमतो बाहू याभ्यां हिंसति हिंसितः ॥ 405

அறிவாளிகளிடம் தவறிழைத்தபின் "நான் அவர்களிடமிருந்து தூரத்திலிருக்கிறேன். (எனக்கு ஒன்றும் நேராது)" என நிம்மதியடையமுடியாது. அறிவாளியின் கைகள் (தவறுகளை தண்டிப்பவை) நீண்டவை. அவற்றைக் கொண்டு அறிவாளி தன்னைத் துன்புறுத்தியவனைத் துன்புறுத்துவான்.

न विश्वसेदविश्वस्ते विश्वस्ते नातिविश्वसेत् ।
विश्वासाद्भयमुत्पन्नं मूलान्यपि निकृन्तति ॥ 406

நம்பத்தகாதவனையும் (தன்னிடம் நம்பிக்கை கொள்ளாதவனையும்) நம்பக் கூடாது. நம்பிக்கைக் குகந்தவனையும் அதிகம் நம்பக் கூடாது. அந்தத் தவறான நம்பிக்கையால ஏற்படும் கேடு வேருடன் அழித்துவிடும்.

अनीर्षुर्गुप्तदारश्च संविभागी प्रियंवदः ।
श्लक्ष्णो मधुरवाक् स्त्रीणां न चासां वशगो भवेत् ॥ 407

பொறாமை இல்லாதவனாக, தன் மனைவியைக் காப்பாற்றுபவனாக, இன்பத்தைப் பகிர்ந்து கொள்பவனாக பிரியமாக இனிதாகப் பேசுபவனாக, மென்மையுள்ளவனாகப்

பெண்களிடம் பழகவேண்டும். அவர்களது வசத்தில் அடங்கியவனாக ஆகக் கூடாது.

पूजनीया महाभागाः पुण्याश्च गृहदीप्तयः ।
स्त्रियः श्रियो गृहस्योक्ताः तस्माद्रक्ष्या विशेषतः ॥ 408

பெண்கள் மதிக்கத்தக்கவர்கள், பாக்கியம் மிக்கவர்கள், புனிதமானவர்கள் வீட்டை விளக்குபவர்கள். வீட்டின் லக்ஷ்மியாக அவர்கள் சிறப்பாகப் பாதுகாக்க வேண்டியவர்கள்.

पितुरन्तःपुरं दद्यान्मातुर्दद्यान्महानसम् ।
गोषु चात्मसमं दद्यात् स्वयमेव कृषिं व्रजेत् ॥
भृत्यैर्वाणिज्यचारं च पुत्रैः सेवेत च द्विजान् ॥ 409

தந்தையிடம் அந்தப்புர நிர்வாகத்தையும், தாயிடம் உணவுச் சாலை நிர்வாகத்தையும் தன்னை ஒத்தவர்களிடம் பசுக்களின் நிர்வாஹத்தையும் கொடுக்க வேண்டும். விவசாயத்தைத் தானே ஏற்கவேண்டும். தன்னை அண்டியவர்களிடம் வாணிபத்தையும் புதல்வர்களிடத்தில் பெரியோரின் பணிவிடையையும் ஒப்படைக்க வேண்டும்.

अद्भ्योऽग्निः, ब्रह्मतः क्षत्रं, अश्मनो लोहमुत्थितम् ।
तेषां सर्वत्रगं तेजः स्वासु योनिषु शाम्यति ॥ 410

நீரிலிருந்து நெருப்பும், அந்தணரினத்திலிருந்து க்ஷத்திரிய இனமும், மண் கட்டியிலிருந்து உலோகமும் உண்டாயின. இவைகளின் சக்தி மற்ற இடங்களில் செயல்பட்ட போதிலும், அததன் தோற்றுவாய்களில் அடங்கி விடுகிறது.

नित्यं सन्तः कुले जाताः पावकोपमतेजसः ।
क्षमावन्तो निराकाराः काष्ठेऽग्निरिव शेरते ॥ 411

நற்குலத்தில் உதித்த நல்லோர்கள் நெருப்பைப் போன்று சக்தி மிக்கவர்கள். பொறுமை மிக்கவராகத் தம் சக்தியை வெளிக்காட்டாதவராக, மரக் கட்டையிலுள்ள நெருப்பு போல் அடங்கியிருப்பர்.

மந்திராலோசனை

यस्य मन्त्रं न जानन्ति बाह्याश्चाभ्यन्तराश्च ये ।
स राजा सर्वतश्चक्षुः चिरमैश्वर्यमश्नुते ॥ 412

*தமது மந்திராலோசனைக் குழுவைச் சாராத வெளியார்களும் உள்ளிருப்பவரும் கூட எவரது செயல் திட்டத்தை அறிய மாட்டார்களோ அத்தகைய அரசன், எப்போதும் எங்கும் கவனத்துடன் இருப்பானாகில் நீண்டநாள் ஆட்சியுரிமையை பெறுவான்.*

करिष्यन्न प्रभाषेत कृतान्येव तु दर्शयेत् ।
धर्मकामार्थकार्याणि तथा मन्त्रो न भिद्यते ॥ 413

*(ஒரு செயலைத் தன் திட்டப்படி) செய்ய விருப்பவன் அதைப் பற்றிப் பிறருடன் கலந்து பேசமாட்டான். செய்ததை மட்டுமே குறிப்பிடுவான். அப்படி அறம் பொருள் இன்பம் பற்றிய அவனது திட்டம் (திட்ட நிலையில்) எப்போதும் வெளிப்படக் கூடாது.*

गिरिपृष्ठं समारुह्य प्रासादं वा रहो गतः ।
अरण्ये निश्शलाके वा तत्र मन्त्रोऽभिधीयते ॥ 414

*மலையின் உச்சியில் அமர்ந்தோ, தன் மாளிகையில் தனிமையில் அமர்ந்தோ, பிறர் துருவிப் பார்க்க முடியாத காட்டிலேயோ ஆலோசனை செய்ய வேண்டும்.*

नासुहृत्परमं मन्त्रं भारतार्हति वेदितुम्।
अपण्डितो वापि सुहृत् पण्डितो वाप्यनात्मवान्॥ 415

*நண்பனல்லாதவனோ. நண்பனாயினும் அறிஞனல்லாதவனோ, அறிஞனாயினும் வாயடக்கமில்லாதவனோ, தனிமையில் ஆலோசித்த ரகசியத்தை அறியக்கூடாது.*

नापरीक्ष्य महीपालः कुर्यात् सचिवमात्मनः ।
अमात्ये ह्यर्थलिप्सा च मन्त्ररक्षणमेव च ॥ 416

செயல் நிறைவின் பொறுப்பும் மந்திராலோசனையின் ரகசியத்தைக் காப்பதும் அமைச்சரிடம் கொடுக்கப் பெறுவதால் தனக்கு அமைச்சராக விருப்பவரை அரசன் நன்கு சோதித்தே நியமிக்க வேண்டும்.

कृतानि सर्वकार्याणि यस्य पारिषदा विदुः ।
धर्मे चार्थे च कामे च स राजा राजसत्तमः ॥417

அரசவையிலிருப்பவர், தர்மம் பொருள் இன்பம் என்ற மூன்றிற்காகச் செய்த தன் பணிகளை முடிந்த பிறகே அறியச் செய்கிற அரசரே அரசர்களுள் சிறந்தவர்.

गूढमन्त्रस्य नृपतेः तस्य सिद्धिरसंशयम् ।
अप्रशस्तानि कार्याणि यो मोहादनुतिष्ठति ।
स तेषां विपरिभ्रंशात् भ्रश्यते जीवितादपि ॥ 418

மந்திர ஆலோசனையை ரகசியமாக வைத்துள்ள அரசனுக்குத்தான், திட்டமிடப்பட்ட செயல்கள் நிறைவு பெறும். மதிமயங்கி, பாராட்டுக்குரியதல்லாத செயல்களைத் தொடர்ந்து செய்கிற அரசன் அவைகளால் ஏற்படுகிற விபரீத விளைவுகளால் உயிரிழக்கவும் நேரும்.

कर्मणां तु प्रशस्तानां अनुष्ठानं सुखावहम् ।
तेषामेवाननुष्ठानं पश्चात्तापकरं परम् ॥ 419

நற்பணிகளைத் தொடர்ந்து செய்வது இன்பம் தரும். நற்பணிகளைத் தொடர்ந்து செய்யாதிருப்பது பின் வருந்தக் காரணமாகும்.

अनधीत्य यथा वेदान्न विप्रः श्राद्धमर्हति ।
एवमश्रुतषाड्गुण्यो न मन्त्रं श्रोतुमर्हति ॥ 420

வேதத்தை ஓதாதிருக்கிற அந்தணன் உயிர் நீத்தாருக்கான சடங்குகளில் பங்கு பெற முடியாது. அதே போன்று (ஆட்சிக்கு முக்கியமான சமாதானம், சண்டை, போருக்கு ஆயத்தம், முற்றுகை, பிரித்தாளுதல், சரணடைதல் என்ற)

*ஆறங்கங்களை முறைப்படி கேட்டறியாதவன் மந்திராலோ சனையைக் கேட்கத் தகுதி பெறுவதில்லை.*

நல்லாட்சி முறை

**स्थानवृद्धिक्षयज्ञस्य षाड्गुण्यविदितात्मनः ।**
**अनवज्ञातशीलस्य स्वाधीना पृथिवी नृप ॥** 421

*தனது படை வலிவு, நிதி வலிவு, நாட்டின் வலிவு இவற்றின் நிறைவுகளையும் குறைகளையும் அறிந்தவனும் முன் கூறிய ஆறங்கங்களில் தேர்ந்தவனும், ஒழுக்கத்தைப் புறக்கணிக்காதவனுமான அரசனிடத்தில் நாட்டின் ஆட்சி வசப்பட்டிருக்கும்.*

**अमोघक्रोधहर्षस्य स्वयं कृत्वाऽन्ववेक्षिणः ।**
**आत्मप्रत्ययकोशस्य वसुधैव वसुन्धरा ॥** 422

*கோபமும் மகிழ்ச்சியும் வீணாகாதபடி காப்பவனும் செய்த பணியை மறுபடி பரிசீலனை செய்பவனும் தன் திறமையில் நம்பிக்கையையே நிதியாகக் கொண்டவனுமான அரசனுக்கு நாடு நிறையச் செல்வம் தரும்.*

**नाममात्रेण तुष्येत छत्रेण च महीपतिः ।**
**भृत्येभ्यो विसृजेदर्थान् नैकस्सर्वहरो भवेत् ॥** 423

*தான் நல்ல அரசன் என்ற பெயர் பெற்றதாலும் அரசுரிமையைக் காட்டுகிற குடையாலும் அரசன் திருப்திப் படவேண்டும். தன் செல்வத்தைத் தனக்குப் பணி செய்து உதவுபவர்களுக்கு பகிர்ந்தளிக்க வேண்டும். தான் ஒருவனே எல்லாவற்றையும் அனுபவிக்கக் கூடாது.*

**ब्राह्मणं ब्राह्मणो वेद भर्ता वेद स्त्रियं तथा ।**
**अमात्यं नृपतिर्वेद राजा राजानमेव च ॥** 424

*அந்தணனே அந்தணனை அறிவான். கணவனே மனைவியை அறிவான். அரசனே அமைச்சனை அறிவான். அரசனே அரசனை அறிவான்.*

न शत्रुर्वशमापन्नो मोक्तव्यो वध्यतां गतः ।
न्यग्भूत्वा पर्युपासीत वध्यं हन्याद्बले सति ।
अहताद्धि भयं तस्मात् जायते न चिरादिव ॥ 425

*தன் வசத்தில் அகப்பட்ட எதிரி கொல்லத்தக்கவனாயின் அவனை விடுதலை செய்யக் கூடாது. அவன் வலுத்திருந்து தன் தலை குனிய நேர்ந்தால் அவனுக்கடங்கிப் பணிவிடை செய்ய வேண்டும். தன் வலிவு ஏறியபின் அவனைக் கொன்றுவிட வேண்டும். அவனைக் கொல்லாவிடில், வெகு சீக்கிரமே கேடு நேரும்.*

दैवतेषु प्रयत्नेन राजसु ब्राह्मणेषु च ।
नियन्तव्यः सदा क्रोधः वृद्धबालातुरेषु च ॥ 426

*கடவுள், அரசன், அந்தணர், முதியவர், சிறுவர், நோய்வாய்ப்பட்டவர் இவர்களிடம் ஏற்பட்ட கோபத்தை அடக்கிவிட வேண்டும்.*

निरर्थं कलहं प्राज्ञो वर्जयेन्मूढसेवितम् ।
कीर्तिं च लभते लोके न चानर्थेन युज्यते ॥ 427

*மூடர்கள் கையாள்கிற பயனற்ற கலகத்தை அறிவாளி தவிர்க்க வேண்டும். அதனால் புகழ் பெருகும், கேடுவிளையாது.*

न बुद्धिर्धनलाभाय न जाड्यमसमृद्धये ।
लोकपर्यायवृत्तान्तं प्राज्ञो जानाति नेतरः ॥ 428

*அறிவு செல்வத்தைச் சேமித்துக் தராது. அறிவின்மை ஏழ்மையைத் தராது. அறிவுள்ளவன் உலகியல்பை நன்கறிவான். அறிவில்லாதவன் இதனை அறியமாட்டான். (அறிவு நல்லதைச் செய்யத் தூண்டுகிறது. அதனால் செல்வம் பெருகுகிறது. அறிவின்மை நல்லதை நாடச் செய்யாது. அதன் விளைவே ஏழ்மை).*

विद्याशीलवयोवृद्धान् बुद्धिवृद्धांश्च भारत ।
धनाभिजातवृद्धांश्च नित्यं मूढोऽवमन्यते ॥ 429

கல்வியாலும் ஒழுக்கத்தாலும் வயதாலும் அறிவாலும் செல்வத்தாலும் குலப்பிற ப்பாலும் முதிர்ந்தவர்களை மூடன் மதிப்பதில்லை.

अनार्यवृत्तमप्राज्ञं असूयकमधार्मिकम् ।
अनर्थाः क्षिप्रमायान्ति वाग्दुष्टं क्रोधनं तथा ॥ 430

ஒழுக்கமற்றவன், சுய அறிவில்லாதவன், அசூயை உள்ளவன், தர்மப் பற்றில்லாதவன், வாயால் கெட்டவன், கோபமில்லாதவன் இவர்களைக் கேடுகள் விரைவில் சென்றடையும்.

अविसंवादनं दानं समयस्याव्यतिक्रमः ।
आवर्तयन्ति भूतानि सम्यक् प्रणिहिता च वाक् ॥ 431

வஞ்சகமும் முரண்பாடுமற்ற கொடை, ஒப்பந்தம் மீறாமை, பொருளுள்ள நன்கு அமைந்த பேச்சு, இவை உயிரினத்தையே கவர்ந்துவிடும்.

अविसंवादको दक्षः कृतज्ञो मतिमानृजुः ।
अपि संक्षीणकोशोऽपि लभते परिवारणम् ॥ 432

முன் பின் முரண்படாதவன், திறமை மிக்கவன், நன்றியுணர்ந்தவன், அறிஞன், நேர்மையுள்ளவன், இத்தகைய அரசனது நிதி நிலை தாழ்ந்திருந்தபோதும் மந்திரி அமைச்சர் மக்கள் முதலானோர் துணை நிற்பர்.

धृतिः शमो दमः शौचं कारुण्यं वागनिष्ठुरा ।
मित्राणां चानभिद्रोहः सप्तैताः समिधः श्रियः ॥ 433

உறுதி, மன அடக்கம், புலனடக்கம், தூய்மை, பரிவு, மென்மையுள்ள சொல், நண்பருக்குத் துரோக மிழைக்காமை, இவ்வேழும் செல்வச் செழிப்பிற்குத் தூண்டுகோல்.

असंविभागी दुष्टात्मा कृतघ्नो निरपत्रपः ।
तादृङ्नराधिपो लोके वर्जनीयो नराधिप ॥ 434

சுகதுக்கங்களையும் செல்வத்தையும் பகிர்ந்து கொள்ளாதவன், பொல்லாதவன், செய்நன்றி மறந்தவன், நாணமற்றவன், இத்தகைய அரசன் ஆளத்தகுதியற்றவன்.

न च रात्रौ सुखं शेते ससर्प इव वेश्मनि ।
यः कोपयति निर्दोषं सदोषोऽभ्यन्तरं जनम् ॥ 435

தவறிழைத்தவன் தவறிழைக்காத சுற்றத்தானைத் தனக்கு எதிரியாக்கிக்கொண்டபின் வீட்டினுள் பாம்பைச் சுற்றவிட்டவன் போல் இரவில் நிம்மதியாகத் தூங்க முடியாது.

येषु दुष्टेषु दोषः स्याद्योगक्षेमस्य भारत ।
सदा प्रसादनं तेषां देवतानामिवाचरेत् ॥ 436

எவர் மனத்தைப் புண்படுத்தினால் தனது நலனுக்குக் கேடு நேருமோ தைவத்திற்குச் செய்வது போல் பணிவிடை மூலம் அவரது மனத்தை எப்போதும் குளிர்வித்துக் கொண்டிருக்க வேண்டும்.

येऽर्थाः स्त्रीषु समायुक्ताः प्रमत्तपतितेषु च ।
ये चानार्ये समासक्ताः सर्वे ते संशयं गताः ॥ 437

பெண்கள், கவனக் குறைவுள்ளவர்கள், சமூகக்கட்டுப்பாட்டால் நீக்கப்பட்டவர், நீசத் தன்மையுள்ளவர் இவர்களிடம் ஒப்படைத்த விஷயங்களில் வெற்றி நிச்சயமல்ல.

यत्र स्त्री यत्र कितवो बालो यत्रानुशासिता ।
मज्जन्ति तेऽवशा राजन्नद्यामश्मप्लवा इव ॥ 438

பெண், சூதாடி, சிறுவன், இவர் வாழ்க்கைக்கு வழிகாட்டிகளானால் மண்கட்டியாலான ஓடத்தில் ஆற்றைத் தாண்டுவதுபோலாகும்.

प्रयोजनेषु ये सक्ताः न विशेषेषु भारत ।
तानहं पण्डितान्मन्ये विशेषा हि प्रसङ्गिनः ॥ 439

பொதுவாக எதிர்பார்க்கிற பலனில் மட்டும் நிலைத்த குறிவைத்து, அந்தப் பலனைத் தரக்கூடிய செயல்முறை சாதனம் முதலிய உள் விவரங்களில் நீக்கு-போக்கிற்கு இடமளிப்ப வர்களே அறிவாளிகள். செயல்முறை, சாதனம் முதலியவை சமயத்திற் கேற்ப மாறுபடக் கூடும்.

यं प्रशंसन्ति कितवाः यं प्रशंसन्ति चारणाः ।
यं प्रशंसन्ति बन्धक्यः न स जीवति मानवः ॥ 440

சூதாடிகளாலும் நாடோடிகளாலும் வேசிகளாலும் புகழப் படுகிற மனிதன் உயிருடன் வாழ்வதாகச் சொல்ல இயலாது.

हित्वा तान् परमेष्वासान् पाण्डवानमितौजसः ।
आहितं भारतैश्वर्यं त्वया दुर्योधने महत् ॥ 441

तं द्रक्ष्यसि परिभ्रष्टं तस्मात् त्वमचिरादिव ।
ऐश्वर्यमदसंमूढं बलिं लोकत्रयादिव ॥ 442

அந்த பெரும் வில்லாளிகளும் அளக்க வொண்ணாத சக்திமிக்கவர்களுமான பாண்டவர்களை நீக்கிவிட்டு துர்யோதனனிடம் இந்த பெரும் ஆளும் பொறுப்பு உம்மால் ஒப்படைக்கப்பட்டுள்ளது. ஆட்சித் திமிரால் தன்னை மறந்து நிற்கிற துர்யோதனன் விரைவில் ஆட்சியிலிருந்து, மூவுலக ஆட்சியிலிருந்து பலி மகாராஜன் விழுந்ததுபோல் விழுவதைக் காண்பீர்.

★ ★ ★

# विदुरनीतिः

## सप्तमोऽध्यायः

# விதுர நீதி

## ஏழாம் அத்தியாயம்

வளர்ச்சியும் தேய்வும்

विदुर उवाच - *விதுரர் கூறுகிறார்*

अप्राप्तकालं वचनं बृहस्पतिरपि ब्रुवन् ।
लभते बुद्ध्यवज्ञानं अवमानं च भारत ॥ 443

*பிரஹஸ்பதியாயினும், நேரத்திற்குப் பொருந்தாத பேச்சைப் பேசினால், அறிவில்லாதவனென மதிக்கப்பட்டு அவமானமும் பெறுவான்.*

प्रियो भवति दानेन प्रियवादेन चापरः ।
मन्त्रमूलबलेनान्यो यः प्रियः प्रिय एव सः ॥ 444

*அன்பளிப்பால் பிரியமாகுபவன் ஒருவன். இனிக்கப் பேசுவதால் பிரியமாகுபவன் மற்றொருவன். தக்க யோசனை கூறுவதால் பிரியமானவனே உண்மையில் பிரியன். (நான் அத்தகைய பிரியனாக இருக்க விரும்புகிறேன்.)*

द्वेष्यो न साधुर्भवति न मेधावी न पण्डितः ।
प्रिये शुभानि कार्याणि द्वेष्ये पापानि चैव हि ॥ 445

*வெறுக்கப்பட்டவன் என்றுமே நல்லவனாக, அறிஞனாக, கற்றுத்தேர்ந்தவனாக மதிக்கப்பெறுவதில்லை. 'பிரியன்தான் நற்செயல் புரிபவன். வெறுக்கப் பெற்றவன் கெட்டதையே செய்வான்' என்ற எண்ணம் உள்ளது. (அது தவறு)*

उक्तं मया जातमात्रेऽपि राजन् दुर्योधनं त्यज पुत्रं त्वमेकम्।
तस्य त्यागात्पुत्रशतस्य वृद्धिः अस्यात्यागात् पुत्रशतस्य नाशः॥446

*அரசே! பிறந்த உடனேயே துர்யோதனன் என்ற ஒரு பிள்ளையை தியாகம் செய்வீர் என்று சொன்னேன். அவனது தியாகத்தால் நூறு பிள்ளைகளின் வளர்ச்சி உண்டு. அவனைத் தியாகம் செய்யாததால் நூறு பிள்ளைகளின் அழிவு உண்டு என்றேன்.*

न वृद्धिर्बहुमन्तव्या या वृद्धिः क्षयमावहेत् ।
क्षयोऽपि बहुमन्तव्यो यः क्षयो वृद्धिमावहेत् ॥ 447
न स क्षयो महाराज यः क्षयो वृद्धिमावहेत् ।
क्षयः स त्विह मन्तव्यो यं लब्ध्वा बहु नाशयेत्॥ 448

*அழிவைத் தருகிற வளர்ச்சி வளர்ச்சியில்ல. எந்த ஒன்றின் அழிவு பலவற்றின் வளர்ச்சிக்குக் காரணமாகுமோ அந்த அழிவை வரவேற்க வேண்டும். ஏனெனில் வளர்ச்சியைக் கொணர்கிற அந்த அழிவு அழிவல்ல. எந்த ஒன்றைப் பெற்றதால் பலவற்றின் அழிவு நேருமோ அந்த லாபமே அழிவின் மூலம்.*

समृद्धा गुणतः केचित् भवन्ति धनतोऽपरे ।
धनवृद्धान् गुणैर्हीनान् धृतराष्ट्र विसर्जय ॥ 449

*சிலர் குணத்தால் செழித்தவர்கள். சிலர் தனத்தால் செழித்தவர்கள். செல்வத்தால் செழித்தவர் குணக்குறைவுள்ளவராயின் அவர்களை வெளியேற்றி விடுவீர்.*

धृतराष्ट्रः उवाच - *திருதராஷ்டிரர் கூறுகிறார்*

सर्वं त्वमायतीयुक्तं भाषसि प्राज्ञसंमतम् ।
न चोत्सहे सुतं त्यक्तुं यतो धर्मस्ततो जयः ॥ 450

*வருங்காலத்திற்குப் பொருந்துமாறும் அறிவாளிகள் ஏற்குமாறும் அனைத்தையும் பேசுகிறாய். தர்மமிருக்குமிடத்தில்தான் வெற்றி. ஆனால் என் புதல்வனைக் கைவிட நான் விரும்பவில்லை.*

பிறரைத் துன்புறுத்தாதே

विदुर उवाच- *விதுரர் கூறுகிறார்*

अतीव गुणसंपन्नो न जातु विनयान्वितः ।
सुसूक्ष्ममपि भूतानां उपमर्दं उपेक्षते ॥ 451

*மிகவும் சிறந்தவனாகிப் பண்பட்டவன் சிறிதளவு கூட உயிரினத்திற்கு ஏற்படுகிற துன்புறுத்தலைப் பொறுக்க மாட்டான். (நீரோ மற்ற அனைவரும் துன்புறுத்தப்பட்டாலும் துரியோதனன் நல்வாழ்வு வாழ்வதை எதிர்பார்க்கிறீர்).*

கெட்டவருடன் சேராதே

परापवादे निरताः परदुःखोदयेषु च ।
परस्परविरोधे च यतन्ते सततोत्थिताः ॥ 452

सदोषं दर्शनं येषां संवासे सुमहद्भयम् ।
अर्थादाने महान्दोषः प्रदाने च महद्भयम् ॥ 453

ये वै भेदनशीलास्तु सकामाः निस्त्रपाः शठाः ।
ये पापा इति विख्याताः संवासे परिगर्हिताः ।
युक्ताश्चान्यैर्महादोषैः ये नरास्तान् विवर्जयेत् ॥ 454

*பிறரைப் பற்றி அவதூறு கூறுவதிலும் பிறருக்குத் துன்பம் விளைவிப்பதிலும், ஒருவருக்கொருவர் கலகம் ஏற்படுத்துவதிலும் எப்போதும் முயன்று வருபவர்களை ஒதுக்க வேண்டும். அவர்களைக் காண்பதே குற்றம். அவர்களுடன் கூடி வாழ்வது பெருத்த கேடு விளைவிக்கும். அவர்களிடமிருந்து பொருள் பெறுவது பெரும் தவறு. அவர்களுக்குப் பொருளுதவி செய்தால் பெருங்கேடுவரும். கருத்து வேறுபாடு உண்டாக்குவதே இயல்பாகக் கொண்டவர்களும் காம வெறியும் வெட்கமின்மையும், போக்கிரித்தனமும் கொண்ட வர்களுமான பாபிகள் கூடி வாழத்தகாதவர்கள். இத்தகைய பெருந்தவறிழைப்பவர்களை ஒதுக்கிவிட வேண்டும்.*

निवर्तमाने सौहार्दे प्रीतिर्नीचे प्रणश्यति ।
या चैव फलनिर्वृत्तिः सौहृदे चैव यत्सुखम् ॥ 455
यतते चापवादाय यत्नमारभते क्षये ।
अल्पेऽप्यपकृते मोहान्न शान्तिमधिगच्छति ॥ 456
तादृशैः संगतं नीचैः नृशंसैः अकृतात्मभिः ।
निशाम्य निपुणं बुद्ध्या विद्वान्दूराद्विवर्जयेत् ॥ 457

*நட்பு முறிந்தவுடன் பிரியமகன்றுவிடும். நட்பால் விளைந்த நற்பயனும் இன்பமும் மறைந்து விடும். நண்பனை இழிவு படுத்தவும் அழிக்கவும் முற்படுவான். செய்த சிறு தவற்றையும் பொறுக்க மாட்டான். அத்தகைய நீசன் பொல்லாதவன். மனத்தில் கெட்ட எண்ணமுள்ளவனோடு உறவு கொள்வதை நன்று நிதானித்துக் கைவிடவேண்டும்.*

**உற்றார்-உறவினருக்கு உதவுதல்**

यो ज्ञातिमनुगृह्णाति दरिद्रं दीनमातुरम् ।
स पुत्रपशुभिर्वृद्धिं श्रेयश्चानन्त्यमश्नुते ॥ 458

*ஏழையும் வாடியவனும் வேதனைப் படுபவனுமான உறவினனுக்கு உதவுபவன் தனது குடும்பமும் கால் நடைகளும் செழிப்புற எல்லையற்ற பேரானந்த மடைவான்.*

ज्ञातयो वर्धनीयास्तैः य इच्छन्त्यात्मनः शुभम् ।
कुलवृद्धिं च राजेन्द्र तस्मात्साधु समाचर ॥ 459

श्रेयसा योक्ष्यते राजन् कुर्वाणो ज्ञातिसत्क्रियाम् ।
विगुणा अपि संरक्ष्या ज्ञातयो भरतर्षभ ॥
किं पुनर्गुणवन्तस्ते त्वत्प्रसादाभिकांक्षिणः ॥ 460

*தன் நலத்தையும் தன் குலநலத்தையும் விரும்புபவர்களால் உறவினர் காப்பாற்றப் படவேண்டும். உறவினருக்கு மதிப்பு தருபவன் நன்மை பெறுவான். உறவினர் குணம் கெட்டவ ராயினும் காப்பாற்றப் படத்தக்கவரே. பாண்டவர்களோ மிக நல்லவர்கள், உன்னிடமிருந்து ஆதரவை எதிர்பார்ப்பவர்கள்.*

प्रसादं कुरु वीराणां पाण्डवानां विशांपते ।
दीयतां ग्रामकाः केचित् तेषां वृत्यर्थमीश्वर ॥ 461

एवं लोके यशः प्राप्तं भविष्यति नराधिप ।
वृद्धेन हि त्वया कार्यं पुत्राणां तात शासनम् ॥ 462

*அரசே! வீரர்களான பாண்டவர்களுக்கு அன்புடன் ஆதரவு தாரீர். சில சிறு கிராமங்களை அவர்களது வாழ்க்கை வசதிக்காகத் தருவீர். இதனால் உலகில் உமக்குப் பெரும் புகழ் கிட்டும். வயதில் மூத்தவரான நீர் உமது புத்திரர்களை அடக்குவீர்.*

मया चापि हितं वाच्यं विद्धि मां त्वद्धितैषिणम् ।
ज्ञातिभिर्विग्रहस्तात न कर्तव्यः शुभार्थिना ॥ 463

सुखानि सह भोज्यानि ज्ञातिभिर्भरतर्षभ ।
संभोजनं संकथनं संप्रीतिश्च परस्परम् ॥ 464

ज्ञातिभिस्सह कार्याणि न विरोधः कदाचन ।
ज्ञातयस्तारयन्तीह ज्ञातयो मज्जयन्ति च ॥ 465

*நானும் உமக்கு இதம் கூறக் கடமைப் பட்டவன். நான் உமது இதத்தையே நாடுபவன் என்பதை அறிவீர். உறவினருடன் கூட சுகங்களை அனுபவித்தல், கூட உணவு அருந்துதல், கூடிப்பேசுதல், கூடி உறவாடுதல் என்று ஒருவருக்கொருவர் அன்புடன் பழக வேண்டும். எந்நிலையிலும் விரோதம் கூடாது. உறவினரே வாழவைப்பவர். உறவினரே அழிப்பர்.*

सुवृत्तास्तारयन्तीह दुर्वृत्ता मज्जयन्ति च ।
सुवृत्तो भव राजेन्द्र पाण्डवान्प्रति मानद ॥
अधर्षणीयः शत्रूणां तैर्वृतस्त्वं भविष्यसि ॥ 466

*நன்னடத்தையுள்ள உறவினர் காப்பாற்றுவர். கெட்ட நடத்தையுள்ளவர் அழிப்பர். நீர் பாண்டவர் விஷயத்தில்*

*நல்லவராக இருப்பீர். பாண்டவர் சூழ்ந்திருக்க எதிரிகளால் தகர்க்க முடியாதவாறு வாழ்வீர்.*

श्रीमन्तं ज्ञातिमासाद्य यो ज्ञातिरवसीदति ।
दिग्धहस्तं मृग इव स एनस्तस्य विन्दति ॥ 467

*விஷம் தடவிய அம்புள்ள வேடனை அணுகிய மான்போல், செல்வம் மிக்க உறவினனை அண்டிய உறவினன் துயருறுவானேயாகில் அவனைத் துயருக்குள்ளாக்கிய பாபம் செல்வ மிக்க உறவினனைச் சாரும்.*

पश्चादपि नरश्रेष्ठ तव तापो भविष्यति ।
तान्वा हतान् सुतान्वापि श्रुत्वा तदनुचिन्तय ॥ 468

येन खट्वां समारूढः परितप्येत कर्मणा ।
आदावेव न तत्कुर्यात् अध्रुवे जीविते सति ॥ 469

*பாண்டவர்களோ அல்லது உன் புதல்வர்களோ அழிந்தனர் என்று பின் கேட்கப் பெறும்போது வருந்தப் போகிறீர். கட்டிலில் படுக்கப் போனவன் தான் செய்த செயல்களால் வருந்த நேரிடுமாகில் அந்தச் செயலை முதலிலேயே செய்யாதிருக்க வேண்டும். (பின் வருந்திப் பயனில்லை) வாழ்வு நிலையற்றது.*

न कश्चिन्नापनयते पुमानन्यत्र भार्गवात् ।
शेषसंप्रतिपत्तिस्तु बुद्धिमत्स्वेव तिष्ठति ॥ 470

*சுக்ராசாரியரைத் தவிர வேறு எவரும் தவறான வழியில் அழைத்துச் செல்ல மாட்டார். (சுக்ரரின் நீதி முறை அசுரர் களுக்காக வகுக்கப் பெற்றது). காலதேச வர்த்தமானங் களுக்கேற்ப வழிவகுத்துக் கொள்வது அறிஞனின் பொறுப்பு.*

दुर्योधनेन यद्येतत् पापं तेषु पुरा कृतम् ।
त्वया तत्कुलवृद्धेन प्रत्यानेयं नरेश्वर ॥ 471

*துர்யோதனன் அவர்களிடம் நடந்து கொண்டது தவருனது. அதை குலத்தில் முதியவரான நீர் தான் திருத்தி அமைக்க வேண்டும்.*

तांस्त्वं पदे प्रतिष्ठाप्य लोके विगतकल्मषः ।
भविष्यसि नरश्रेष्ठ पूजनीयो मनीषिणाम् ॥ 472

*அவர்களை உரிய அதிகாரத்தில் அமர்த்தி உலகில் அவப்பெயரைப் போக்கி, அறிவாளிகளால் பாராட்ட பெறுவீர்.*

அறிஞர் அறிவுரைப்படி நடத்தல்

सुव्याहृतानि धीराणां फलतः परिचिन्त्य यः ।
अध्यवस्यति कार्येषु चिरं यशसि तिष्ठति ॥ 473

*அறிவாளிகள் கூறியதைச் செயல் நோக்குடன் சிந்தித்துச் செயலில் உறுதியுடன் ஈடுபடுபவன் நிலைத்த புகழைப் பெறுகிருன்.*

असम्यगुपयुक्तं हि ज्ञानं सुकुशलैरपि ।
उपलभ्यं नाविदितं विदितं चाननुष्ठितम् ॥ 474

*திறமையுள்ளவனுயினும் அறிவாளிகளின் அறிவுரையால் பெற்ற அறிவைச் செயலில் பயன்படுத்தாவிடில், (முறை கெட்டுச் செயல் படுத்தினுல்) பலன் தரக் கூடியதை அறியத் தவறியதாகவும், அறிந்ததைப் பின்பற்ருததாயும் ஆகும். (அறிவுரை பலன் தரக்கூடியதை அறிவிக்கும். அதன்படி நடந்தால் விரும்பியதைப் பெறலாம். நடக்காவிடில் பெற்ற அறிவுரை வீண்).*

पापोदयफलं विद्वान्यो नारभति वर्धते ।
यस्तु पूर्वकृतं पापमविमृश्यानु वर्तते ।
अगाधपङ्के दुर्मेधाः विषमे विनिपात्यते ॥ 475

*பாபத்தை விளைவிக்கின்ற செயலைத் தொடங்காதவன் அறிவாளி. அவன் வளர்ச்சி பெறுவான். முன் செய்த தகாத*

*செயலைச் சிறிதும் சிந்தியாமல் தொடர்பவன் கேடுவிளைகின்ற ஆழ்ந்த சேற்றில் தானே தன்னைத் தள்ளிக் கொள்கிறான்.*

ரகசிய ஆலோசனையில் குறைகள்

**मन्त्रभेदस्य षट् प्राज्ञो द्वाराणीमानि लक्षयेत् ।**
**अर्थसन्ततिकामश्च रक्षेदेतानि नित्यशः ॥ 476**

**मदं स्वप्नं अविज्ञानं आकारं चात्मसंभवम् ।**
**दुष्टामात्येषु विस्रंभं दूताच्चाकुशलादपि ॥ 477**

**द्वाराण्येतानि यो ज्ञात्वा संवृणोति सदा नृप ।**
**त्रिवर्गाचरणे युक्तः स शत्रूनधितिष्ठति ॥ 478**

*ரகசியத்தில் செய்த அரசியல் ஆலோசனை, பலரறிய வெளிப்பட இந்த ஆறும் ஓட்டைகள். பொருளாதாரச் சீருடன் ஆட்சி நீடிக்கத் தினமும் மந்திர ஆலோசனை ரகசியங்களைக் காப்பாற்ற வேண்டும். மதுவால் ஏற்படும் போதை, தூக்கம், பிறரது விரோதச் செயல்களை அறியாமை, மனக் கலக்கத்தை வெளிப்படுத்துகிற முகசாடை, கெட்ட அமைச்சர்களிடம் நம்பிக்கை, திறமையற்ற தூதுவர் இந்த ஆறும் ரகசியம் வெளிப்படுகிற ஓட்டைகள். இவற்றை அடைப்பவன் அறம் பொருள் இன்பம் என்ற மூன்றையும் பெற்று எதிரிகளையும் அடக்குவான்.*

நூலறிவின் பெருமை

**न वै श्रुतमविज्ञाय वृद्धाननुपसेव्य वा ।**
**धर्मार्थौ वेदितुं शक्यौ बृहस्पतिसमैरपि ॥ 479**

*நூல்களைக் கற்றறியாமல், அறிவுமிக்க முதியோர்களுக்குப் பணிவிடை செய்யாமல் (வித்யையும் வினயமு மில்லாமல்) பிருஹஸ்பதிக் கொப்பானவனும் கூட அறம் பொருள் இவற்றை உணர இயலாது.*

नष्टं समुद्रे पतितं नष्टं वाक्यमशृण्वति ।
अनात्मनि श्रुतं नष्टं नष्टं हुतमनग्निकम् ॥ 480

*கடலில் வீழ்ந்தது வீண். கருத்தூன்றிக் கேட்காதவனிடம் கூறியது வீண். அடக்கமில்லாதவன் ஓதியதும் கற்றதும் வீண். நெருப்பற்ற சாம்பலில் ஹோமம் செய்தது வீண்.*

நல்ல நண்பன்

मत्या परीक्ष्य मेधावी बुद्ध्या संपाद्य चासकृत् ।
श्रुत्वा दृष्ट्वाऽथ विज्ञाय प्राज्ञैर्मैत्रीं समाचरेत् ॥ 481

*கூரிய அறிவால் முதலில் சோதித்துப் பார்த்து பின் பல நாட்கள் கவனத்துடன் படிக்கக் கேட்டும் பார்த்தும் நல்லதென உணர்ந்த பின் அறிவாளிகளுடன் நட்பை அமைத்துக் கொள்ள வேண்டும்.*

अकीर्तिं विनयो हन्ति हन्त्यनर्थं पराक्रमः ।
हन्ति नित्यं क्षमा क्रोधं आचारो हन्त्यलक्षणम् ॥ 482

*கெட்ட பெயரைப் பணிவு போக்கும். திறமை கேட்டைப் போக்கும். பொறுமை கோபத்தைப் போக்கும். (கோபம் வெறியாகப் பரவும்போது அதனுல் தூண்டப் பெற்ற செயலேத் தள்ளிப் போடுவதே பொறுமை). தொடர்ந்து நன்னடத்தை அமங்களத்தைப் போக்கும்.*

परिच्छदेन क्षेत्रेण वेश्मना परिचर्यया ।
परीक्षेत कुलं राजन् भोजनाच्छादनेन च ॥ 483

*தளவாடங்கள், நஞ்சை புஞ்சை முதலான பூமி, குடியிருக்குமிடம், பழக்க வழக்கங்கள், உணவு, ஆடை இவற்றைக் கொண்டு குலப் பண்பாட்டைச் சோதித்தறியலாம்.*

उपस्थितस्य कामस्य प्रतिवादो न विद्यते ।
अपि निर्मुक्तदेहस्य कामरक्तस्य किं पुनः ॥ 484

*தேகப் பற்றற்றவனே விரும்பிய பொருள் அருகாமையில் வரும்போது மறுக்கமாட்டான். பற்று மிக்கவன் பற்றிக் கேட்க வேண்டுமா? (சபலமில்லாதவனைக் காண்பது அரிது).*

प्राज्ञोपसेविनं वैद्यं धार्मिकं प्रियदर्शनम् ।
मित्रवन्तं सुवाक्यं च सुहृदं परिपालयेत् ॥ 485

*அறிவு மிக்கவர்களின் தொடர்புள்ளவன், அறிவாளி, தர்ம வழி செல்பவன், அழகிய தோற்ற முள்ளவன், நண்பர் பலர் கொண்டவன், நன்கு பேசுபவன் இத்தகைய நண்பனை நல்லாதரவுடன் பேண வேண்டும்.*

दुष्कुलीनः कुलीनो वा मर्यादां यो न लंघयेत् ।
धर्मापेक्षी मृदुर्ह्रीमान् स कुलीनशताद्वरः ॥ 486

*சமுதாய நெறி மீறுதவனும் தர்ம நோக்குள்ளவனும், மென்மையும் நாணமு முள்ளவனுமான மனிதன், கெட்ட குலத்தில் பிறந்திருந்தாலும் நற் குலத்தில் பிறந்திருந்தாலும் நற்குலத்தில் பிறந்தவனை விட நூறு மடங்கு சிறந்தவன்.*

ययोश्चित्तेन वा चित्तं निभृतं निभृतेन वा ।
समेति प्रज्ञया प्रज्ञा तयोर्मैत्री न जीर्यति ॥ 487

*உள்ளத்துடன் உள்ளமும், ரகசியத்துடன் ரகசியமும் சுய அறிவுடன் சுய அறிவும் எவரிருவருள் பொருந்துகிறதோ அவர்களது நட்பு தளர்ச்சியுறுவதில்லை.*

दुर्बुद्धिमकृतप्रज्ञं छन्नं कूपं तृणैरिव ।
विवर्जयति मेधावी तस्मिन्मैत्री प्रणश्यति ॥ 488

*புதரால் மூடிய கிணறுபோல், பிறரால் எளிதில் உள்ளக்கிடக்கை அறிய முடியாதவன் கெட்ட புத்தி யுள்ளவன் சுய அறிவு வலிவடையாதவன், இத்தகையவனை அறிவாளி ஒதுக்கிவிடுவான். இவனது நட்பு கெட்டுவிடும்.*

अवलिप्तेषु मूर्खेषु रौद्रसाहसिकेषु च ।
तथैवापेतधर्मेषु न मैत्रीमाचरेद्बुधः ॥ 489

கர்வமுள்ளவன், மூடன், கொடும் செயல் புரிபவன், அவசரப்படுபவன், நெறியற்றவன், இத்தகையவர்களுடன் அறிவாளி நட்பு கொள்ளக் கூடாது.

कृतज्ञं धार्मिकं सत्यमक्षुद्रं दृढभक्तिकम् ।
जितेन्द्रियं स्थितं स्थित्यां मित्रमित्यभिवाञ्छति ॥ 490

நன்றியுணர்ந்தவன், நெறிதவறுதவன், மெய் பேசுபவன், பெருந் தன்மையுள்ளவன், அன்புமிக்கவன், புலனடக்கியவன், நேர்மையில் நிலைத்தவன் இத்தகையவனை நண்பனுகக் கோருவர்.

சிறந்த வாழ்க்கை முறை

इन्द्रियाणामनुत्सर्गो मृत्युनाऽपि विशिष्यते ।
अत्यर्थं पुनरुत्सर्गः सादयेद् दैवतानपि ॥ 491

புலன்களின் கட்டுப்பாடு யமனைவிடக் கொடூரமானது. (ஆனுல் அது மிக அவசியமானது), புலன்களை அவற்றின் விருப்பப்படி அவிழ்த்து விடுவது தேவர்களையும் தாழ்த்திவிடும். (மரணம் தானே புலன்களை ஓயச் செய்கிறது. பிற்பாடு அதனுல் துன்பமில்லை. அறிஞன் புலன்களைக் கட்டுப்படுத்துவது அவச்யம். அவற்றின் இயல்பிற்கு மாறுன செயலாவதால் துன்பம் அதிகம். கட்டுப்படுத்திய பின் பேரின்பம். புலனைக் கட்டிவிழ்த்துவிடுவது இடையறுத துன்பம் தரும்.

मार्दवं सर्वभूतानां अनसूया क्षमा धृतिः ।
आयुष्याणि बुधाः प्राहुः मित्राणां चाविमानना ॥ 492

உயிரினத்திடம் மென்மையுடன் பழகுவது, அசூயை யின்மை, பொறுமை, உறுதி, நண்பர்களை அவமதிக்காதிருப்பது (மதிப்பது) இவை ஆயுளை வளர்க்கும்.

उपनीतं सुनीतेन योऽर्थं प्रत्यानिनीषते ।
मतिमास्थाय सुदृढं तदकापुरुषव्रतम् ॥ 493

முன்னர் இழந்த பொருளை நல்ல முறையில் முனைந்து திரும்பப் பெறவிரும்புவது பெருநோக்குள்ளவனின் செயல்.

आयत्यां प्रतिकारज्ञः तदात्वे दृढनिश्चयः ।
अतीते कार्यशेषज्ञः नरोऽर्थैः न प्रहीयते ॥ 494

வருமுன் காப்பவன் (வருவதை எதிர்பார்த்துச் செயல் படுபவன்) நிகழ்வதில் நிச்சயமுள்ளவன், (உறுதியுடன் செயல்படுபவன்) கடந்ததில் இனிச் செய்ய வேண்டியதை அறிந்தவன் (அறிந்தவாறு செயல் படுபவன்) இவன் நாடியதை இழக்க மாட்டான்.

कर्मणा मनसा वाचा यदभीक्ष्णं निषेवते ।
तदेवापहरत्येनं तस्मात्कल्याणमाचरेत् ॥ 495

செயலாலும் எண்ணத்தாலும் சொல்லாலும் எதில் தொடர்ந்து ஈடுபடுகிறுனே, அதே அவனைக் கவர்கிறது. அதனுல் நல்லதிலேயே ஈடுபடவேண்டும்.

मङ्गलालंभनं योगः श्रुतमुत्थानमार्जवम् ।
भूतिमेतानि कुर्वन्ति सतां चाभीक्ष्णदर्शनम् ॥ 496

மங்கள மானதை நாடுதல், கருத்துடன் அதற்காகச் செயல் புரிதல், கல்வியறிவு, சுறுசுறுப்பு, நேர்மை, நல்லோருடன் தொடர்ந்து பழகுதல் இவை செழிப்பைத் தரும்.

अनिर्वेदः श्रियो मूलं लाभस्य च शुभस्य च ।
महान्भवत्यनिर्विण्णः सुखं चानन्तमश्नुते ॥ 497

விடாமுயற்சி (தளராமை) செல்வத்திற்கும் லாபத்திற்கும் நலத்திற்கும் தோற்றுவாய். தளர்ச்சியுறாதவன் பெருமையும் எல்லையற்ற இன்பமும் அடைகிறுன்.

नातः श्रीमत्तरं किञ्चिदन्यत् पथ्यतमं मतम् ।
प्रभविष्णोर्यथा तात क्षमा सर्वत्र सर्वदा ॥ 498

எங்கும் என்றும் எதிலும் பொறுமை என்பதைப்போல் செல்வாக்குடன் முன்னேற விரும்புபவனுக்கு செழிப்பைத் தருவதும் ஹிதமானதும் வேறொன்றில்லை.

क्षमेदशक्तः सर्वस्य शक्तिमान् धर्मकारणात् ।
अर्थानर्थौ समौ यस्य तस्य नित्यं क्षमा हिता ॥ 499

வலிவற்றவன் எல்லாவற்றையும் பொறுத்துக் கொள்ள வேண்டும். வலிவு மிக்கவன் நேர்மையை முன்னிட்டுப் பொறுத்துக் கொள்ள வேண்டும். நல்லது கெட்டது எவனுக்குச் சமமோ அவன் எதனையும் பொறுத்துக் கொள்வான். (உதாசீனன் எதனையும் பொருட்படுத்த மாட்டான்.)

यत्सुखं सेवमानोऽपि धर्मार्थाभ्यां न हीयते ।
कामं तदुपसेवेत न मूढव्रतमाचरेत् ॥ 500

எந்த இன்பத்தை நுகர்வதால் அறமும் பொருளும் குறையுறுதோ அந்த இன்பத்தை நன்கு அனுபவிக்கலாம். மூடத் தனமாக இன்பத்தை விலக்கக் கூடாது.

दुःखार्तेषु प्रमत्तेषु नास्तिकेष्वलसेषु च ।
न श्रीर्वसत्यदान्तेषु ये चोत्साहविवर्जिताः ॥ 501

துன்புற்றவர், கவனக்குறைவால் தவறிழைப்பவர், நாஸ்திகர், சோம்பேறி, புலனடக்கமில்லாதவர், ஊக்க மில்லாதவர் இவர்களிடம் செல்வம் தங்காது.

आर्जवेन नरं युक्तं आर्जवात्सव्यपत्रपम् ।
अशक्तं मन्यमानास्तु धर्षयन्ति कुबुद्धयः ॥ 502

நேர்மையுள்ளவனையும் நேர்மையின் காரணமாகத் தவறானதை — செய்யக்கூடாததைச் செய்யக் கூசுபவனையும் செயலாற்றலில்லாதவரென நினைத்து மதிகெட்டவர் அவமதிப்பர்.

अत्यार्यमतिदातारं अतिशूरमतिव्रतम् ।
प्रज्ञाभिमानिनं चैव श्रीर्भयान्नोपसर्पति ॥ 503

மிக்க நேர்மையாளன், பெருங் கொடையாளன், மிக்க சூரன், கடும் நோன்பிருப்பவன், தானே அறிவாளியெனப் பெருமை படுத்திக் கொள்பவன் அவர்களிடம் பயந்து செல்வம் அணுகாது.

न चातिगुणवत्स्वेषा नात्यन्तं निर्गुणेषु च ।
नैषा गुणान्कामयते नैर्गुण्यान्नानुरज्यते ॥
उन्मत्ता गौरिवान्धा श्रीः क्वचिदेवाव तिष्ठते ॥ 504

பித்துப் பிடித்ததுபோல் கண் தெரியாமல் இருப்பு கொள்ளாமல் சுற்றி அலைந்து எங்கோ தங்கி நிற்கிற பசுபோல் செல்வம் நிலை தரிக்காமல் எங்கோ தங்கும். மிக்க குணமுள்ளவர்களிடத்திலும் இராது. குணமே இல்லாதவரிடத்திலும் இராது. மிகச் சிறந்த குணங்களை நாடாது. குணமேயற்றவரிடம் பற்று கொள்ளாது.

अग्निहोत्रफलाः वेदाः, शीलवृत्तफलं श्रुतम् ।
रतिपुत्रफला नारी दत्तभुक्तफलं धनम् ॥ 505

வேதமோதியதன் பயன் அக்கினி வழிபாடே. கல்வியறிவின் பயன் ஒழுக்கமே. பெண்ணால் பயன் இன்பம் தருதலும் பிள்ளைப் பேறும். செல்வத்தால் பயன் தானமும் சுகம் அனுபவித்தலும்.

अधर्मोपार्जितैरर्थैः यः करोत्यौर्ध्वदैहिकम् ।
न स तस्य फलं प्रेत्य भुंक्तेऽर्थस्य दुरागमात् ॥ 506

நேர்மையின்றி பெரும் பொருள் ஈட்டியவன், மறுமையில் இதனால் துன்பம் விளையுமோ எனப் பயந்து இப்பிறவியில் செய்கிற நற்செயல்களை நேர்மையற்ற வழியில் பெற்ற பொருள் கொண்டு செய்வதால் பலன் வராது.

நல்லோருடைய வாழ்க்கை

कान्तारे वनदुर्गेषु कृच्छ्रास्वापत्सु संभ्रमे ।
उद्यतेषु च शस्त्रेषु नास्ति सत्त्ववतां भयम् ॥ 507

*பரந்த வெளியில், புகமுடியாத காட்டில், பெரும் விபத்துகளில், பரபரப்பில், ஆயுதம் வீசுகிற நெருக்கடியில், மனவலிவு உள்ளவருக்கும் பயம் இல்லை.*

उत्थानं संयमो दाक्ष्यं अप्रमादो धृतिः स्मृतिः ।
समीक्ष्य च समारंभो विद्धि मूलं भवस्य तु ॥ 508

*சுறுசுறுப்பு, அடக்கம், திறமை, கவனமிகுதி, உறுதி, நினைவாற்றல், கருத்தூன்றிக் கவனித்துப் பின் செயல் தொடக்கம் இவை செழிப்பிற்கு வேராகும்.*

तपोबलं तापसानां ब्रह्म ब्रह्मविदां बलम् ।
हिंसा बलमसाधूनां क्षमा गुणवतां बलम् ॥ 509

*தவம் புரிபவருக்குத் தவமே பலம். வேதமறிந்தவருககு வேதமே பலம். துஷ்டருக்குத் துன்புறுத்துவது பலம். குணவான்களுக்குப் பொறுமை பலம்.*

अष्टौ तान्यव्रतघ्नानि आपो मूलं फलं पयः ।
हविर्ब्राह्मणकाम्या च गुरोर्वचनमौषधम् ॥ 510

*உபவாஸ விரதத்தை இந்த எட்டும் கெடுக்காது, நீர், கிழங்கு, பழம், பால், நெய், மருந்து இவற்றைச் சாப்பிடுதல், ஓர் அந்தணரின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்காகவும் குருவின் சொல்படியும் சாப்பிடுவதும் இவை.*

न तत्परस्य सन्दध्यात् प्रतिकूलं यदात्मनः ।
संग्रहेणैव धर्मः स्यात् कामादन्यः प्रवर्तते ॥ 511

*தனக்குஎது அநுகூலமாகாததோ அதனை பிறருக்குச் செய்யக் கூடாது என்பதே தர்மத்தைப் பற்றிய சுருக்கம். தர்மமல்லாதது ஆசையின் விளைவால் நேர்கிறது.*

अक्रोधेन जयेत्क्रोधं असाधुं साधुना जयेत् ।
जयेत्कदर्यं दानेन जयेत्सत्येन चानृतम् ॥ 512

கோபமின்மையால் கோபத்தை வெல்லலாம். அவ்வாறே நன்னடத்தையின் மூலம் நடத்தை கெட்டவனை வழிக்குக் கொணரலாம். தானத்தின் மூலம் கஞ்சனையும் மெய்யால் பொய்யையும் வெல்லலாம்.

स्त्रीधूर्तकेऽलसे भीरौ चण्डे पुरुषमानिनि ।
चोरे कृतघ्ने विश्वासो न कार्यो न च नास्तिके ॥ 513

பெண்களிடம் தவறாக நடப்பவன், சோம்பேறி, பயந்தவன், கொடுமையுள்ளவன், தன் ஆண்மையைப் பெரிதும் மதிப்பவன், திருடன், செய்நன்றி கொன்றவன். நாஸ்திகன் இவர்களிடத்தில் நம்பிக்கை வைக்காதே.

अभिवादनशीलस्य नित्यं वृद्धोपसेविनः ।
चत्वारि संप्रवर्धन्ते कीर्तिरायुर्यशो बलम् ॥ 514

முதிய பெரியோர்களைத் தினமும் வணங்கிப் பணிவிடை செய்பவனுக்குப் பாராட்டு ஆயுள், புகழ், வலிவு, இவை வளர்ந்து கொண்டே இருக்கும்.

अतिक्लेशेन येऽर्थाः स्युः धर्मस्यातिक्रमेण च ।
अरेर्वा प्रणिपातेन मा स्म तेषु मनः कृथाः ॥ 515

மிகவும் வருந்தியும் நேர்மையை மீறியும் எதிரியிடம் பணிந்தும் பெறக் கூடியவற்றில் மனம் வைக்கக் கூடாது.

பயன் தரா நிலைகள்.

अविद्यः पुरुषः शोच्यः शोच्यं मैथुनमप्रजम् ।
निराहाराः प्रजाः शोच्याः शोच्यं राष्ट्रमराजकम् ॥ 516

கல்வியறிவற்ற மனிதனும், பிள்ளைப்பேறுக்குப் பயன்படாத உடலுறவும், உணவிற்கு வழியற்ற மக்களும் அரசனற்ற நாடும் வருந்தத்தக்கவை.

அசூயையும் மரணமும் ஒன்றே. வரம்பு மீறிய பேச்சு செல்வத்தைக் குலைக்கும். குருவிற்குப் பணிவிடையின்மை, வேகம், தற்புகழ்ச்சி இவை கல்விக்கு எதிரிகள்.

आलस्यं मदमोहौ च चापलं गोष्ठिरेव च।
स्तब्धता चाभिमानित्वं तथाऽत्यागित्वमेव ॥
एते वै सप्त दोषाः स्युः सदा विद्यार्थिनां मताः॥ 529

சோம்பல், கர்வம், மதிமயக்கம், சபலம், வீண் பொழுது போக்கக் கூடுவது, பிடிவாதம், தன்னலம் கருதுதல், விட்டுக் கொடுக்காமை, இவை ஏழும் கல்வி பெறுபவர்களிடம் இருக்கக் கேடு தரும்.

सुखार्थिनां कुतो विद्या नास्ति विद्यार्थिनां सुखम् ।
सुखार्थी चेत्त्यजेद्विद्यां विद्यार्थी वा त्यजेत्सुखम् ॥ 530

சுகம் நாடுபவருக்குக் கல்வி வராது. கல்வியை நாடுபவருக்குச் சுகம் இல்லை. சுகத்தை நாடுபவன் கல்வியையும் கல்வியை நாடுபவன் சுகத்தையும் விடவேண்டும்.

नाग्निस्तृप्यति काष्ठानां नापगानां महोदधिः ।
नान्तकः सर्वभूतानां न पुंसां वामलोचना ॥ 531

நெருப்பு விறகால் திருப்தி பெறாது. கடல் ஆறுகளாலும் யமன் உயிரினங்களாலும் பெண்கள் ஆண்களாலும் திருப்தியடைய மாட்டார்கள் (விறகு கிடைக்க நெருப்பு வளரும். இந்த விறகளவு போதும் என என்றும் கருதாது என்பது போல்)

आशा धृतिं हन्ति समृद्धिमन्तकः क्रोधः श्रियं हन्ति यशः कदर्यता।
अपालनं हन्ति पशूंश्च राजन् एकः क्रुद्धो ब्राह्मणो हन्ति राष्ट्रम्॥ 532

ஆசை உறுதியைக் குலைக்கும். மரணம் நிறைவை அழிக்கும். கோபம் செல்வத்தையும் கஞ்சத்தனம் புகழையும் பராமரிப்பின்மை கால் நடைகளையும் அழிக்கும். கோபமிக்க ஒரு அந்தணன் நாட்டையே அழிப்பான்.

# विदुरनीतिः

## अष्टमोऽध्यायः

# விதுர நீதி

## எட்டாவது அத்தியாயம்

நல்லோர் வாழ்க்கை முறை

विदुरः उवाच- *விதுரர் கூறுகிறார்*

योऽभ्यर्चितः सद्भिरसज्जमानः करोत्यर्थं शक्तिमहापयित्वा ।
क्षिप्रं यशस्तं समुपैति सन्तं अलं प्रसन्ना हि सुखाय सन्तः ॥525

*நல்லோர்களால் பாராட்டப்பட்டவன், சக்தியை இழக்காமல் பற்றற்று (விருப்பு வெறுப்பற்று)ச் செயல் புரிபவன், இவனைப் புகழ் தானே சென்றடையும். நல்லோர்கள் அருளுடன் இவனுக்கு நன்மை வரும்படி கோருவர்.*

महान्तमप्यर्थमधर्मयुक्तं यः सन्त्यजत्यनपाकृष्ट एव ।
सुखं स दुःखान्यवमुच्य शेते जीर्णां त्वचं सर्प इवावमुच्य ॥526

*பெரும் பொருளையும் நேர்மையற்றுப் பெற்றதாயின் அதனுல் ஈர்க்கப்படாமல் விடுபவன், பாம்பு தோலை உரிப்பதுபோல் எளிதில் துக்கத்திலிருந்து விடுபட்டு சுகத்துடன் அமைந்திருப்பான்.*

अनृतेन समुत्कर्षः राजगामि च पैशुनम् ।
गुरोश्चालीकनिर्बन्धः समानि ब्रह्महत्यया ॥ 527

*நேர்மையற்ற வழியில் முன்னேற்றம், அரசர் காதுகளில் விழும்படி தூஷிப்பது, குருவிடம் முறையற்ற நிர்ப்பந்தம் இவை பிரும்மஹத்தி பாபத்திற்குச் சமம்.*

असूयैकपदं मृत्युः अतिवादः श्रियो वधः ।
अशुश्रूषा त्वरा श्लाघा विद्यायाः शत्रवः त्रयः ॥ 528

நண்பனைப் பண உதவியால் வென்றவன், எதிரிகளைப் போரில் வென்றவன், மனைவியை நல்லுணவால் வென்றவன் இவனது வாழ்க்கைமுறையே பயனுள்ளது.

**பேராசை வேண்டாம்**

**सहस्रिणोऽपि जीवन्ति जीवन्ति शतिनस्तथा ।**
**धृतराष्ट्र विमुञ्चेच्छां न कथञ्चिन्न जीव्यते ॥** 522

*ஆயிரம் பணமுள்ளவனும் வாழ்கிறான். நூறுள்ளவனும் வாழ்கிறான். எவனும் எப்படியாவது வாழாமல் இல்லை. திருதராஷ்டிரரே! ஆசையை விடும்.*

**यत्पृथिव्यां व्रीहियवं हिरण्यं पशवः स्त्रियः ।**
**नालमेकस्य तत्सर्वं इति पश्यन्न मुह्यति ॥** 523

*உலகிலுள்ள அனைத்து நெல் யவை முதலிய தானியம், தங்கம், கால் நடைகள், பெண்கள், இவைகளை ஒருவனுக்குக் கொடுத்தாலும் அவனது திருப்திக்குப் போதாது. அதனை உணர்பவன் கலங்க மாட்டான்.*

**राजन्भूयो प्रब्रवीमि पुत्रेषु सममाचर ।**
**समता यदि ते राजन् स्वेषु पाण्डुसुतेषु वा ॥** 524

*உன் பிள்ளைகளும் பாண்டுவின் பிள்ளைகளும் ஸமமானவர் என்ற எண்ணம் இருந்தால், பாண்டவர்களிடத்திலும் ஸமமாகப் பழகுவீர். இதனைத் திரும்பத்திரும்பக் கூறுகிறேன்.*

★ ★ ★

अध्वा जरा देहवतां पर्वतानां जलं जरा ।
असंभोगो जरा स्त्रीणां वाक्छल्यं मनसो जरा ॥
अनध्वा वाजिनां तद्वत् पटानामातपो जरा ॥ 517

*அதிக வழிநடை மனிதனுக்கு முதுமை தரும் (தேய்வு உண்டாக்கும்). மலைகளுக்கு நீரோட்டமும், பெண்களுக்கு உடலுறவின்மையும், மனத்திற்குக் குத்துகிற பேச்சும் குதிரைகளுகக்கு ஓட்டமின்மையும், துணிகளுக்கு வெயிலும் தேய்விற்குக் காரணமாகும்.*

अनाम्नायमला वेदाः ब्राह्मणस्याव्रतं मलम् ।
मलं पृथिव्या बाह्लीकाः पुरुषस्यानृतं मलम् ॥ 518

कौतूहलमला साध्वी विप्रवासमलाः स्त्रियः ।
सुवर्णस्य मलं रूप्यं रूप्यस्यापि मलं त्रपु ।
ज्ञेयं त्रपुमलं सीसं सीसस्यापि मलं मलम् ॥ 519

*வேதத்திற்கு ஓதாமலிருப்பது அழுக்கு. அந்தணனுக்கு விரதமில்லாதிருப்பதும், பூமிக்கு உவர்மண்ணும், (கொடிய பழக்கங்களுள்ள பால்ஹிகதேசம்) மனிதனுக்குப் பொய்யும் அழுக்கு. பதிவிரதைக்கு ஆவல் மிகுதியும் (சபலமும்) பெண்களுக்குக் கணவனின் பிரிவும், தங்கத்திற்கு வெள்ளியும், வெள்ளிக்கு ஈயமும் ஈயத்திற்குக் காரீயமும் அழுக்கு. காரீயத்திற்கு அதுவே அழுக்கு.*

न स्वप्नेन जयेन्निद्रां न कामेन जयेत् स्त्रियः ।
नेन्धनेन जयेदग्निं न पानेन सुरां जयेत् ॥ 520

*படுப்பதால் தூக்கத்தையும் உடலுறவால் பெண்களையும் விறகுக் கட்டையால் நெருப்பையும் கள் குடியால் கள்குடிப்பழக்கத்தையும் அடக்கி வெல்லமுடியாது.*

यस्य दानजितं मित्रं शत्रवो युधि निर्जिताः ।
अन्नपानजिता दाराः सुफलं तस्य जीवितम् ॥ 521

अजाश्च कांस्यं रजतं च नित्यं मध्वाकर्षः शकुनिः श्रोत्रियश्च।
वृद्धो ज्ञातिरवसन्नः कुलीनः एतानि ते सन्तु गृहे सदैव॥ 533

*பெண் ஆடுகள், வெண்கலம், வெள்ளி, தேன், விஷமுறிவு மருந்து, பறவை, வேதமோதிய அந்தணன், வயது முதிர்ந்த உறவினன், ஏழ்மைமிக்க நற்குலத்தவன் இவர்கள் உன் வீட்டில் எப்போதும் இருக்கட்டும்.*

अजोक्षा चन्दनं वीणा आदर्शो मधुसर्पिषी ।
विषमौदुंबरं शङ्खः स्वर्णनाभोऽथ रोचना ॥ 534

गृहे स्थापयितव्यानि धन्यानि मुनिरब्रवीत्॥
देवब्राह्मणपूजार्थं अतिथीनां च भारत ॥ 535

*பெண் ஆடு, எருது, சந்தனம், வீணை, கண்ணாடி, தேன், நெய், இரும்பு, தாமிரம், சங்கு, சாளக்கிராமம், கோரோசனை இவை தெய்வம் அந்தணர் அதிதி இவர்களை வழிபடுகிறவர் வீட்டில் வைக்கத் தக்க மங்களமான பொருள்கள்.*

इदं च त्वां सर्वपरं ब्रवीमि पुण्यं पदं तात महाविशिष्टम् ।
न जातु कामान्न भयान्न लोभात् धर्मं जह्याज्जीवितस्यापि हेतोः॥536

*இதனை எல்லாவற்றிற்கும் மேலானதாகச் சொல்வேன். புனிதமானது. மிகச் சிறந்தது. "ஆசைமிகுதியாலோ பயத்தாலோ பேராசையாலோ உயிரிழப்பதாயினும் தர்மத்தைக் கைவிடக்கூடாது."*

नित्यो धर्मः सुखदुःखे त्वनित्ये जीवो नित्यो हेतुरस्य त्वनित्यः।
त्यक्त्वाऽनित्यं प्रतितिष्ठस्व नित्ये सन्तुष्य सन्तोषपरा हि सन्तः॥537

*"தர்மம் நிலைத்தது. சுகமும் துக்கமும் நிலையற்றவை. ஜீவாத்மா நிலைத்தவன், அவனை இவ்வாறு கட்டுப்படுத்தியுள்ள அஞ்ஞானம் நிலையற்றது. நிலையற்றதைக் கைவிட்டு நிலைத்ததில் நிலை பெறுவாய். அதனால் திருப்தி பெறுவாய். நல்லோர் இந்த ஆத்ம திருப்திக்காகவே வாழ்வர்."*

மரணத்திற்குப் பின்

महाबलान् पश्य महानुभावान् प्रशास्य भूमिं धनधान्यपूर्णाम् ।
राज्यानि हित्वा विपुलांश्च भोगान् गतान्नरेन्द्रान् वशमन्तकस्य ॥
538

பெருமதிப்பும் பெரு வலிவும் பெற்றவர்களைக் காண்பீர். தனமும் தானியமும் நிறைந்த பூமியை ஆண்டு, அந்த நாடுகளை இழந்து அனுபவித்த போகங்களையும் துறந்து யமன் வசம் சேர்ந்த பேரரசர்களைக் காண்பீர்.

मृतं पुत्रं दुःखपुष्टं मनुष्याः उत्क्षिप्य राजन् स्वगृहान्निर्हरन्ति ।
ते मुक्तकेशाः करुणं रुदन्ति चितामध्ये काष्ठमिव क्षिपन्ति ॥
539

மனிதர் தானே மிகக் கஷ்டத்துடன் வளர்ந்தத பிள்ளை இறந்ததும், வீட்டிற்கு வெளியே கொண்டு சென்று தலைவிரி கோலத்தில் அழுது எரிகிற சிதையில் கட்டையோடு கட்டையாக வைத்து விடுகிறார்கள்.

अन्यो धनं प्रेतगतस्य भुंक्ते वयांसि चाग्निश्च शरीरधातून्।
द्वाभ्यां ह्ययं सह गच्छत्यमुत्र पुण्येन पापेन च वेष्टमानः ॥ 540

மறைந்தவனின் செல்வத்தை எவனோ அனுபவிப்பான். கழுகுகளும் நெருப்பும் இவனது உடலை அனுபவிக்கின்றன. தான் செய்த நல்வினையும் தீவினையும் சூழ இவன் வேறுலகிற்குச் செல்கிறான்.

उत्सृज्य विनिवर्तन्ते ज्ञातयः सुहृदः सुताः ।
अपुष्पानफलान् वृक्षान् यथा तात पतत्रिणः ॥ 541

अग्नौ प्रास्तं तु पुरुषं कर्मान्वेति स्वयं कृतम् ।
तस्मात्तु पुरुषो यत्नाद्धर्मं सञ्चिनुयाच्छनैः ॥ 542

அவனை அங்கேயே விட்டுவிட்டு உறவினர், நண்பர், புதல்வர் அனைவரும் பூத்த காய்க்காத மரத்தை விட்டுச்

செல்கிற பறவைகள்போல் பிரிந்து செல்கின்றனர். அக்னியிலிட்ட ஜீவனை அவன் செய்த வினை மாத்திரம் தொடர்கிறது. அதனால் சிறுகச் சிறுக தர்மம் சேமிப்பதில் மனிதன் ஈடுபட வேண்டும்.

अस्माल्लोकादूर्ध्वममुष्य चाधो महत्तमस्तिष्ठति ह्यन्धकारम् ।
तद्वै महामोहनमिन्द्रियाणां बुध्यस्व मा त्वां प्रलभेत राजन् ॥ 543

இந்த உலகிற்கு மேலும் கீழும் பார்வையை மறைக்கிற பேரிருள் பரவியுள்ளது. அது மதிமயக்கம் தரும். அதன் வசமாகா திருக்கத் தன்னிலை உணர்வீர். (உடலழிந்தவன் பின் எந்த நிலையை அடைவான் என்பது முன் அறிய முடியாத புதிர். தன் நிலை தாழாதபடி வாழும்வகை அறிவீர்.)

इदं वचः शक्ष्यसि चेद्यथावत्
निशम्य सर्वं प्रतिपत्तुमेव।
यशः परं प्राप्स्यसि जीवलोके
भयं न चामुत्र न चेह तेऽस्ति ॥ 544

இந்த சொற்களை நன்கு கருத்தூன்றி கவனித்து உண்மையாக அதன்படி நடக்க முற்பட்டீர் எனில் இவ்வுலகில் புகழ் பெறுவீர். இவ்வுலகிலும் மறுமையிலும் சிறிதும் பயத்தை உணரமாட்டீர்.

आत्मा नदी भारत पुण्यतीर्था सत्योदका धृतिकूला दयोर्मिः ।
तस्यां स्नातः पूयते पुण्यकर्मा पुण्यो ह्यात्मा नित्यमलोभ एव ॥ 545

ஆத்மா எனும் பெரும் ஆறு. புண்ணியமே அதில் இறங்கு துறை. உண்மையே அதில் ஓடும் நீர். உறுதி அதன் கரை. தயை அதன் அலை. புண்யம் செய்தவன் அதில் மூழ்கித் தூய்மை பெறுகிறான். பற்றும் பேராசையுமற்ற அந்த ஆத்மா மிகப் புனிதனாவான்.

कामक्रोधग्राहवतीं पञ्चेन्द्रियजलां नदीम् ।
नावं धृतिमयीं कृत्वा जन्मदुर्गाणि सन्तर ॥ 546

(மற்றோர் ஆறு உள்ளது நீராடத்தகாது. தாண்டத்தக்கது). ஆசையும் கோபமும் முதலையாக, இந்திரியங்களின் நாட்டமே நீராக உள்ள அந்த ஆற்றை உறுதி (புலனடக்கம்) என்ற ஓடத்தைக் கொண்டு கடந்து பிறப்பிறப்பென்ற வெள்ளப் பெருக்கைத் தாண்டுவீர்.

प्रज्ञावृद्धं धर्मवृद्धं स्वबन्धुं विद्यावृद्धं वयसा चापि वृद्धम्।
कार्याकार्ये पूजयित्वा प्रसाद्य यः संपृच्छेन्न स मुह्येत्कदाचित्॥ 547

அறிவால், தர்மத்தால், கல்வியறிவால், வயதால், முதிர்ந்தவனை வணங்கி வழிபட்டுச் செய்வது செய்யத்தகாதது கேட்டறிபவன் எப்போதும் கலங்கமாட்டான்.

धृत्या शिश्नोदरं रक्षेत् पाणिपादं च चक्षुषा।
चक्षुः श्रोत्रे च मनसा मनो वाचं च कर्मणा॥ 548

உறுதியுடனிருப்பதால் காமத்தையும் வயிற்றையும் அடக்க வேண்டும். கண்ணால் கால்களையும் கைகளையும் முறை தவறாதபடி காக்க வேண்டும். கண்ணையும் காதையும் மனத்தாலும், மனத்தையும் வாக்கையும் செயலாலும் கட்டுப்படுத்த வேண்டும்.

नित्योदकी नित्ययज्ञोपवीती नित्यस्वाध्यायी पतितान्नवर्जी ।
सत्यं ब्रुवन्गुरवे कर्म कुर्वन् न ब्राह्मणश्च्यवते ब्रह्मलोकात्॥ 549

தினமும் நீராடுபவனும், எப்போதும் பூணூலை வேள்விக்காகத் தரிப்பவனும், ஓயாமல், வேதம் ஓதுபவனும் தாழ்ந்த உணவை ஏற்காதவனும், உண்மை பேசுபவனும், குருவிற்காகச் செயல் புரிபவனுமான அந்தணன் பிரஹ்ம நிலையைக் கட்டாயம் அடைவான்.

अधीत्य वेदान् परिसंस्तीर्य चाग्नीन् इष्ट्वा यज्ञैः पालयित्वा प्रजाश्च।
गोब्राह्मणार्थे शस्त्रपूतान्तरात्मा हतः संग्रामे क्षत्रियवत्स्वर्गमेति॥ 550

வேதமோதி, அக்கினியைச் சுற்றி தர்ப்பை பரப்பி வளர்த்து வேள்விகள் புரிந்து, மக்களைக் காப்பாற்றி பசுக்களையும்

அந்தணரையும் காப்பாற்றி ஆயுதம் ஏந்தி போர்புரிந்து உயிரிழக்கிற க்ஷத்திரியன் ஸ்வர்க்கம் செல்கிறான்.

वैश्योऽधीत्य ब्राह्मणान्क्षत्रियांश्च धनैः काले संविभज्याश्रितांश्च ।
त्रेतापूतं धूममाघ्राय पुण्यं प्रेत्य स्वर्गे दिव्यसुखानि भुंक्ते ॥ 551

வைசியனும், வேதமோதி, அந்தணர்களுக்கும் க்ஷத்திரியர்களுக்கும் அண்டியவர்களுக்கும் பொருளுதவி பகிர்ந்தளித்துப் புனித வேள்விப் புகையை முகர்ந்து மறைந்த பின் ஸ்வர்க்கத்திலும் இன்ப மனுபவிப்பான்.

ब्रह्म क्षत्रं वैश्यवर्णं च शूद्रः क्रमेणैतान् न्यायतः पूजयानः ।
तुष्टेष्वेतेषु अव्यथो दग्धपापः त्यक्त्वा देहं स्वर्गसुखानि भुंक्ते ॥ 552

மூவர்ணத்தினரையும் முறைப்படி நேர்மையுடன் பணியால் மகிழ்வித்து, அவர்களின் மகிழ்ச்சியில் தன் துக்கங்கள் தீர, பாபம் சாம்பலாக, நாலாம் வர்ணத்தவன் மறுமையில் ஸ்வர்க்க ஸுகத்தை அனுபவிப்பான்.

चातुर्वर्ण्यस्यैष धर्मस्तवोक्तः हेतुं चानुब्रुवतो मे निबोध ।
क्षात्राद्धर्माद्धीयते पाण्डुपुत्रः तं त्वं राजन् राजधर्मे नियुंक्ष्व ॥ 553

நான்கு வர்ணத்தினருக்கும் உள்ள கடமையைச் சொன்ன தன் காரணம் இதுவே. பாண்டுவின் புதல்வன் தர்ம புத்திரன் க்ஷத்திரியக் கடமைகளிலிருந்தும் நழுவியிருக்கிறான். அவனை அரசரது கடமையை நிறைவேற்றும்படி பணித்திடுவீர்.

धृतराष्ट्र उवाच - திருதராஷ்டிரர் கூறுகிறார்

एवमेतद्यथा त्वं मा मनुशाससि नित्यदा ।
ममापि च मतिः सौम्य भवत्येवं यथाऽत्थ माम् ॥ 554

सा तु बुद्धिः कृताप्येवं पाण्डवान्प्रति मे सदा ।
दुर्योधनं समासाद्य पुनर्विपरिवर्तते ॥ 555

न दिष्टमभ्यतिक्रान्तुं शक्यं भूतेन केनचित् ।
दिष्टमेव ध्रुवं मन्ये पौरुषं तु निरर्थकम् ॥ 556

*ஐயனே! நீ எப்போதும் வழிகாட்டுகிற முறையே சிறந்தது. அது அப்படித் தான் இருக்கும். நீ கூறியபடி நடப்பது தான் நல்ல தென எனது கருத்தும் கூட. பாண்டவர்களைப் பற்றி நினைக்கும்போது இந்த எண்ணம் வலிவடைகிறது. ஆனால் துரியோதனனைக் காண்கிறபோது முற்றிலும் மாறிவிடுகிறது. எவனும் எப்போதும் விதியை மீற இயலாது. விதியே வலிவு மிக்கது. மனிதமுயற்சி அதன் எதிரே பயனற்றுப் போகிறது.*